# பிதர்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

# வாவ்! ரோ தாஜ்மஹால் டீ!

மியூஸிக் அகாடமி நிரம்பி வழிந்தது. உள்ளே கிரீன் ரூமில் விரித்த ஜமுக்காளத்தில் ஜம்மென சப்பணமிட்டு ஜாகிர் உசைன். எதிரே தபலா. 'எவர்சில்வர் சுத்தி'யால் தட்டி சுருதி சேர்த்துக் கொண்டிருந்தார். பக்கத்தில் கடம். அதன் பின்னால் 'விக்கு' விநாயகராம். விரல்கள் கடத்தின் மீது விளையாடியபடி முன்னோட்டம் பார்த்துக் கொண்டிருந்தன.

சுருதி சேர்ப்பு முடிந்ததும், விக்கு, ஜாகிரிடம், ஸ்நேகமாய், 'என்ன வாசிக்கலாம்?' என்று

கல்கி இண்டர்நெட் முகவரி: www.kalkiweekly.com
ஈ மெயில்: kalki@md2.vsnl.net.in

கேட்க, "நான் தபலா. இதில் எந்த சந்தேகமும் எனக்கில்லை" என்று ஜோக்கடிக்க, கூடியிருந்த சகலரும் 'கொல்'லென்று சிரித்தனர்.

குடிக்க ஏதாவது என்று ஒருவர் கேட்டதும், விக்கு, 'காபி' என்றார். ஜாகிர், 'எனக்கு டீ' என்றார். "இங்கே 'வாவ்' சொல்ல தாஜ்மெஹல் டீ கிடைக்காது" என்றதும், சிரித்தபடி, 'பரவாயில்லை' என்றார். டபரா செட்டில் 'டீ' வர, 'இது டீ தானே? வெடிகுண்டு ஏதுமில்லையே' என்று ஜோக்கடித்து விட்டு, 'இதை எப்படிக் குடிப்பது? பிளீஸ் ஹெல்ப் மீ!' என்றதும், கேஷுவலாய், டபராவைத் தலைகீழாய்க் கவிழ்த்து, நீக்கி விட்டு டீ தம்ளரைக் கொடுத்த போது, கண்களில் இலேசான ஆச்சரியம்.

ஜாகிர் கச்சேரி செய்வதை நேரில் பார்க்க வேண்டுமே! மனுஷர் ரொம்ப அனுபவித்து வாசிக்கிறார். முகத்தில் சந்தோஷ நுரை சர்ப் அல்ட்ராவாய்ப் பொங்கி வழிகிறது. மற்றவர்கள் வாசிக்கிற போதும், ரசித்து, தாளம் போட்டுக் கைதட்டி ஊக்கப்படுத்துவது...

ஒரு மணி நேரம். கச்சேரி முடிந்த போது, 'சே! இன்னும் கொஞ்சம் வாசிக்கக் கூடாதா என்று அரங்கமே ஏக்கப் பெருமூச்சு விட்டது. திரை இறங்கியதும், மொத்த கூட்டமும், மேடையில் ஏறியது. சித்ரா விஸ்வேஸ்வரன், தனஞ்செயன் தம்பதி, மாஸ்டர் சஷாங், அட... நடிகை ஸ்ரீப்ரியா! ஜாகிருக்கு ஆட்டோகிராப் போட்டு மாளவில்லை. இந்த ரேட்டில் போனால் தபலா விரல்கள் சோர்ந்து போகாதோ!

— பாரதி

படம் : ரவிசங்கரன்



ஒரு வெயில் கொளுத்தும் நண்பகலில் சென்னை வள்ளுவர் கோட்டம் சிக்னலில் பச்சை விழுந்தவுடன், சீறிப் புறப்பட்ட வாகனங்களில் அந்த ஆட்டோ ரிக்ஷாவும் ஒன்று. பதிவு எண் : TN-09-W-3027. ஆட்டோவின் பின்புறம் எழுதப்பட்டிருந்த வாசகங்கள் நம் கவனத்தைக் கவர்ந்தன. "தாயிற் சிறந்த கோவிலுமில்லை; தாலாட்டிற் சிறந்த பாடலுமில்லை"

அதன் கீழே, "என் தாயின் நினைவாக தினம் ஒரு சவாரி இலவசம்!"

ஆர்வம் உந்தியதால், அந்த ஆட்டோவை நிறுத்தினோம். (பயணிகள் யாரும் இல்லை) டிரைவர் செல்வராஜிடம் விசாரித்தபோது, சொன்னார்:

"நான் அம்பத்தூரில் சைக்கிள் தொழிற்சாலையில் வேலை பார்த்து வந்தேன். கம்பெனிக்கு நஷ்டம் வரவே, என் போன்ற பல தொழிலாளர்களை செட்டில்மெண்ட் செய்து வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள். அடுத்து பிழைப்புக்கு என்ன வழி? என்ற கேள்வி என் முன்னே எழுந்தபோது, என் அம்மா விட்டாபாய், "செட்டில்மெண்ட்டுல கிடைச்ச பணத்துக்கு ஒரு ஆட்டோ வாங்கி ஓட்டு" என்று கூறினார். நானும் அம்மா சொன்னபடியே ஆட்டோ வாங்கி, கடந்த அஞ்சு வருஷங்களாக ஓட்டிக் கொண்டிருக்கிறேன்.

"கடந்த மார்ச் மாதம் என் அம்மா இறந்து போனார். என் அம்மாவுக்கு என்னையும் சேர்த்து மூணு பிள்ளைகள்; மூணு பெண்கள். ஆனாலும், அவருக்கு உயர்ரத்த அழுத்தமும், சர்க்கரை வியாதியும் வந்து அவதிப்பட்டபோது, தனியார் ஆஸ்பத்திரியில் கொஞ்ச நாள் வைத்தியம் பார்த்து விட்டு, வசதியில்லாத காரணத்தால், ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்த்தோம். ஆஸ்பத்திரியில் பல நாட்கள், நான் இரவு, பகல் கண் விழித்து கூடவே இருந்தேன். ஆனாலும் ஒரே மாதத்தில் இறந்து போனார். அவரது சடலத்தைக் கூட ஆஸ்பத்திரியிலிருந்து, இரண்டாயிரம், மூவாயிரம் கொடுத்து காரில் கொண்டு வர முடியாத சூழ்நிலை. என் உடன் பிறப்புகள் உட்கார்ந்து கொள்ள, அவர்கள் மடியிலேயே தாயின் உடலைக் கிடத்தி, ஆட்டோவில் எடுத்துக் கொண்டு வீட்டுக்கு வந்தோம்.

நான் இந்த ஆட்டோவை வாங்கினவுடன், முதல் சவாரியாக, என் மனைவி, குழந்தைகளை அழைத்துப் போகாமல், என் அம்மாவைத்தான் அழைத்துக் கொண்டு போனேன். அவரது கடைசிப் பயணமும் இந்த ஆட்டோவிலேயே முடிந்தது.

"என் அம்மாவின் மரணத்தைத் தொடர்ந்து, அவரது நினைவாக ஏதாவது நல்ல காரியம் செய்ய நினைத்தேன். தினம் ஒரு சவாரிக்குப் பணம் வாங்காமல், இலவசமாய் அழைத்துச் செல்வது என்று முடி




• செல்வராஜ்

# தினமும் ஒரு சவாரி இலவசம்!

வெடுத்தேன். இன்றளவும் செய்து கொண்டிருக்கிறேன்."

"உங்கள் இலவச சவாரிக்கு பொது மக்களின் ரியாக்ஷன் என்ன?"

''முதலில் நம்பவில்லை. இப்போ இலவசம்னு சொல்லிட்டு, இறங்குகிற போது, இருபதைக் கொண்டா, முப்பதைக் கொண்டான்னு சொல்லுவீங்க! ஆட்டோக் காரங்களைப் பத்தித் தெரியாதா?'ன்னு பேசுவாங்க! நான், என் தாயின் நினைவா செய்யறதா சொன்னாக் கூட நம்ப மாட்டாங்க. ஒருத்தரோட ஐடியாப்படி, 'என் தாயின் நினைவாக, தினமும் ஒரு சவாரி இலவசம்'னு ஆட்டோ பின்னாடியே எழுதி வெச்சேன். அதன்பின், யாராவது நம்பலைன்னா, 'நீங்க வேணும்னா, ஆட்டோ பின்னாடி எழுதி வெச்சிருக்கிறதைப் பாருங்கன்னு' சொல்லுவேன். ஆனாலும், இன்னமும் சில பேர், என் நல்லெண்ணத்தைப் புரிஞ்சிக்காம, 'வீணா தகராறு பண்ணாதே! போலீஸ்ல ரிப்போர்ட் பண்ணிடுவேன்'னு மிரட்டுவாங்க."

"ஒரு சவாரி இலவசம்னா, எத்தனை தூர சவாரியானாலும் இலவசம்தானா?"

"தி.நகர்ல ஏறி, தாம்பரம் போகணும்னா, இலவசமா கட்டுப்படியாகுமா? பத்து, பதினைஞ்சு ரூபான்னு ஒரு லிமிட் வெச்சிருக்கேன். அதுவும், வயசானவங்க, குழந்தைகளோட வர லேடீஸ், பார்த்தாலே வசதி குறைவுன்னு தெரியறவங்க, இந்த மாதிரியானவங்கன்னா முன்னுரிமை தருவேன்.

"ஒருநாள், காவி உடையணிந்த சுவாமிஜி ஒருத்தர் சவாரி வந்தார். என்னைப் பத்தி விசாரித்துவிட்டு, 'ஒருநாளைக்கு பதினைந்து ரூபான்னா, மாசத்துக்கு நாலூத்தம்பது ரூபாய்; வருஷத்துக்கு சுமார் ஆறாயிரம் ரூபாய் ஆகுது; இது பெரிய தொகை; நீ தொடர்ந்து இப்படி நல்ல காரியம் செய்! ஆண்டவன் ஆசீர்வாதம் பரிபூரணமா உனக்குக் கிடைக்கும்' என்று வாழ்த்திவிட்டுப் போனார்."

மஞ்சள் ஆட்டோவுக்குள், ஒரு வெள்ளை மனசு!

— கௌதம் ராம்
படம் : யோகா

# "புகழ்போதை தேவையில்லை!"

**— ஷாலினி**

**ஷாலினி. குழந்தை நட்சத்திரமாகப் பிரபலமான இவர், 'செல்வி' ஆனதும், 'காதலுக்கு மரியாதை' என்கிற ஒரேயொரு தமிழ்ப் படத்தில் மட்டும்தான் நடித்திருக்கிறார். ஏராளமான மலையாளப் படங்களில் நடித்துக் கொண்டிருக்கும் இவர், தமிழ்ப் படங்களில் நடிக்க மட்டும் தயங்குகிறார்; மறுக்கிறார் என்றெல்லாம் பல்வேறு செய்திகள். என்ன காரணம்? அவரையே சந்தித்துப் பேசினோம்...**

"மலையாளத்தில் ஏக பிசியாக இருக்கிற நீங்கள் தமிழ்ப் படங்களில் நடிக்க மறுக்கிறீர்களாமே, நிஜந்தானா ஷாலினி?"

"எல்லாமே வதந்தி. மலையாளத்திலும் நான் இப்போது நடித்துக் கொண்டிருக்கவில்லை என்பதுதான் உண்மை."

"என்ன காரணம்?"

"இது வரையில் நான் மொத்தம் ஐந்து படங்களில் மட்டும்தான் – காதலுக்கு மரியாதையையும் சேர்த்து – நடித்திருக்கிறேன். எல்லாப் படங்களுமே கடந்த ஏப்ரலுக்கு முன்னால் நான் நடித்துக் கொடுத்தவைதான். 'சுந்தர கில்லாடி' என்கிற மலையாளப் படத்தில் நடித்துக் கொண்டிருந்தபோதுதான் எனது பிளஸ் டு எக்ஸாம் வந்தது. படம் காரணமாக என்னால் ஏப்ரலில் எக்ஸாமை எழுத முடியவில்லை. படம் எனது பரீட்சைக்கு இடைஞ்சலாக இருக்கும் என்பதால் அந்தப் படத்தை முடித்துக் கொடுத்துவிட்டு, இனி எக்ஸாம் எழுதி முடித்த பிறகுதான் படங்களை ஒப்புக் கொள்வது என்று ஒரு தீர்மானமான முடிவை எடுத்தேன். கடந்த அக்டோபரில் எக்ஸாமையும் எழுதி முடித்து விட்டேன். எக்ஸாம் காரணமாக நான் படங்களை மறுத்ததால்தான் இப்படியெல்லாம் வதந்தி பரவி விட்டது என்று நினைக்கிறேன்."

"கே. பாலசந்தர் நடிக்க அழைத்தும் கூட நீங்கள் மறுத்ததாக ஒரு பேச்சு?"

"பாலசந்தர் சார் பேனரில் எடுக்கப்படவிருக்கும் ஒரு படத்துக்கு, என்னை அவரது மகள் புஷ்பா கந்தசாமி அழைத்தது உண்மை. எக்ஸாமுக்கு அப்புறம் அதை ஒப்புக் கொள்வதாக நான் 'சொன்னதும் உண்மை. அவர்களும் அந்தப் படத்தை உடனடியாக எடுக்கப் போவதில்லை என்றும் நானாகும் என்றும் சொன்னார்கள்.





அதனால் எனக்கும் பிரச்னை இல்லை என்று சொல்லி விட்டேன். அவர்கள் அழைத்ததும் நான் ஒப்புக் கொண்டதும் அப்படியேதான் இருக்கிறது. அதனால் மறுத்தேன் என்ற பேச்சுக்கே இட மில்லை."

"நடிக்க வந்துவிட்ட பிறகு பெரும்பாலும் படிப்பு போன்ற விஷயங்களில் யாரும் அக்கறை காட்டுவதில்லை. படங்கள், மேலும் படங்கள் என்றுதான் இருப்பார்கள். நீங்கள் மட்டும் ஏன் இப்படி?"

"படிப்பு எனக்கு ரொம்ப முக்கியம். MCA பண்ண வேண்டும் என்று எனக்குத் தீராத ஆசை. அதற்கு ஒரு டிகிரி படித்திருப்பது அவசியம் என்பதால் பி.காம் படிக்கலாம் என்றிருக்கிறேன்!"

"நடித்துக் கொண்டே படிக்கவும் ஆசைப் படுகிறீர்கள்...."

"ஆமாம். அஞ்சல் வழியில் படிப்பது என்பதை விட கல்லூரியில் சேர்ந்தே படிக்க ஆசை. கல்லூரி வாழ்க்கை என்பது சுகமானதல்லவா! அதனால் அட்டெண்டன்ஸ் ஒரு பெரிய விஷயமில்லை; நன்றாகப் படித்தால் போதும் என்று எந்தக் கல்லூரியிலாவது எனக்குக் கொஞ்சம் சலுகை காண்பித்தால் அதில் சேரத் தயாராக இருக்கிறேன்."

"இது மாதிரி சலுகை காட்டுகிற அளவுக்கு நீங்கள் சிறப்பாகப் படிப்பீர்களா என்ன?"

"இதுவரை எழுபது சதவிகித மார்க்குகளுக்குக் குறைந்து நான் வாங்கியதில்லை. நிச்சயம் நன்றாகப் படிப்பேன்."

"சில படங்கள் வெளி வந்து, அவையும் நன்றாக ஓடிய நிலையில், கிடைத்திருக்குமே ஒரு புகழ் போதை... அதிலேயே தொடர்ந்து இருக்க வேண்டும் என்றுதானே பலரும் ஆசைப்படுவார்கள்?"

"எனக்கு அப்படியில்லை. புகழின் போதையெல்லாம் எனக்குத் தேவையில்லை. அப்படியொரு விருப்பமும் எனக்கில்லை. என்னுடைய சக வயதுத் தோழிகளைப் போல் என் பெற்றோரோடு, அண்ணன், தங்கையோடு, என் 'ஸ்மோக்கி'யோடு (ஷாலினி வளர்க்கிற நாய்) இருக்கிற குடும்பச் சூழல் என்கிற சந்தோஷமும் அனைவரையும் போல நானும்

சகஜமாக வெளியே போய் வருவதில் கிடைக்கிற சந்தோஷமும்தான் எனக்கு முக்கியம். வாய்ப்புகள் வருகின்றனவே என்பதற்காக எக்கச்சக்கமான படங்களை ஒப்புக் கொண்டு, மாதக் கணக்கில் ஷூட்டிங் ஷூட்டிங் என்றெல்லாம் என்னால் இயந்திரத்தனமாக இருக்க முடியாது. நடிப்பை எந்த அளவுக்கு விரும்புகிறேனோ, அதைவிட அதிகமாக நான் குடும்பத்தை - குடும்பச் சூழலையே விரும்புகிறேன்."

"எக்ஸாம் என்று காரணம் சொல்லி, வரும் பட வாய்ப்புகளை மறுப்பதன் மூலம், சினிமாவுக்கும் உங்களுக்கும் ஓர் இடைவெளி ஏற்பட்டு, அதனால் மறுபடியும் பழையபடி வாய்ப்புகள் தேடி வராமல் போகிற நிலையும் ஏற்படலாம் என்று நீங்கள் யோசித்துப் பார்க்கவில்லையா?"

"அது பற்றியெல்லாம் நான் கவலைப்படவேயில்லை. எத்தனை படங்களில் நடிக்கிறேன் என்பதைவிட எப்படிப்பட்ட படங்களில் நடிக்கிறேன் என்பதுதான் முக்கியம். வாய்ப்பு வருகிறதே என்பதற்காக எப்படிப்பட்ட படத்திலும் நடிக்க நான் தயாராக இல்லை. இதுவரை நடித்த படங்களில் கூட, நான் மட்டுமல்ல, என் அப்பா, அம்மா, அண்ணன் ஆகிய அனைவருமே அவற்றின் கதைகளைக் கேட்டு, எங்களுக்குள் விவாதித்து அவை நல்ல படங்கள் என்கிற முடிவுக்கு வந்த பிறகே நான் நடிக்க ஒப்புக் கொண்டேன். இனியும் அப்படித்தான் செய்வேன் என்பதால், வாய்ப்புகள் வந்தால் வரட்டும், இல்லாவிட்டாலும் போகட்டும் என்கிற மனநிலைதான் எனக்கு."

"இப்படிப்பட்ட நீங்கள் நிச்சயம் கவர்ச்சி வேடங்களை ஒப்புக் கொள்ள மாட்டீர்கள், இல்லையா?"

"கண்டிப்பாக. கவர்ச்சி என்ற பேச்சுக்கே இடமில்லை. நான் இந்த விஷயத்தில் உறுதியாக இருக்கிறேன் என்றாலும் எனது ரசிகர்களுக்குச் சந்தேகமோ என்னவோ, நான் கவர்ச்சியாக நடிக்கவே கூடாது என்றும் ஏராளமான ரசிகர்கள் கடிதம் எழுதுகிறார்கள்."

"ரசிகர் கடிதங்கள் நிறைய வருகின்றனவா?"

"நிறைய. தமிழிலும் மலையாளத்திலுமாக நிறைய்ய!"

"எப்படிப்பட்ட கடிதங்கள்?"

"சில கடிதங்கள்தான் நடிப்பைப் பற்றிப் பாராட்டி, விமர்சித்து வரும். மற்றவையெல்லாம் ஜஸ்ட் காதல் கடிதங்கள்."

"இப்படிப்பட்ட கடிதங்களைப் படிக்கிறபோது, என்ன தோன்றும்?"

"ஏன்தான் இவர்கள் இத்தனை கிரேஸியாக இருக்கிறார்களோ என்றுதான் தோன்றும்!"

"ஆனாலும் உள்ளுக்குள் ஒருவித சந்தோஷம்தானே!"

"இல்லை. நியாயமான விமர்சனமும் பாராட்டும்தான் சந்தோஷமாக இருக்கிறதே தவிர, இப்படிக் கண்மூடித்தனமான கடிதங்கள் சந்தோஷத்தைக் கொடுப்பதில்லை. ஒரு ரசிகரைப் பாருங்கள், நான் பல இடங்களில் விழாக்களில் கலந்து கொண்டபோது எடுக்கப்பட்ட படங்களையெல்லாம் சேகரித்து, ஒரு பெரிய ஆல்பமாக்கி அனுப்பியிருக்கிறார். இதற்கு எத்தனை செலவாகியிருக்கும்? இப்படியெல்லாம் செலவு பண்ணி அவர் அனுப்பத்தான் வேண்டுமா? இதுதான் அந்த ஆல்பம். நீங்களே பாருங்கள்."

(கல்யாண ஆல்பம் போல் ஏராளமான ஷாலினி படங்கள். ஆல்பத்தில் கடைசிப் பக்கத்தில் சரஸ்வதி, லட்சுமி, பார்வதி படங்களை ஒட்டி அதன் கீழே 'எனக்குச் சாமி தெரியவில்லை. ஷாலினிதான் தெரிகிறார்' என்று எழுதிக் கையெழுத்திட்டிருக்கிறார் அந்த ரசிகர். அவரை வழிமொழிந்து மேலும் சில ரசிகர்களின் கையெழுத்துக்கள்!)

"இவற்றுக்கெல்லாம் நீங்கள் பதில் போடுவதுண்டா?"

"இல்லை. நான் யாருக்குமே பதில் போடுவதில்லை. நான் கம்ப்யூட்டர் படிக்கிறேன்; என் வீட்டிலேயே கம்ப்யூட்டர் இருக்கிறது என்பதையெல்லாம் தெரிந்து கொண்டுவிட்ட ரசிகர்கள், கம்ப்யூட்டரிலேயே கடிதம் எழுதி, அதை பிளாப்பியில் எடுத்து எனக்கு அனுப்பி வைக்க ஆரம்பித்து விட்டார்கள்! எனவே, அந்தக் கடிதத்துக்குமே பதில் அனுப்புவதில்லை. நான் பதில் அனுப்பாத நிலையிலும் சிலர் 'இது என்னுடைய நூறாவது கடிதம், இருநூறாவது கடிதம் என்றெல்லாம் எழுதிக் கொண்டிருக்கிறார்கள். நான் பதில் அனுப்பினால் மேலும் மேலும் அவர்களை ஊக்குவிப்பது போலல்லவா ஆகிவிடும்?"

"கம்ப்யூட்டர் தவிர, வேறு என்னென்ன படிக்கிறீர்கள்?"

"கர்நாடக சங்கீதம்! ஏழெட்டு ஆண்டுகள் கற்றுக் கொண்டேன். எனக்குச் சொல்லிக் கொடுத்தவர், ரொம்பவும் வயதானவர். இப்போது அவர் இல்லை. கற்றுக் கொண்டவரையில், கர்நாடக சங்கீதத்தை ரசிக்கவும்,

ஓரளவுக்கு ராகங்களைக் கண்டுபிடிக்கவும் எனக்குத் தெரியும். பரதநாட்டியமும் கற்றுக் கொண்டிருக்கிறேன். கலாக்ஷேத்ராவில் டான்ஸ் டீச்சராக இருக்கும் வசுந்தரா தாமஸ் என்பவர்தான் தினமும் வந்து கற்றுக் கொடுக்கிறார். கதக் கற்றுக் கொள்ள ஆசை தான். அதற்குச் சரியான ஆசிரியர்தான் கிடைக்கவில்லை. அப்புறம் உடலைப் பேணு வதற்காக ஜிம்முக்கும் போகிறேன். அப்புறம் வீடு பெருக்குவேன். துடைப்பேன். சமை யலும் கற்றுக் கொண்டிருக்கிறேன். ஒவ் வொரு ஞாயிறும் சர்ச்சுக்குப் போவதற்காகச் சேலை கட்டவும் பழகிக் கொண்டிருக் கிறேன்!"



"சார், போன வாரம் நம்ம பத்திரிகைல பிரசுர மான பல்வேறு கட்டுரைகளுக்கும் மறுப்பு தெரிவிச்சு அம்பது பேருக்கும் மேல லெட்டர் போட்டிருக் காங்க."

"அப்படியா! ரொம்ப வசதியா போச்சு. அடுத்த வார இதழை 'மறுப்புச் சிறப்பிதழ்'னு வெளியிட்டு டலாம்!"

— டி.என். பாலகிருஷ்ணன்

"மேற்கத்திய இசை பிடிக்காதா?"

"என்ன இப்படிக் கேட்டுவிட்டீர்கள்? மைக்கேல் ஜாக்சன் என்றால் எனக்கு உயிர். அவருடைய ஆளுயரக் கட் அவுட்டையே நான் வீட்டில் வைத்திருக்கிறேன்!" (கொண்டு வந்து இல்லை, தூக்கிக் கொண்டு வந்து காட்டுகிறார்!)

"கர்நாடக சங்கீதம் பற்றி ஓரளவுக்காவது தெரிந்து வைத்திருக்கிற உங்களால் மேற்கத் திய இசையையும் இதே போல் ரசிக்க முடி கிறதா?"

"உண்மையைச் சொன்னால் கர்நாடக சங்கீதத்தை ஓரளவுக்காவது நான் தெரிந்து வைத்திருப்பதால்தான், மேற்கத்திய இசையை - மைக்கேல் ஜாக்சனை நான் முழு மையாக ரசிக்க முடிகிறது!"

"சினிமாவுக்குப் போவதுண்டா?"

"ஓ! இன்றைக்குக் கூட ஒரு ஹிந்திப்பட மாட்னி ஷோவுக்கு என் தோழிகளோடு போகப் போகிறேன்."

"அங்கே ரசிகர்கள் அடையாளம் கண்டு கொள்ள மாட்டார்களா?"

"மாட்டார்கள். ஏனெனில் நான் முஸ்லிம் பெண் மாதிரி பர்தா அணிந்து கொண்டு தான் போவேன்."

"ஆனால் கூட வருகிற தோழிகள் உங்க ளோடு பேசும் போது, 'ஷாலினி' என்று தானே அழைத்துப் பேசுவார்கள்! அப்போது பிறருக்குத் தெரிந்து விடுமே!"

"அதுதான் கிடையாது. நான் பர்தா அணிந்த பிறகு எனக்கென்று ஒரு பெயர் இருக்கிறது. அந்தப் பெயரில்தான் என்னை அழைப்பார்கள்!"

"சினிமா தவிர, மற்ற பல விஷயங்களிலும் உங்களுக்கு ஈடுபாடு இருக்கிற நிலையில் நீங்கள் எதிர்காலத்தில் என்னவாக இருப்பீர் கள்? என்னவாக ஆசைப்படுகிறீர்கள்?"

"சின்ன வயதில் டாக்டராக வேண்டும் என்றுதான் ஆசைப்பட்டேன். அப்புறம் எம்.பி.ஏ. படிக்க வேண்டும் என்று ஆசைப் பட்டேன். இப்போது கம்ப்யூட்டரில் எம்.சி.ஏ. படிக்க வேண்டும் என்று ஆசைப் படுகிறேன். எனவே எதிர்காலத்தில் நான் என்னவாக இருப்பேன் என்பதை முடிந்த முடிவாகத் தீர்மானிக்கிற வயது எனக்கு இன் னும் வரவில்லை என்றுதான் நினைக்கி றேன்."

"உங்களுக்கு இப்போது என்ன வயது?"

"79-ல் பிறந்தேன். அப்படியானால் இப் போது 19 வயது முடிந்து விட்டது இல் லையா?"

"தைரியமாக வயதைச் சொன்னதற்கு நன்றி. ஒருவேளை, அனைவருக்கும் குழந்தை நட்சத்திரமாக இருந்ததிலிருந்தே உங்களைத் தெரியும் என்பதால்தான் – வயதை மறைக்க முடியாது என்பதால்தான் – இப்படி வெளிப் படையாகச் சொல்லி விட்டீர்களா?"

"சேச்சே! அப்படியெல்லாம் இல்லை. உண்மையான வயதைச் சொல்வதால் என் இமேஜ் பாதிக்கப்பட்டுவிடும் என்றெல்லாம் நான் நம்பவில்லை. அப்படிப்பட்ட இமேஜ் எனக்குத் தேவையுமில்லை!"

சந்திப்பு : **இளங்கோவன்**

• நூலை வெளியிடுகிறார் ப. சிதம்பரம்

**ச**ங்கீத மும்மூர்த்திகள் என்றால்...? தியாகராஜர், முத்துஸ்வாமி தீக்ஷிதர், சியாமா சாஸ்திரி ஆகிய மூவர் என்பது பெரும்பாலான குவிஸ் நிகழ்ச்சிகளில் சொல்லப்படும் சரியான பதில். இந்த மூவருக்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்ததாகக் கருதப்படும் மூவர் உண்டு :

ஸத்குரு போதேந்திர சரஸ்வதி, ஸ்ரீதர வேங்கடேச அய்யாவாள், மருதாநல்லூரார் ஸ்ரீ வேங்கடராம ஸத்குரு ஸ்வாமி.

காஞ்சி காமகோடி பீடத்தின் 58 ஆவது பீடாதிபதி விச்வாதிகேந்த்ர சரஸ்வதி ஸ்வாமியிடம் பாண்டுரங்கன் - சுகுணா தம்பதி கைங்கர்யம் செய்து வந்தனர். இவர்களுக்கு வாராது வந்த மாமணியாய்ப் பிறந்த மகன் புருஷோத்தமன். அவன் காஞ்சி பீடாதிபதியின் சீடனானான். காசி யாத்திரையின்போது நண்பன் ஞானஸாகரன் இறந்து போனதால் மனமுடைந்து தற்கொலைக்கு முயன்றான் புருஷோத்தமன். அவனைத் தடுத்தாட்கொண்டு ஸன்யாஸ மார்க்கத்துக்குத் திருப்பி விட்டார் விச்வாதிகேந்திரர். புருஷோத்தமன், போதேந்திரர் ஆனார். குருவுக்குப் பிறகு பீடத்தை அலங்கரித்த போதேந்திர சரஸ்வதியாகவும் விளங்கினார்.

ஒரு லட்சம் சுலோகங்களைக் கொண்ட பகவான் நாம கௌமுதி என்ற நூலை ஆதாரமாகக் கொண்டு போதேந்திரர் எட்டு நூல்கள் எழுதினார். கோவிந்தபுரத்தில் ஜீவஸமாதி எய்தினார். இவரது ஆராதனை சமயத்தில் அங்கே ஆண்டுதோறும் (செப்/அக்டோபர்) பஜனைகள் நடைபெறுகின்றன.

ஸ்ரீதர வெங்கடேச அய்யாவாள் இல்லத்தில் சிராத்த தினம். வாசலில் பசியுடன் வந்த ஏழைக்கு ஜாதிக் கட்டுப்பாடுகளை மீறி சிராத்த உணவைக் கொடுத்து நிறைவு கண்டார் இவர். வைதிகர்கள் ஆட்சேபித்த

• வந்திருந்தோரில் ஒரு பகுதி



# எழுத்துலக அமரதாராவுக்கு அஞ்சலி!

போது ஸ்ரீதரர் கங்கா அஷ்டகம் பாட, அவர் வீட்டுக் கிணற்றிலே கங்கை பிரவகித்து வந்தது. இந்நிகழ்ச்சியை ஒரு வைபவமாக இன்றும் திருவிசைநல்லூரில் கொண்டாடுகிறார்கள்.

போதேந்திரரும் ஸ்ரீதரரும் ஒருவருக்கொருவர் ஈடுபாடு கொண்டிருந்தனர். நாம சித்தாந்தத்துக்கென்று பல பாடல்கள் இயற்றினர்.

மருதாநல்லூர் சுவாமிகள் பிறப்பிலே ஊமை. இவர் குழந்தையாய் இருந்தபோது, ஸ்ரீதர அய்யாவாள் குறிப்பிட்ட நாளில் 'ராமா' என்று உச்சரித்தாராம். அதன் பிறகு இவர்தான் பஜனை சம்பிரதாயம் என்பதை முறையாக வகுத்துத் தந்தார். சனிக் கிழமைகளிலும் ஏகாதசி தினங்களிலும் தவறாது பஜனை நடத்தி எல்லோரும் சேர்ந்து நாமாவளிகளைப் பாடும் வழக்கத்தைக் கொண்டு வந்தார். தமக்கு வழிகாட்டிய போதேந்திரர், ஸ்ரீதரர் ஆகியோர் பற்றி குரு கீர்த்தனங்கள் இயற்றியிருக்கிறார் இவர்.



• 'பஜனை சம்பிரதாயம்' வழங்கிய பிரமிளா குருமூர்த்தி குழுவினர்



**ப**ஜனை சம்பிரதாயப்படி ஒரு பஜனையில் பாடப்பட வேண்டியவற்றுக்கு வரிசைக் கிரமம் உண்டு. ஐந்து பாகங்கள் – ஒவ்வொரு பாகத்திலும் ஒவ்வொரு வரிசைக் கிரமம்.

முதல் பாகத்தில் புண்டரீகம், ஹரிநாம ஸ்மரணை, தியான சுலோகங்கள் தோடய மங்களம்.

இரண்டாம் பாகத்தில் குரு தியானம் அல்லது குரு வந்தனை சுலோகங்கள் அதிகம் இடம் பெறும். இடையிடையே நாமாவளிகள்.

மூன்றாம் பகுதியில் ஜயதேவரின் அஷ்டபதிப் பாடல்கள், தாஸர் பதங்கள், பல வாக்கேயக் காரர்களின் கீர்த்தனைகள் இடம் பெறும்.

நான்காம் பகுதியில் இறைவனை ஒரு தீபத்தில் ஜோதியாக ஆவாகனம் செய்து, கோபிகா கீதம், ராஸக் கிரீடை போன்றவை நடத்துவது – அதாவது தீபத்தைச் சுற்றி ஆடியபடியே பாடுவார்கள்.

ஐந்தாம் பகுதி டோலோத்ஸவம் – அதாவது ஊஞ்சல் அல்லது டோலையில் இறைவனை இருத்தி கல்யாணக் காலங்களில் செய்வது போன்ற நலங்கு, சடங்குகளைச் செய்து பாடி, மங்களத்துடன் நிறைவு செய்வார்கள்.

**இ**ந்த ஐந்து பாகங்களுள் பாரத நாட்டின் பல்வேறு மாநிலங்களிலிருந்து, பல்வேறு மொழியில் பக்தி கீதங்களை இணைத்துக் கொள்ளும் மரபு மிக அழகாக, இயல்பாக வளர்ந்து உருவாயிற்று.

பஜனை அல்லது பஜித்தல், இறை



• சாவி



• பகீரதன்



• எஸ்.வி.எஸ்



• பி.எஸ். மணி

வனைக் காட்டித் தருகிற பக்தி மார்க்கத்தில் ஒரு முக்கியமான இடம் வகிக்கிறது. இது வெறும் தத்துவ மார்க்கமாக இராமல், மனத்தைக் கவர்ந்து, பிறகு குழைய வைத்து, கனியச் செய்து, உயர்வான புலன் நுகர்ச்சி மூலம் உன்னதமான நிலைக்கு அழைத்துச் செல்லக் கூடியது. கூட்டு முயற்சி என்பதால் மனிதர்களை இணைப்பது; பல்வேறு அழகான வாழ்க்கைச் சடங்குகளை அழகுணர்ச்சியுடன் தெய்வத்துக்குச் செய்து பார்த்து மகிழ்விப்பது. பக்தி, அழகுணர்ச்சி, கலைக் கண்ணோட்டம் என்ற மேன்மையான பண்புகளின் பின்னல் பஜனை சம்பிரதாயம்.

— இந்த விளக்கத்தை அளித்தவர் பிரமீளா குருமூர்த்தி. இசைவிழா லெக்சர் - டெமான்ஸ்ட்ரேஷன் அல்ல!

அமரர் கல்கி நினைவு நாள் நிகழ்ச்சி... பஜனை சம்பிரதாயத்தின் முதல் மூன்று பாகங்களிலிருந்து ரஸத் துளிகளாகச் சில பாடல்களைத் தமது குழுவினருடன் பாடியும் காண்பித்தார்.

தோடய மங்களம், நாமாவளி, குரு வந்தனம் என்று தொடங்கிய நிகழ்ச்சியில் இடையே தியாகராஜர், முத்துஸ்வாமி தீக்ஷிதர், சியாமா சாஸ்திரி கிருதிகளும் இடம்பெற்றன.

இனிய ஆச்சர்யமாக அமைந்தது செதலபதி பாலசுப்ரமண்யம் பாடிய அமரர் கல்கியின் 'பூங்குயில் கூவும் பூஞ்சோலையில் ஒருநாள்...' பாடல். இலேசான ஹிந்துஸ்தானி சாயலில் அமைந்த போதும் பாடலின் பண்பும் கலைநயமும் மாறாமல் அழகாகவே இருந்தது. 'ஐயே மெத்த கடினம்' என்று இவர் கோபால கிருஷ்ண பாரதியார் பாடலைப் பாடிய போதோ, ரசிகர்கள் கண்களெல்லாம் குளமாகி விட்டன!

அமரர் கல்கிக்கும் பஜனை சம்பிரதாயத்துக்கும் என்ன தொடர்பு.... என்கிறீர்களா?

நமது பாரம்பர்யக் கலைகளில் ஆழ்ந்த ஈடுபாடும் அக்கறையும் கொண்டவர் கல்கி. தாமே சிறு வயதில் பஜனைப் பாடல்கள் கற்றார். வாசல் திண்ணையில் ஹரிகதை செய்து ஊராரை மகிழ்வித்தார்.

அவருக்கு எதில்தான் ஈடுபாடு இல்லாதிருந்தது...? அந்த அரிய மனிதரின் பல்முனை ஆர்வத்தைப் பறைசாற்றியது, நினைவு நாள் நிகழ்ச்சி :

"ஷண்முகம்! எங்கே அந்த 'ஜெய பேரிகை கொட்டடா' பாட்டைப் பாடுங்கள்!" என்று டி.கே. ஷண்முகம் அவர்களைக் கேட்பாராம் அமரர் கல்கி. ஷண்முகம், கணீரென்ற குரலில் பாரதியின் வரிகளைப் பாடுவதைக் கேட்டு, மெய்மறந்து ரசிப்பாராம். அதன் விட்ட குறை தொட்ட குறையாக, டி.கே.எஸ்.சின் மகன் டி.கே.எஸ். கலைவாணன் விநாயகர் துதி பாடிவிட்டு, அமரர் கல்கி எழுதிய 'சோர்வு கொள்ளாதே மனமே! உன் ஆர்வமெல்லாம் ஒருநாள் பூரணமாகும்' என்ற பாடலை இந்த விழாவில் பாடியது என்ன ஒரு பொருத்தம் என்று வியந்து குறிப்பிட்டு நெகிழ்ந்தார் கல்கி. ராஜேந்திரன். அவர்கள் பேச்சில் குறிப்பிட்ட இன்னொரு விஷயம் அனைவர் கவனத்தையும் கவர்வதாக இருந்தது. வெறும் ஆயிரம் ரூபாயுடன், ஏழை மாணவர்களின் கல்வி உதவிக்காக ஆரம்பிக்கப்பட்டது கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை. கல்கி அன்பர்களின் நல்லெண்ணத்தாலும் பேருதவியாலும் கடந்த கல்வியாண்டின்போது அத்தொகை 90,000ஆக உயர்ந்து விநியோகிக்கப்பட்டது. இவ்வாண்டு, கல்வி உதவித்

• நூல் தொகுப்பாசிரியர் சுப்ரபாலன்





• சிறப்புரை ஆற்றுகிறார் ப. சிதம்பரம்

தொகை ஒரு லட்சத்து இரண்டாயிரத்தைத் தாண்டி இருக்கிறது!

விழாவில் தலைமை யேற்று, 'எழுத்துலகில் அமரதாரா' நூலை வெளியிட வந்திருந்தார் முன்னாள் மத்திய நிதி அமைச்சர் ப. சிதம்பரம். கல்கி அவர்களுடன் பணியாற்றி அவரால் உருவாக்கப்பட்ட பத்திரிகையாளர்கள் சாவி, பகீரதன், எஸ்வி.எஸ்., பி.எஸ். மணி (குண்டுமணி) ஆகியோரும் கல்கி நிறுவனத்தின் தலைவர் வைத்தியநாதனும் 'எழுத்துலகில் அமரதாரா' நூலின் தொகுப்பாசிரியரான சுப்ர.பாலனும் வந்திருந்தனர்.

அமரர் கல்கியின் மகள் ஆனந்தி, நிகழ்ச்சியில் கௌரவிக்கப்படவிருந்த சீனியர் பத்திரிகையாளர்களைப் பற்றி நிகழ்த்திய அறிமுக உரை சுருக்கமானது என்றாலும் ஆத்மார்த்தமானது.

கௌரவிக்கப்பட்ட பத்திரிகையாளர்களின் சார்பில் மூத்தவரான சாவி ஏற்புரை நிகழ்த்தினார். எழுதிப் படித்த உரை கூட இத்தனை நெகிழ்த்துமா என்று அன்று வியக்காதவரில்லை. சாவி சொன்னார் : "எனக்கு, கல்கிதான் தாகூர்; கல்கி நிறுவனம்தான் சாந்திநிகேதன்."

'எழுத்துலகில் அமரதாரா', அமரர் கல்கி பற்றிப் பல்வேறு அறிஞர்கள் எழுதிய நயமான கட்டுரைகளின் ரசமான தொகுப்பு. நூலை வெளியிட்ட ப. சிதம்பரம், "நான் மிகவும் மதிக்கிற மனிதரான அமரர் கல்கி பற்றிய இந்தப் புத்தகத்தைப் படித்து, இன்புற்று, அதனை வெளியிட்டுப் பேசும் வாய்ப்பையும் அளித்து அமரர் கல்கிக்கு அஞ்சலி செய்ய வாய்ப்பும் கொடுத்தமைக்கு மனமார்ந்த நன்றியை முதலில் தெரிவித்துக் கொள்ளுகிறேன்" என்று தொடங்கி, புத்தகத்தைப் பற்றி ஒரு ஆய்வுரையே நிகழ்த்தி விட்டார்.

"புத்தகத்தில் நான் ரசித்துப் படித்த இடங்கள் பல உண்டு. உதாரணத்துக்கு, அமரர் கல்கி எப்படித் தம் துணிமணிகளை அலசுவார் என்று இங்கே குறிப்பிட விரும்புகிறேன் :

"தம்முடைய வேட்டி, சட்டை முதலியவற்றுக்குத் தாமே சவுக்காரம் போட்டுத் தாமே துவைப்பார். வேட்டியை அலசிப் பிழிந்த பிறகு, ஒவ்வொரு பக்கத்தையும் கொசுவி, படார் படாரென்று சப்தம் வரும்படி உதறுவார். பிறகு கொடியில் உலர்த்தப் போவார். அடுத்து ஒரு பாடலை பாடிக் கொண்டே துணியை உலர்த்தத் தொடங்குவார். வேட்டியின் இரண்டு பக்கமும் சரிசமமாக இருக்கும்படி நன்றாக இழுத்து விடுவார். இன்னொரு தேசிய கீதம் ஆரம்பமாகி விடும்! வேட்டியில் ஒரு சுருக்கம் கூட இல்லாதிருக்கும்படி இழுத்து, இழுத்து விடுவார். இந்தத் துணிகள் உலர்த்தும் சடங்கு முடிவதற்குள் ஐந்தாறு பாட்டுகள் பாடியாகி விடும். கல்கியுடன் ஒரே வீட்டில் சேர்ந்து குடியிருந்த துமிலன்தான் இதை எழுதியவர்."

இருபதாம் நூற்றாண்டில்தான், முந்தைய நூற்றாண்டுகளை விட, விஞ்ஞான வளர்ச்சி மிக வேகமாய் ஏற்பட்டுள்ளது. இந்த நூற்றாண்டின் முதல் பாதியில் வாழ்ந்தவரான கல்கியின் எழுத்து, இந்த வேகத்துக்கு ஈடுகொடுத்து சாகாவரம் பெற்று நிலைத்துள்ளதை சுட்டிக்காட்டினார் ப. சிதம்பரம்.

கல்கியின் தலையங்கங்களைப் பற்றிச் சொல்லுகிறபோது, "அவை சர்ச்சைகளைத் தோற்றுவித்தன; சர்ச்சைகளை அலசின; அல்லது சர்ச்சைகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தன" என்று கூறிவிட்டு, கல்கியவர்களைப் பற்றி விமர்சித்து அண்ணா, கண்ணதாசன் ஆகியோர் எழுதிய கட்டுரைகளும் இந்தத் தொகுப்பில் இடம்பெற்றிருப்பதையும் பாராட்டினார்.

அடுத்தபடியாக, நூலின் தொகுப்பாசிரியர் சுப்ர.பாலன், நூலை அழகுற வெளியிட்டிருக்கும் வானதி திருநாவுக்கரசு இருவரும் பொன்னாடை போர்த்தி கௌரவிக்கப்பட்டனர்.

இறுதியாக நடைபெற்ற பஜனை நிகழ்ச்சிக்குப் பின் செவியும் மனமும் நிறைந்து கலைந்தது கூட்டம். ●

— எஸ். சந்திரமௌலி

படங்கள்: ஸ்ரீஹரி

# நிலா. வலம்

**1** 'சுபம் பிரமோட்டர்ஸ்' போர்டு வாசல் முகப்பில் வைக்கப்பட்டிருந்தது. பிரமோட்டரின் பெயராக, வேதாசலம். சிவராம் சிரித்துக் கொண்டான். பிடிவாதக்கார அப்பா. சாதித்து விட்டார்!

"நம்பர் இருபத்தெட்டு எங்கே இருக்கு?"

சிவராமின் தோளை ஒரு பெரியவர் வயதின் உரிமையில் தட்டி நிறுத்தினார்.

"மூணாவது பிளாக்தான். கிழே கிரவுண்ட் ஃப்ளோர்லயே. ம்... யாரு... சுந்தர்ராமன்தானே?" என்றான் நினைவு முடிச்சை நெருடி.

"ஆமா.... அத்தை பையன். இன்னைக்குப் பால் காய்ச்சறா. வரச் சொல்லியிருந்தான்."

"ப்ளீஸ்... இந்த வழி...."

அவரை அனுப்பி விட்டு 'சி' பிளாக்கின் மாடிப்படிகளில் ஏறி, மொட்டை மாடிக்கு வந்தான்.

எதிரே தெரிந்த கோவில் கோபுரம், பின்புறம் தோப்பில் தென்னை மரங்கள், ஜிலுஜிலுவென்ற காற்று... மாடியிலும் ஓடிக் கொண்டிருந்த வாண்டுகள். சட்டென்று, காதில் விழுந்த பேச்சுக்குரல் அவனைத் தயங்க வைத்தது.

"ரொம்ப ஃபர்ஸ்ட் க்ளாஸா இருக்கு. அருமையான இடம். நீ ரொம்பக் கொடுத்து வச்சவ மரகதம்."

"நீதான் மெச்சிக்கணும்."

பதில் குரலில் பூரணமாய் அலுப்பு.

"என்னடி.... சந்தோஷப்பட வேண்டிய நேரத்துல... உங்க மாமனார் மாதிரி எனக்கு அமையலேன்னு நாதான் புலம்பணும்."

சிநேகிதியின் குரலில் இலேசாய் பொறாமை வெளிப்பட்டது.

"தப்பு... நீ நினைக்கறது. கிழம் பயங்கர கில்லாடி. இந்த ஃப்ளாட்டைத் தம் பேர்லதான் வாங்கியிருக்கு."

"அதனால என்ன?"

"இவருக்குத்தான் வரும்னு என்ன நிச்சயம்? என் நாத்தனாரைப் பத்தி உனக்குத் தெரியாது. பலே திருடி. இந்த ஃப்ளாட்டை அவ பேர்ல எழுத வச்சிடுவா."

"ஓஹோ. கதை அப்படிப் போவுதா?"

"இவர் எவ்வளவோ கெஞ்சினார்! அவரோட ஆபீஸ் பர்பஸுக்கும் நல்லது. எம்பேர்ல இருக்கட்டுமேன்னு. கிழம் மசிஞ்சே கொடுக்கலே!"

"போ. உங்க கூட இருக்காரே. சரி... உங்க பேர்லதான் வாங்கியிருப்பார்னு நினைச்சேன்."

"இன்னும் என்னென்ன கலாட்டா இருக்கோ? இவரைக் கேட்டா, அப்பா எதையும் சரியாத்தான் பண்ணுவாருன்னு கடைசியில பூசி மெழுகிடறாரு."

"சரி... இன்னிக்கு என்ன இவ்வளவு அமர்க்களம்? மைக், சேர் எல்லாம்..."

"இன்னிக்குத்தான்



ஃபிளாட்ஸை ஹேண்ட் ஓவர் பண்றாரு, அந்த புரமோட்டர். அதுக்கு ஃபங்ஷ னாம்..."

"சரி.. வா. கீழே போகலாம்."

அவர்கள் போனதும் டாங்கின் பின்புறமிருந்து வெளிப்பட்டு முன்பக்கம் வந்தான், சிவராம்.

அதற்குள் யாரோ துணிகள் உலர்த்த கொடி கட்டியிருந்தார்கள். பாரப்பட் சுவரை ஒட்டிய கம்பங்களில் இழுத்துக் கட்டப்பட்ட நைலான் கயிறு. ஒரு ஒதுக்குப்புற மாய் மட்டும் அமையாமல் குறுக்கிலும் ஒரு கயிறு கட்டப்பட்டு தழைந்திருந் தது.

ரிஷபன்

குறுக்கு நெடுக்காய் ஓடுகிற சிறுவர் களுக்கு நிச்சயம் விபத்து நேரலாம். ஓடி வருகிற அவசரத்தில் தடுக்கி விழலாம்.

சிவராம் அருகில் போய் உயர்த்தி வைத்துக் கயிறைக் கட்டினான்.

திருப்தியாக இருந்தது. திரும்பிய போது ஏறக்குறைய அவர் மீது மோதிக் கொண் டான்.

"மன்னிக்கணும். கவனிக்கலே!" என்றான் பதற்றமாய்.

கையைப் பற்றி இழுத்துக் குலுக்கினார்.

"வாழ்த்துக்கள். நமக்கென்ன? அப் படீன்னு போகாம, கயிறை சரியாக் கட்டி னதுக்கு."

கிழவரின் குரலில் ஒரு கம்பீரம் தெரிந்தது.

"இது என்ன? சின்ன வேலை! ஐ'ஆம் சிவ்ராம். ஒன் ஆஃப் தி ப்ரௌட் ஓனர்ஸ்."

"நான் ராஜப்பா... சி பிளாக்குல வாங்கியிருக் கேன்."

தன்னையும் அறிமுகப் படுத்திக் கொண்டார். கூடவே விசாரித்தார்.

"ஃபங்ஷன் எப்போ ஆரம்பிக்கும்? இப்பவே மணி அஞ்சரை ஆயிடுத்தே."

"ஷார்ப்பா ஆறு மணிக்கு."

இருவருமாய் மாடிப்படிகளில் இறங் கினர்.

ஏ, பி, சி மூன்று பிளாக்குகளுக்கும் இடையே தொடர்பு விடாமல் மொட்டை மாடிகள் இணைக்கப்பட்டிருந்தன.



"நல்ல ஐடியா! ஏதாவது ஃபங்ஷன்னா ஷாமியானா போட்டா போதும்" என்று சிலாகித்தார் ராஜப்பா.

''மூணு பிளாக்குக்கும் தனித்தனியா ஓவர் ஹெட் டாங்க். போஸ்ட் பாக்ஸ்.''

''டிஷ் ஆண்டெனா வச்சுத் தருவா ரோன்னு பார்த்தேன்.''

"வைக்கலாம்தான்."

சிவராம் மறுப்பாக ஏதும் சொல்லாமல் ஆமோதித்தான்.

அடுத்தவர் சொல்லும்போது உடனேயே 'அப்படி இல்லையே... வேண்டாமே...' என்று சொல்லாதே. சரிதான். ஆனால்... இன்ன காரணங்களினால் வேண்டாமென்று விடப்பட்டது என்று சொல். பாதிப் பேரை சமாதானப்படுத்தி விடலாம்' என்று அப்பா அடிக்கடி சொல்லுவார்.

"விசாரிச்சா... நம்ம பிளாட்தான் குறைச்ச ரேட். அதிகப்படியா... ஏதாச்சும் செய்யணும்னா ரேட்டை உசத்தணும். அப்புறம் வாங்கறவங்க ஃபீல் பண்ணுவாங்க" என்றான்.

''ஆனா, ஒவ்வொண்ணும் யோசிச்சு பண்ணியிருக்கார். பேஸிக் அமெனிட்டீஸ் எல்லாம் இருக்கு. நைஸ் வொர்க்."

ராஜப்பா சமாதானப்பட்டு விட்டார் என்று புரிந்தது.

"இவன்தான் என் பையன். என் பேரன், இவ மருமகள்...'' என்றார் எதிரில் நின்றவர்களைச் சுட்டிக் காட்டி.

கீழிறங்கி வந்து விட்டனர்.

சிவராம் கைகூப்பினான். மருமகள் முகம் இறுக்கமாய் இருந்தது.

''வாடா போலாம்...'' என்றாள், சிறுவனை வேகமாய் இழுத்து.

இந்தக் குரல். மேலே பேசிய இரு பெண் மணிகளில் ஒருத்தி. ஓ... இவர்தான் அந்த மாமனாரா?

நகர்ந்து வந்து விட்டான். பாவம் ராஜப்பா. திடமான மனிதராய்த் தெரிகிறார். சமாளித்து விடுவார் என்றும் தோன்றியது.

**வே**தாசலம் வந்து விட்டார். இன்னமும் பிடிவாதமாய் 'மொபட்'டில் தான் போகிறார். பூட்டி விட்டு நிமிர்ந்தவர் சிவராமைப் பார்த்ததும் சிரித்தார்.

"ஆரம்பிச்சுரலாம்!''

யாரோ அருகில் வந்தார்கள்.

''வாப்பா... வேதா.. இப்பத்தான் கேள்விப் பட்டேன். நீதான் பிரமோட்டராமே.''

வேதாசலத்தின் சமவயதுக்காரர் போலத் தெரிந்தார்.

"நீ... நீ... மாணிக்கம்தானே...''

இருவரும் ஒட்டி நின்று தோளைத் தட்டிக் கொண்டனர்.

''என் சுவின் வாங்கியிருக்கான். பி பிளாக்ல செகண்ட் ப்ளோர்.... ஆமா... உன்னோட ஸன் என்ன பண்றான்?''

''டாட்டால இருக்கான். ரிஸைன் பண்ணிட்டு வாடான்னு சொல்லியிருக்கேன். முரண்டு பிடிக்கறான். என்னாலயும் ஒருத்தனா சமாளிக்க முடியலே.''



• கல்யாண், வாசுகி: 'ஆனந்தமழை'

**மை**க் கீச்சிட்டு நின்றது. வேதாசலம் பேச ஆரம்பித்தார்.

அதற்கு முன் வேலை பார்த்த தொழிலாளிகளுக்கு அன்பளிப்புகள் வழங்கப்பட்டன. அறிமுகப்படுத்தி வைக்கப்பட்டார்கள். 'என்னோட முதலீடு... இவர்கள்தான். என்னோட பெருமைக்குக் காரணமானவர்கள்' என்றார் வேதாசலம்.

"மொத்தம் முப்பத்தஞ்சு பிளாட்ஸ். மூணு பிளாக். ஆல்மோஸ்ட் எல்லாருமே வந்திருக்கீங்க. வர முடியாதவங்க தகவல் அனுப்பியிருக்காங்க."

"மூணு பன்னண்டு முப்பத்தாறு. இல்லியோ...'' என்று யாரோ கிசுகிசுப்பது கேட்டது.

''இனிமேல... இந்த பில்டிங். உங்க பொறுப்பு. உங்களுக்குள்ளே ஒரு அசோசியேஷன் ஃபார்ம் பண்ணிக்கணும். வாட்ச்

மென், ஸ்வீப்பர் எல்லாம் அரேன்ஜ் பண்ணிக்கணும்."

சிவராம் எழுந்தான்.

"என்னோட சாய்ஸ், மிஸ்டர் ராஜப்பா! அவரை பிரசிடெண்ட்டா போடலாம்."

ராஜப்பா திடுக்கிட்டுத் திரும்பினார்.

"நான்... நானா?"

"ஆமாம்..."

சிவராம் முறுவலித்தான். "எனக்கு உங்கள் பலம் தெரியும். உங்களால் முடியும்."

"செகரட்டரியா... சிவராம்..." என்றார் ராஜப்பா உடனே.

மற்றவர்களிடம் மறுப்பு ஏதுமில்லை.

மாணிக்கம் எழுந்தார்.

"ஒரு சின்ன நியூஸ் – அஃப்கோர்ஸ். நமக்கு சந்தோஷமானது. வேதாசலத்தோட பையன், நம்ம கூட ஃபிளாட்ல இருக்கப் போறார். ஏ ஸிக்ஸ்டீல இருக்கற மிஸ்டர் சிவராம்தான் அது. நம்ம செகரட்டரி."

றும் ஆகிவிட்டால் சக மனிதன் என்று யாருக்கும் தோன்றுவதில்லை. முதல் நாளே முறையிடு! யோசித்தபடி ஏறினான்.

யார் அவன்?

மூச்சிரைத்தது. சமாளித்து நின்றான்.

முதல் இம்ப்ரஷன். மனமே... நிதானி. அவசரப்படாதே.

"சொல்லுங்க. என்ன வேணும்?" என்றான் குரல் இகஇகப்பாக வந்தது.

எதிரில் நின்றவளை உற்றுப் பார்க்க விடாமல் ஏதோ தடுத்தது. ஜொள்ளு என்று நினைத்து விடக் கூடாது.

"வாட்டர் ஏன் ஸார் கலங்கலா இருக்கு?" என்றார் பெண்ணுடன் நின்றவர்.

"அப்படியா? எதைச் சொல்றீங்க? நல்ல வாட்டர் வர பைப்பா? இல்லே, ஓவர் ஹெட் டாங்க் வாட்டரா?"

"ரெண்டும்தான். மஞ்சளா ஈஷிகிட்டு.

● சின்னத் திரையில் கொடி கட்டிப் பறக்கும் வாசுகி தன் அரிய நடிப்பை பெரிய திரையிலும் பதிவு செய்திருக்கிறார். சினிமாவே வேண்டாமென்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தவரை கதை சொல்லி உருக வைத்து 'ஆனந்த மழை'யில் அறிமுகப்படுத்துகிறார் புது இயக்குநர் கருணாகரன். படத்தில் கதாநாயகன் கல்யாணின் சகோதரியாகத் தோன்றும் வாசுகி, இதுவே முதலும் கடைசியுமான படமாக இருக்கும் என்கிறார். பார்க்கலாம், எங்கே போய் விடப் போகிறார்?

கூட்டம் முடிந்து கலைந்து போனதும் தன் ஃப்ளாட்டில் போய்ப் படுத்தவன், விடிந்ததும் எழுந்து பால்கனி வழியே வெளியே பார்த்தான். யாரோ, யாரையோ உரக்கக் கூப்பிடுவது போலிருந்தது.

'சி' பிளாக்கின் மொட்டை மாடியில், சூரிய ஒளி பின்னால் ஜொலிக்க, அந்தப் பெண் சந்தன நிற சுரிதாரில் நின்று கொண்டிருந்தாள். அருகே யார்? அவளது அப்பாவாக இருக்க வேண்டும்.

அவள் ஏதோ கேட்க, அந்த மனிதர், கீழே நின்று கொண்டிருந்த ராஜப்பாவை நோக்கிக் கைகாட்டுவது புரிந்தது.

"ஸார் உங்களைத்தான்..." – அங்கிருந்தே குரல் கொடுத்து விட்டு அவசரமாக இறங்கி வந்தான்.

ராஜப்பா கையை மறைப்புக் கொடுத்து நிமிர்ந்து பார்த்தார்.

அவன் வந்து சேர்ந்ததும், "இத்தனை படி.. நினைச்சா உடனே ஏற முடியறதா.. நீ போறியா?"

சிவராம் காத்திருந்த மாதிரி இரண்டிரண்டு படிகளாய்த் தாவி ஏறினான். பிரசிடென்ட் என்றும் செகரெட்டரி என்

ஹாரிபிள்" என்றார் கடுமையான குரலில்.

"க்ளீன் பண்ணச் சொல்லியிருந்ததே..."

மொட்டை மாடியிலேயே ஒரு குழாய் வைக்கப்பட்டிருந்தது. அதைத் திறந்ததும் மஞ்சளாய் நீர் கொட்டியது.

"நீங்களே பாருங்க..."

சிவராம் யோசிக்கவே இல்லை. இரும்பு ஏணியில் சடசடவென ஏறி ஓவர் ஹெட் டாங்க் மீது தாவிக் கொண்டான். மூடியைத் திறந்தால் உள்ளே கலங்கலான நீர்.

"இதோ... இப்பவே ஆளை வச்சு க்ளீன் பண்ணிரலாம்..." என்றான் அங்கிருந்தபடியே.

"வா ஸ்வேதா..."

போய் விட்டார் மகளுடன்.

ஸ்வேதா. சொல்லிப் பார்த்ததும் இலேசாய்ப் பரவசம். மனசுக்குள் ஒரு குரல் கேட்டது. 'இவள்தான், இவளேதான் நீ தேடியது.'

உள்ளே தந்தி அதிர்ந்தது. ஒரு முடிவுடன் இறங்கி வந்தான்.

(தொடரும்)

# சேலத்துக்கு ஆபத்தா?

**1998**-ம் வருடத்தில் மட்டும் தொடர்ச்சியாக மூன்று முறை சேலம் மற்றும் சுற்று வட்டாரங்களில் நில நடுக்கம் ஏற்பட்டுள்ளது. (கடைசியாக அக்டோபர் 25 அன்று) சேலத்தை மட்டும் இயற்கை அடிக்கடி குறி வைப்பதேன்?

• இமயமலைப் பகுதி : பூகம்ப வாய்ப்பு அதிகம்!

சென்னை வானிலை ஆராய்ச்சி நிலையத்திலுள்ள ஆராய்ச்சியாளர் பி.சி.எஸ். ராவைச் சந்தித்துக் கேட்டோம்:

"சேலத்தில் உணரப்பட்டது லேசான நில அதிர்ச்சிதான். பயப்பட வேண்டிய அவசியம் ஏதும் இல்லை. பொதுவாக வடக்கே இமய மலைப் பகுதிகளும், அதன் அடிவாரங்களும் நில நடுக்கம், பூகம்பம் ஆகியவற்றால் பாதிக்கப்படும் ஆபத்து அதிகம் இருப்பதாகக் கண்டறியப்பட்டுள்ளது. தென் நாட்டில் இதற்கான வாய்ப்பு மிகக் குறைவு என்று சொல்லலாம்.

பூமியின் அடிப்புறத்தில் சுமார் 40 கி.மீட்டரிலிருந்து 700 கி.மீ. வரை மூன்று அடுக்குகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. Core, Mantle, Crest என்று பிரிக்கப்பட்டுள்ளவற்றில் உஷ்ணக் குழம்புகளின் ஓட்டம் காரணமாகவும், பாறைகளின் இடப் பெயர்ச்சி காரணமாகவும் அடிப்புறத்தில் இருந்து மிக அபரிமித மான சக்தி பூமிக்கு மேலே உந்தப்படுகிறது. அந்த சக்தி வெளிப்படும்போது நடுக்கம், அதிர்ச்சி, பூகம்பம் ஏற்படுகிறது. இதிலும், மேற் புறத்தில் உண்டாகும் மாற்றங்களினால் ஏற் படும் நில நடுக்கம்தான் அதிக வீரியத்தோடு இருக்கும்.

நில நடுக்கத்திற்கு அளவைக் கண்டறிய நிறைய இடங்களில் 'Seismogram' கருவி வைக்கப்பட்டிருக்கிறது. உலகில் ஆங்காங்கே நடுக்கம் ஏற்பட்டுக் கொண்டேதான் இருக்கிறது. 1993ல் மகாராஷ்ட்ரா மாநிலம் லாட்டூரில் உணரப்பட்ட பூமி அதிர்ச்சி, உயிர்ச் சேதங்களையும், பொருட் சேதங்களையும் உண்டாக்கியது. மக்கள் அதிகமாக உள்ள குடியிருப்புப் பகுதிகளை நில நடுக்கம் தாக்கும்போது பாதிப்புகள் அதிகமாகின்றன. பல சமயங்களில் மிகவும் சக்தி வாய்ந்த நில அதிர்வுகள், கடலிலும் பாலைவனங்களிலும் நிகழ்கிறது. இதன் காரணமாக மக்களுக்கு எந்த ஆபத்தும் வருவதில்லை.

இந்தியப் பகுதியிலிருந்து ஆஸ்திரேலியா வரை உள்ள அடி நிலப் பகுதி இந்தோ - ஆஸ்திரேலியன் ப்ளேட் என்றழைக்கப்படுகிறது. இந்தப் பகுதி, வடக்குப் புறமாக ஐரோப்பா - ஆசியா ப்ளேட்டை நோக்கி நகர்ந்து செல்வதன் காரணமாக இது போன்ற நில அதிர்வுகள் பூமியின் மேற்பரப்பைத் தாக்கிக் கொண்டிருப்பதாக ஆராய்ச்சிகள் சொல்கின்றன. சென்ற வாரம் கூட இந்தோனேஷியாவில் பூமி அதிர்ந்தது!

ஒரு பகுதியில் தொடர்ச்சியாக அதிர்வுகள் நிகழ்ந்துகொண்டிருந்தால், அது பற்றிய ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்படும். பூமி அதிர்ச்சி பற்றிப் பல ஆராய்ச்சிகள் உலகெங்கிலும் நடந்து வருகின்றன. ஜப்பானியர்கள் கொஞ்சம் அட்வான்ஸாகவே உள்ளனர். நமது நாட்டில் ரூர்க்கியில் (உ.பி.) ஓர் ஆராய்ச்சி நிலையம் உள்ளது. உலகில் எங்கு அதிர்வுகள் ஏற்பட்டாலும் சென்னையில் வைக்கப்பட்ட கருவி பதிவு செய்துவிடும். நில அதிர்வுகள் எந்த இடத்தில், எப்போது உண்டாகும் என்று ஒரு சேரக் கணித்துச் சொல்வதற்கு மிக நுட்பமான ஆராய்ச்சி தேவை. இந்தக் கணிப்புகளை எளிமையாகக் கண்டறிய ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. பிராணிகள், நில நடுக்கம் வர இருப்பதை முன்னதாக உணரும் சக்தியைக் கொண்டவை என்பது பரவலாக சொல்லப்படுகிறது. சீனாவில், நில அதிர்ச்சி மற்றும் பிராணிகளின் உணரும் தன்மை பற்றிய ஆராய்ச்சிகளும் நடந்து வருகின்றன.

மீண்டும் சொல்கிறேன். சேலம் நில அதிர்வுகள் குறித்து அதிகக் கவலையோ, பயமோ கொள்ளத் தேவையில்லை."

சந்திப்பு : **ஸ்ரீனிவாசன்**






1998 டிசம்பர் 20
வெகுதான்ய மார்கழி 5
மலர் : 57
இதழ் : 21

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



## ஓரம் கட்டுங்கள்!

வட மாநிலத் தேர்தல் முடிவுகள் வெளியான பிறகு, பி.ஜே.பிக்கு ஆதரவு தொடரும் என்றே அறிவித்தார் ஜெயலலிதா. ஆனால், அந்த அறிவிப்பு வெளியான ஒரு சில நாட்களுக்குள் அவர் மனம் மாறிவிட்டது!

தமிழகத்தில் அ.தி.மு.க கூட்டணி முறிந்து விட்டது என்று பிரகடனம்; விலைவாசி உயர்வு குறித்து மத்திய அரசுக்கு எதிரான எதிர்க்கட்சிகள் வேலை நிறுத்தப் போராட்டத்தில் அ.தி.மு.க. பங்கேற்கும் என்று அறிக்கை; 'த.மா.காவுடன் தோழமைக்குத் தயார்' என்று ஒரு தரப்பான தீர்மானம்! ('இதை நாளிதழில் படித்து அறிந்தேன்' என்கிறார் மூப்பனார்!)

– இவற்றின் மூலம் 'பி.ஜே.பியுடனான உறவுக்கு முற்றுப்புள்ளி' என்று சொல்லாமல் சொல்லிக் கொண்டிருக்கிறார் ஜெயலலிதா!

காரணங்கள் மூன்று : 1) பிரமோத் மகாஜன், 2) ஜஸ்வந்த் சிங், 3) ஜக்மோகன்! இந்த மூவரும் பி.ஜே.பி அமைச்சரவையில் இடம்பிடிக்க, அதன் விரிவாக்கத்துக்கு ஜெயலலிதா வழங்கிய ஆணைகள் காற்றில் பறக்க விடப்பட்டுள்ளன!

விரைவில் இன்னொரு விரிவாக்கத்தை எதிர்பார்க்கலாம் என்று அரசியல் வட்டாரங்கள் கூறுகின்றன. ஆனால், அதுவரை காத்திருக்க ஜெயலலிதா தயாராயில்லை. அவர்




நேரடியாகக் குற்றம் சாட்டிய பிரமோத் மகாஜன் அமைச்சரவையில் இடம் பிடித்துள்ளார். பிரதமர் தமது அதிகாரத்தைப் பிரயோகித்ததை அ.தி.மு.க. தலைவியால் சகிக்க இயல வில்லை.

நிலையான ஆட்சி, திறம் மிக்க பிரதமர் என்ற தேர்தல் கோஷத்தை முன் வைத்து வாக்குக் கேட்டவர்தான் ஜெயலலிதா. சோனியா காந்தியை 'அன்னிய நாட்டவர்' என்று சுட்டிக்காட்டி காங்கிரஸுக்கு எதிர்ப்பு உருவாக்கவும் ஜெ. தவறவில்லை.

ஆனால், பி.ஜே.பி ஆட்சி அமைக்கப்பட்ட நாள் முதலாக, அதன் நிலையற்ற தள்ளாட் டத்துக்குக் காரணமாயிருந்து வருகிறார். பிரதமரின் செயல்பாடுக்கு முட்டுக்கட்டை போடுவதற்குப் பொழுது போதவில்லை அவருக்கு!

இப்போது காங்கிரஸுடன் தேர்தல் கூட்டுக்குக் கூட அ.தி.மு.க. தயார்! த.மா.கா காங்கரஸுடன் ஒத்துழைக்கக் கூடும் என்பதால் அதையும் தோழமைக் கட்சியாக ஏற்கத் தயார்!

ஜெயலலிதா கூச்ச நாச்சமில்லாமல் அந்தர் பல்டியடிக்க, அவரோடு தேர்தல் கூட்டணி வைத்துக் கொண்ட ம.தி.மு.க., பா.ம.க., ராஜீவ் காங்கிரஸ் கட்சிகள் முகத்தில் டன் டன்னாகக் கரி!

தி.மு.க. உள்ள திசையில் தலை வைத்துக்கூடப் படுக்க மறுப்பவர், அக்கட்சி முன் னின்று நடத்தும் முழு வேலை நிறுத்தத்தில் பங்கேற்கிறார்.

'பங்கேற்பது அவர் விருப்பம்' என்பதற்கு மேலாகக் கருணாநிதி எந்த விமர்சனமும் செய்யவில்லை!

அனைத்திந்திய வேலை நிறுத்தம் மூலம் பா.ஜ.கவுக்கு மற்றக் கட்சியினர் விடுக்கும் எச்சரிக்கை, பிரதமரின் உறுதியைத் தளர்த்திவிடக் கூடாது. விலைவாசி கட்டுப்படுத்தப்




பட வேண்டும் என்பதில் இரண்டு கருத்தில்லை.

ஆனால், அமைச்சரவை அமைப்பதும் அதை விரிவாக்கம் செய்வதும் பிரதமரின் முன்னுரிமை. தமக்கு இசைவான ஓர் அணியை வகுத்துக் கொள்வதே அவருக்குச் சௌகரியமும் கூட. அதில் கட்சிக் கண்ணோட்டத்துடனும் சுயலாப நோக்குடனும் கூட்டணிக் கட்சியினர் தலையிடுவதை அனுமதிப்பது பிரதமருக்கு அகௌரவம் மட்டு மல்ல... நிர்வாகத்துக்கும் நாட்டுக்கும் இழைக்கும் அநீதி.

எனவே பிரதமர் தாம் எடுத்துள்ள முடிவிலும், இனி எடுக்கவிருக்கும் முடிவுகளிலும் உறுதியாகத் தொடர வேண்டும்.

ஜெயலலிதாவால் திகைப்பில் ஆழ்த்தப்பட்டிருக்கும் தமிழகத்துக் கட்சிகள், அவருடைய உள்நோக்கங்களை நன்கு அறியக்கூடிய அனுபவஸ்தர்களைத் தலைவர்களாகக் கொண்டவை. ஆனால், அனுபவஸ்தர்கள் கூடத் தேர்தல் என்று வரும்போது வாக்குப் பெட்டிகளைத் தாண்டி சிந்திக்க மறந்து, தவறான முடிவுகளை எடுக்கிறார்கள். அத்தகைய தொரு முடிவினால்தான் பி.ஜே.பி. இன்று படாதபாடு பட்டுக்கொண்டிருக்கிறது என்பதை பிற கட்சிகள் நினைவில் கொள்ள வேண்டும்.

மத்தியில் ஆட்சி செய்யும் கட்சியைக் கட்டுப்படுத்தி, அதன் மூலம் நீதித் துறையில் தலையிட்டு, தம் மீதான வழக்குகளிலிருந்து தப்பிக்கும் உள்நோக்கம் ஜெயலலிதாவுக்கு இருப்பதை மறந்தால், அது தமிழகத்துக்கே ஆபத்தாகிவிடும்.

வேலை நிறுத்தப் போராட்டத்தில் அ.தி.மு.க. இணைவதை யாரும் கேள்வி கேட்கவோ, தடை செய்யவோ முடியாதுதான்... ஆனால், அரசியல் ரீதியான அணிவகுப்பு அல்லது கூட்டணி என்று வரும்போது இதர கட்சிகள் அ.தி.மு.கவைச் சுற்றி முள்வேலி அமைத்துத் தனிமைப்படுத்துவது மட்டுமே தமிழகத்துக்கும், ஏன் இந்தியாவுக்கும் கூட நல்லது.

கச்சேரியில் ஒலிபெருக்கி அமைப்பானது அரசாங்க அதிகாரி மாதிரி. அது மட்டும் ஒழுங்காயிராவிட்டால் பாடகர் என்னதான் வாரி வழங்கினாலும் கேட்பவருக்கு முறையாகப் போய்ச் சேராது. இது விஷயத்தில் போது மான அளவு கவனம் செலுத்தப்படவில்லை என்பதை உணர்ந்து, போன வருடம் இசைவிழாவின் இடுக்கில் ஒரு முழு நாள் கருத்தரங்கமே நடந்தது. அதன் விளைவு தானோ, அல்லது முத்ரா செயலாளர் பாஸ்கர், பொரு ளாளர் ராதா பாஸ்கர் – இருவரும் இசைக் கலைஞர்கள் என்பதாலோ.. பாரதிய வித்யா பவன் அரங்கில் அவர்கள் நடத்திய கச்சேரிகளில் ஒலிபெருக்கி அமைப்பு துல்லிய மாய் இருந்தது. அதனால், வயலினும் மிருதங்கமும் பக்க வாத்யங்களா, போர்க் கருவிகளா? என்று சந்தேகப்பட்டு பாப்பையாவுக்கு பட்டிமன்றத் தலைப்புத் தரவிருந்த என் முடிவை மாற்றிக் கொள்ளும்படி ஆகிவிட்டது! ஆனந்த மாக இரண்டு கச்சேரிகள் கேட் டேன்.

முதல் கச்சேரி - சௌம்யா. நிதானம், சௌக்கியம், பாடல்கள் தேர்வில் புத்திசாலித்தனம், திரு வாரூர் தேர் ரக்க் கீர்த்தனையா னாலும் நல்ல நிர்வாகம் என்று தாராளமாக நல்ல அம்சங்கள் தென்பட்டன.

நவராகமாலிகை வர்ணத்துடன் ஆரம்பித்தார் சௌம்யா. அடுத்து 'தெரதியக ராதா?' என்று திருப்பதி பெருமாளிடம் தியாகராஜர் வேண்டியதை வழிமொழிந்தார். ஸ்வரம் பாடியபோது கீர்த்தனையின் கோரிக்கை த்வனியை மாற்றாமல் கவனமாகப் பார்த்துக் கொண்டது புத்திசாலித்தனம்.

ரீதிகௌளை ஆலாபனையில் நிதானமான பிரயோ கங்களை அளவான துரிதப் பிரயோகங்களால் அலங் கரித்து, பட்டாபிஷேக ராமனுக்குக் கட்டியம் கூறினார். 'நன்னு விடசி' கம்பீரமான நிர்வாகம்.

அடுத்த தேர்வாக, சொக்குப்பொடி ராகமான வலஜி யில் 'ஜாலந்தர'! நிரவல் ஸ்வரத்துடன் கை யாண்டது ரீதிகௌளைக்கு கான்டிராஸ்ட்!

சௌம்யாவிடம் தெரிகிற ஆரோக்கிய மான professional approach இன்னமும் மேம்பட இட முண்டு. வின்யாஸத்திலும் மனோதர்மத்திலும் உள்ள மேன்மை சாஹித்ய பாவத் துக்கும் வர வேண்டும்.

மேல் ஸ்தாயி பிருகா பிடி களில் தாமே முகம் சுளிக்கும் அளவுக்கு சறுக்குவதைத் தவிர்த் தாக வேண்டும்.

ஆலாபனையில் இவர் கை யாளும் சில பிரயோகங்கள் ஒட் டாமல் தனித்து நிற்கின்றன. அம்மணிகளுக்குப் புரிகிற மொழியில் சொல்ல வேண்டு மானால் கோத்து வாங்கிய பார் டருக்கு இருக்கிற அழகு 'அட் டாச்' செய்து தைத்த பார் டருக்கு வராது. ரீதிகௌளை, லதாங்கி, தோடி என்று ஒவ் வொரு ஆலாபனையிலும் அகாரமாக ஆரோகண அவ ரோகணத்தில் ஏறி இறங்குவது 'அட்டாச்ட்' பார்டர் மாதிரி துருத்திக் கொண்டு நிற்கிறது. கவனிக்க வேண்டும்.

புடைவை ஒப்பீட்டைத் தொடர்ந்தால் நர்மாதாவின் வயலின் 'கான்டிராஸ்ட்' பிளவுஸ்! பாடகரின் முயற்சியை மறந்து, she plays her own thing. சௌம்யாவுக்குச் சௌகரியமாக இருந்தால் சரிதான்!

என் கேட்டால் எண்ணெ யாய்ப் பிழிந்து தரும் ரகம் ஜெ. வைத்தியநாதனின் வாசிப்பு. பாடகரின் தெளிவு சுளிவுகள் உணர்ந்து, எதிர்பார்ப்புடன்

வெற்றிடங்களைப் பூர்த்தி செய்தார். பாபநாசம் சேதுராமன் கஞ்சிரா. தனியாவர்த்தனத்தில் இந்த ஜோடி வாசித்த கணக்கு சங்கதிகளும் நடைமாற்றல் சாகசங்களும் சர்வலகு சௌக்யத்துடன் ஒலித்தன.

* * *

அடுத்த கச்சேரி விஜய் சிவா. டிக்கெட் வாங்கிக் கொண்டு உள்ளே போனால் மேடையில் பாடகரைக் காணோம்! அங்கே சங்கீத தேவதையை உட்கார வைத்து, கீழே இருந்தபடி ஆராதனை செய்து கொண்டிருந்தார் சிவா!

மிகையேயில்லை... மாயா மாளவ கௌளை நிரவலால் அர்ச்சனை செய்து, ஆனந்த பைரவி ஆலாபனையில் ஆரா தித்து, 'பிரேம ஸ்வரூப' என்ற ஊத்துக்காடு வேங்கடகவி கீர்த்தனையால் அன்பின் வடிவ மாக உருவகித்து, மத்யமாவதியில் மங்கள ஹாரதி எடுத்து, யமுனா கல்யாணியில் ஒரு கோயிலே கட்டி கும்பாபிஷேகம் செய்து விட்டார். அன்று அவர் 'ஜம்பூபதே' பாடக் கேட்டவர்கள் கொடுத்து வைத்தவர் கள். 'சர்வ ஜீவ தயாகர சம்போ' என்ற வரியில் செய்த நிரவல்... அதை



• விஜய் சிவா : மேடையிலும் சிரிக்கலாமே!

# காணோம்!

வார்த்தைகளில் அடக்கிச் சிறுமைப்படுத்த நான் விரும்பவில்லை... வானொலியிலும் டி.வியிலும் ஒலி/ஒளிபரப்புவார்கள். நீங்களே கேட்டுக் கொள்ளுங்கள்.

உருகிக் கரைந்தவர்களைத் திரும்பவும் ஓர் உருவுக்குக் கொண்டு வர சிவா தேர்ந்தெடுத்தது, ஜகன்மோகினி ராகத்தில் ஒரு கீர்த்தனை. தியாகராஜர், தீக்ஷிதர் தொடங்கி, பட்டணம் சுப்ரமண்ய அய்யர், கல்கி கிருஷ்ணமூர்த்தி என்று பாடலாசிரியர்கள் வரிசையிலும் ராக தாளத்திலும் வகை வகையான அழகுகள்.

தோடியில் அபாரமான ஆலாபனை, நிரவல், ஸ்வரம். மோகனத்தில் ராகம் தானம் பல்லவி... 'மோகன ராமையா! சமயமிதே கருணை ஜூடவையா' என்று ராமனைக் கெஞ்சியும் கொஞ்சியும் வருந்தியும் வேண்டியும் உரிமையுடன் கொஞ்சம் விரட்டியும் அழைத்து... 'சரி நீ வராவிட்டால் என்ன.. உன்னை இங்கிருந்தபடியே ஸ்வரங்களால் அர்ச்சனை செய்கிறேன்' என்று வர்ஷித்தார் பாருங்கள்... அத்தனைக்கும் இடையே காட்டிய



• சௌம்யா

தாள ஜாலத்தில்தான் எத்தனை நளினம்!

இரண்டரை மணி நேரத்தில் ஒரு வினாடி கூட கவனம் சிதறாமல் கட்டிப் போட்ட பாடகருக்குப் பெரிய பலம் வயலின் ஸ்ரீராம் குமார். நிழல் போல் தொடர்ந்து ஆதரவாக வாசித்து நிறைவு செய்தார்.

மிருதங்கம் மன்னார்குடி ஈச்வரன், கஞ்சிரா புருஷோத்தமன். வெளியிலிருந்தபடி இடைஞ்சல் பண்ணாமல் ஆதரவு தருவது எப்படி என்று அரசியல்வாதிகள் இவர்களைப் பார்த்துக் கற்றுக் கொள்ளலாம்! சீனியரான ஈச்வரன் 'சின்னப் பையன்' என்று ஒதுக்காமல் புருஷோத்தமனுக்கு தாராளமாக வாய்ப்புகள் தந்தார். பிற மிருதங்க வித்வான்கள் கவனிக்க!

சிவாவுக்கு ஒரே ஒரு யோசனை – பூஜை பண்ணும் போது சிரிக்க முடியாது. சரி.... கச்சேரி முடிந்த பிறகாவது ரசிக மகா ஜனங்களுக்கு ஒரு புன்னகையைப் பரிசாக்கலாமே! ●

## நெருப்பில்லாமல் புகை!

அயல் நாடுகளில் அவார்டுகளாக வாங்கிக் குவித்த, தீபா மேத்தாவின் "Fire" திரைப்படம், மும்பையில் ரிலீசாகி, சூடு பிடிக்கும் முன்பே புகைச் சலைக் கிளப்பிவிட்டது! நகரின் கலாசாரக் காவலர்களாகத் தங்களை உருவகித்துக் கொண்டிருக்கும் சிவசேனைக்காரர்கள், மீனா காம்ப்ளி என்ற பெண் புலியின் தலைமையில் வெகுண்டெழுந்தனர். போஸ்டரைக் கிழித்து, கல்லெறிந்து, கோஷமெழுப்பி ரகளை செய்ய, நியு எம்பயர், ஸினிமாக்ஸ், இரண்டு தியேட்டர்களிலும் நெருப்பு அணைக்கப்பட்டுவிட்டது! அண்ணன் தம்பிகளான தங்கள் கணவன்மார்களின் மீதுள்ள வெறுப்பையும் எரிச்சலையும் தணித்துக் கொள்ள, ஓரினச் சேர்க்கையில் ஈடுபடும் இரண்டு பெண்களின் (ஷபானா, நந்திதா) குடும்பக்(?)கதை; இந்திய ஆடியன்சுக்கு 'ஓவர் டோஸ்'தான்! ஆனால் கலாட்டா செய்தவர்களை முதல்வர் மனம் திறந்து பாராட்டியிருப்பது கொஞ்சம் ஓவர்! படத்தை மீண்டும் தணிக்கைக்கு அனுப்பியிருக்கிறது அரசு.

சென்சாரால் 'பாஸ்' செய்யப்பட்ட "Fire"க்கே இந்த கதி என்றால், அவர்களிடம் மாட்டிக் கொண்டிருக்கும் தன் "ஜக்ம்" (காயம்) என்ன அடி வாங்கப் போகிறதோ என்று மகேஷ்பட்டுக்கு உள்ளூர உதறல்! முஸ்லிம் பெண் (பூஜா) ஓர் இந்துப் பையனை (அஜய் தேவ்கன்) மண முடிக்கும் கதை. பூஜாபட், தந்தையின் கடைசிப் படத்தை (அப்படித்தான் சொல்லப்படுகிறது) எப்படியாவது காப்பாற்றித் தருமாறு லாலுவிடம் ஸாரி... ரப்ரியிடம் முறையிட்டிருக்கிறாராம்! பேசாமல் சென்ஸார் போர்டில் அரசியல்வாதிகளே அமர்ந்து விடலாம்!



• ஹடே



• ராக்கி

## 'பில்'லும் 'வில்'லும்

டெக்னாலஜி எவ்வளவோ முன்னேறி விட்டது என்கிறார்கள். ஆனால் இன்னும் உள்ளத்தில் இருப்பதை 'க்ளிக்'கும் கலையை காமிராக்கள் கற்கவில்லையே? கற்றிருந்தால், விலை யேற்றம் குறித்து மாநில முதல்வர்களுடன் அத்வானி நடத்திய ஆலோசனையின்போது, மனோகர் ஜோஷியும் கோபிநாத் முண்டேவும் இப்படியா சிரித்துக் கொண்டு போஸ் கொடுப்பது போல் நமக்குத் தெரியும்? "வந்தே மாதரத்தையும் சரஸ்வதி வந்தனத்தையும் பள்ளிகளில் அமலாக்கத் துப்பில்லை என்று எங்கள் தலைவரை அவமானப்படுத்தி மும்பையில் போராட்டமா நடத்துகிறாய்? கிரிக்கெட் விஷயத்தில் உங்கள் தலைவரின் சபதத்தை எப்படி அமலாக்கப் போகிறாய், பார்த்து விடுகிறேன்!" என்று முண்டே நறநறப்பதும், "உங்களுடன் சேர்ந்தால், தேர்தல்களில் மண்ணைக் கவ்வ வேண்டியதுதான்; நைஸாகக் கழற்றி விட எங்களுக்கு வழியா தெரியாது?'' என்று ஜோஷி கனலைக் கக்குவதும், துல்லியமாகத் தெரிந்திருக் காதோ? என்னவோ, 'பில்'லும், 'ஹில்லரி'யும் போல, வில்லும் தாமரையும் கட்டாயக் கடிமணத்தில் இணைந்திருக்கின்றன.

## மும்பை மசாலா!

கல்யாண் உல்லாஸ் நகர் பகுதிகளில் துப்பாக்கியை ஏந்திக் கொண்டு போலீசார் தயார் நிலையில் நிற்பதைப் பார்த்தால், ஏதோ கோட்டையைக் காவல் காப்பது போல்தானிருக்கும். அவர்களை விலக்கிக் கொண்டு பார்த்தால், சாதாரண மருந்து கடையோ அல்லது நர்ஸிங் ஹோமோ தென்படுவது உண்மைதான்! பெரிய மைதானங்களும், கிளப்புகளும், ஐந்து நட்சத்திர



ஓட்டல்களும், 'புக்'காகியிருந்த ரிஸெப்ஷன் பார்ட்டிகள் எல்லாம் கான்சலாகி, பல லட்சங்களை இழந்திருப்பது நிஜம்! இந்தக் கல்யாண சீசனில், மும்பைக்காரர்களின் நகைகளெல்லாம் லாக்கரில் தூங்குவதும் பொய்யல்ல. ஆனால் இந்த நிஜங்களின் மத்தியில் உலாவரும் 'உடான்ஸ்'கள் இருக்கிறதே, அதுதான் உண்மையான மும்பை மசாலா! "நேத்து என் ஃபிரெண்டும் அவன் ஒய்ஃபும் ... ல் (தாஜ், ஒபராய், லீலா... எதுவாவது) சாப்டாங்களா? ஆறு மடங்கா வெயிட்டர் ஒரு பில்லை நீட்டினப்போ இவுங்களுக்கு ஒரே ஷாக்! அவன், பக்கத்து டேபிளை காட்ட, அங்கே நாலு குண்டர்கள்! 'பில்லைக் குடுக்கறீங்களா, இல்லை வெளியில பார்க் பண்ணியிருக்கற உங்க ... (ஃபோர்டு, ஸியல்லோ, எஸ்டீம்... ஏதோ ஒன்று) குடுக்கறீங்களா?"ன்றாங்களாம்..." இப்படியே, அண்டர்வர்ல்டுக்குப் புதுப்புது ஐடியாக்கள் கொடுக்கும் வதந்திகள்! "எக்ஸ்டார்ஷனுக்கு 101 வழிகள்" என்று புத்தகம் ரிலீஸ் பண்ண வேண்டியதுதான் பாக்கி!

### ராக்கிக்கு 'ராக்கி'

நடிகை ராக்கி, தம் பாஸ்போர்ட்டைப் புதுப்பிக்கச் சென்றிருந்தபோது, விஷ்ணு ஹடே என்ற அதிகாரி இவரிடம் முறைகேடாக நடந்து கொண்டதாக கேஸ் போட்டிருந்தார். அதிகாரியோ, ராக்கி தன் பாஸ்போர்ட்டில் சில மாற்றங்கள் செய்திருந்ததைத் தாம் கண்டுபிடித்து விட்டதால், அதை மறைப்பதற்கு பொய் வழக்கு தயாரித்திருப்பதாக வாதாடினார். திடீரென்று வழக்கை ராக்கி வாபஸ் பெற்றுவிட்டதாக செய்திகள் வர, இரு தரப்பு வக்கீல்களிடையேயும் காரசாரமான மோதல்! 'என் கட்சிக்காரர் நிரபராதி என்பது நிரூபணமாகி விட்டது' என்கிறார் ஹடேயின் வக்கீலான மானே ஹிந்தே! 'அதெல்லமில்லை; கேஸை வாபஸ் (withdraw) பெற்றால்தான் நிரபராதி; ஆனால் கேஸ் கம்ப்பௌண்ட் (compound) ஆகிவிட்டது; அதாவது கருணை மன்னிப்பு! ராக்கியின் குடும்ப நண்பரான டாக்டர் கோகலேவின் வீட்டில் இரண்டு பார்ட்டிகளும் சந்தித்தனர். அப்போது ஹடே, நோயுற்றிருக்கும் தம் மனைவியின் சிகிச்சைக்காக அமெரிக்கா செல்ல வேண்டிய அவசரத்தை விளக்கி, ராக்கியிடம் மன்னிப்புக் கேட்டார். கூட வந்திருந்த அவரது டீன் ஏஜ் பெண்ணின் கண்ணீருக்கு இரங்கி, ராக்கி வழக்கைத் தொடர்ந்து நடத்தாமல் விட்டார்' என்கிறார் ராக்கியின் வக்கீலான ராஜு மோரே! ராக்கியிடம் கிராக்கி செய்து விட்டு இப்போது ராக்கி கட்டத் தயாராகிய கதையை வைத்து யாராவது படமெடுப்பார்களா? அட்லீஸ்ட் சீரியல்?

# ராக் பாடகர்களின் பலே ஜாலம்!

### De(a)f Leppard?

ஒரு கூட்டத்துக்கே பூ சுற்றும் வேலையில் அரசியல்வாதிகள் தானே எக்ஸ்பர்ட் என்று நினைக்கிறீர்கள்? ஊஹூம்! ராக் பாடகர்கள் முன் இவர்களெல்லாம் தூசு! மும்பையில், 'லீலா'வில் பிரிட்டிஷ் ராக் பாடகர்கள் டெஃப் லெப்பார்ட் (Def leppard) நடத்திய இசை நிகழ்ச்சியில், முன்னமே பதிவாகி விட்ட பாடல்களுக்கேற்றாற்போல் இவர்கள் வாய் + கை, கால் அசைத்ததை யாராலும் கண்டு பிடிக்க முடியவில்லை! அவ்வளவு தத்ரூபம்! ஆனால் 'வி' சானல் அவார்டுகள்போது, நடுவே CD தகராறு செய்ய, ஹி...ஹி... விஷயம் அம்பேல்! இத்தனை பணம் கொடுத்து நிகழ்ச்சிகளுக்கு வருவது வெறும் ஊமைத்தனமான அசைவுகளுக்கா (அதற்கு டீவி போதாதா?) என ராக் விசிறிகள் குமுறுவது, டெஃப் லெப்பார்ட் காதில் விழுமா? ●

— ஜெயஸ்ரீ ராஜ்



• நெருப்பும்.....



• ...நீரும்!

● ஆர். கோபாலன், பானாஜி.

*? வைகோ மகள் திருமணத்துக்கு பி.ஜே.பி. தலைவர்கள், மத்திய அமைச்சர்கள் விழுந்தடித்துக் கொண்டு ஓடிவர, மாறாக 'அம்மா' ஆப்சென்ட் ஆனது வேடிக்கையாக இல்லை..?*

! அந்த வேடிக்கையாவது பரவாயில்லை. கல்யாணத்தின்போது ம.தி.மு.கவில் ஒரு பிரிவினர் மீண்டும் புலிகள் ஆதரவு கோஷத்தை எழுப்பிப் பேசியது... not at all funny!

● என். பாலகிருஷ்ணன், மதுரை.

*? ஊழல் மயமாகி வரும் இந்தியாவை நீதித்துறை காப்பாற்றும் என்று நம்புகிறீர்களா?*

! இருக்கிற ஒரே நம்பிக்கை அதுதான் – அது ஒன்றுதான்.

● ப. ராமகிருஷ்ணன், ஆவணத்தாங்கோட்டை.

*? கூட்டணியில் இடைவெளி உண்மைதான். தீர்க்க வழி தெரியவில்லை என்கிறாரே ராம்தாஸ்?*

! கூட்டணியாவது ஒன்றாவது? அதுதான் அம்மா அறுத்து எறிந்துவிட்டாரே! சுரணை என்கிற சமாசாரம் கொஞ்சம் போலாவது இருந்தால் இனியேனும் லாவணி பாடுவதை நிறுத்திவிட்டு உருப்படியாக ஏதாவது செய்வார்களாக!

● கே.வி. ராமன், சென்னை - 73.

*? 'Fire' என்ற படம் நம் நாட்டுக் கலாசாரத்தை ஒட்டி அமையவில்லை என்பதால் மும்பை, தில்லியில் சிவசேனை கட்சிக்காரர்கள் சினிமா தியேட்டர்களைத் தாக்குவது சரியா?*

! கலாசாரத்தையொட்டியே கதை எழுத முடியாது. பண்பாடுகள் மீறப்படுவது, சட்டம் புறக்கணிக்கப்படுவது போன்றவைதான் கதை. எந்தக் கதையிலும் conflict உண்டு. அந்த முரண்பாடு யுத்தம் சமுதாயத்திலிருந்துதான் பிறக்கிறது; கதை வடிவம் பெறுகிறது. ஆக கதை, வசனம், திரைப்பட ஆக்கம் முதலியன கலை உணர்வோடு இருக்கின்றனவா? சரியான 'செய்தி' அல்லது 'மெஸேஜ்' மக்களுக்குப் போய்ச் சேருகிறதா? ஆபாசம் தவிர்க்கப்பட்டுள்ளதா? என்பதெல்லாம்தான் கவனிக்கப்பட வேண்டியவை. இது ஒருபுறமிருக்க, ஒரு கலைப்படைப்புக்கு விமர்சன எதிர்ப்பு தெரிவிக்க யாருக்கும் உரிமை உண்டு. ஆனால், அது வன்முறை வடிவம் எடுக்க அனுமதிக்க முடியாது. அது கருத்துச் சுதந்திரத்தில் தலையிடுவதாகும்.

● எல். கோபாலகிருஷ்ணன், வேலூர் - 6.

*? அதென்னங்க, இவ்வளவு அரசியல் சூறாவளியிலும் ஜோதிபாசுவை மட்டும் யாராலும் அசைக்க முடியவில்லை...?*

! ஜோதி பாசு என்ன... ஊழல் தவிர்த்து, முடிந்தவரை மக்களுக்கு நல்லதே செய்தால் யாரையுமே அசைக்க முடியாது.

● ஜெ. கண்ணன், சென்னை - 101. ❑

*? அணுகுண்டு சோதனையைத் தங்களின் மிகப் பெரிய சாதனையாகச் சொல்லி வந்த பா.ஜ.கவால், அணுகுண்டு சோதனை நடத்த மாநிலத்தில் கூட வெற்றிபெற முடியவில்லையே?*

! சராசரி மக்களுக்கு அணுகுண்டு என்கிற கௌரவப் பிரச்னையைவிட வெங்காயம் என்கிற சாப்பாட்டுப் பிரச்னைதான் பெரிது.

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

*? சித்ரா தற்கொலை குறித்து நீதி விசாரணை நடத்தத் தமிழக அரசு உத்தரவிட்டதை ஜெயலலிதாவின் முயற்சிக்குக் கிடைத்த வெற்றியாகக் கருதலாமா?*

! ஆர்.டி.ஓ விசாரணைக்கும் சி.பி.சி.ஐ.டி விசாரணைக்கும் இடையே முரண்பாடு



• ஒற்றைத் தூண்!?

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ஜெ. கண்ணன்,
246, பதினோராவது தெரு,
அண்ணா நகர் மேற்கு,
சென்னை - 101.

வண்ணப்படங்கள் : சௌந்தர்ராஜன்

# தமிழகமே சமத்துவபுரமாக வேண்டும் என்கிறாரே முதல்வர்...?

இருந்ததால்தான் நீதி விசாரணைக்கு உத்தரவு தரப்பட்டுள்ளது. இவ்வாறின்றி, ஜெ எவ்வளவுதான் கரடியாகக் கத்தினாலும் மு.க. அசைந்து கொடுத்திருக்க மாட்டார்.

● ப. லக்ஷ்மி நரசிம்மன், கோவை - 11.

*? உங்களைக் கவர்ந்த விஞ்ஞானக் கண்டுபிடிப்பு எது?*

! பால்பாயிண்ட் பேனா.

● ஆ. கமல்ராஜ், தாரமங்கலம்.

*? காங்கிரஸில் சிலர் அ.தி.மு.கவின் ஆதரவுடன் ஆட்சி அமைப்பது தற்கொலைக்குச் சமமாகும் எனக் கூறியுள்ளனரே?*

! தற்கொலை கூடத் தேவலாம்; இது அதைவிடக் கேவலமான அடிமைத்தனம். முன் அனுபவங்களிலிருந்து கூடப் பாடம் கற்கவில்லையென்றால் அது முழு முட்டாள்தனம்.

● இரா. கமலக்கண்ணன், நாமகிரிப்பேட்டை.

*? காங்கிரஸின் பலம் சோனியாவைத் தவிர வேறென்ன?*

! பி.ஜே.பியின் கத்துக்குட்டித்தனமும் தவறுகளும் உண்டே!

● ஆர்.பி. ஜெயச்சந்திரன், திருச்சி - 9.

*? தமிழகமே சமத்துவபுரமாக மாற வேண்டும் என்கிறாரே நம் முதல்வர்?*

! இதைத்தான் நவீன இலக்கியவாதிகள் மேஜிகல் ரியலிஸம் என்கிறார்கள்!

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

*? மிகச் சிறந்த கட்டடக் கலைக்கு உதாரணமாக, தாஜ்மகாலைக் குறிப்பிட முடியாது என ராம்ஜெத்மலானி கூறியிருப்பது பற்றி?*

! வேதா நிலையத்தைக் குறிப்பிட்டால் மறுக்க மாட்டார் என்று நம்புகிறேன்.

● மேலை பழ நாகப்பன், சென்னை - 41.

*? மீண்டும் ஆயிரம் ரூபாய் நோட்டாமே?*

! வந்தால் என்ன? அதன் மதிப்பு நூறு ரூபாய் அளவுக்குத்தானே இருக்கப் போகிறது!

● இரா. திலிப், திருச்சி - 14.

*? டிசம்பர் ஆறாம் தேதி நடந்தவற்றைக் கெட்ட கனவாக நினைத்து மறந்துவிடுவோம் என்ற மூப்பனாரின் கருத்து அருமைதானே?*

! கருத்து அருமைதான். ஆனால் நடைமுறையில் யோசித்தால்... பாபர் காலத்தையே இன்னும் யாரும் மறக்கவில்லை! ஆறு வருஷத்துக்கு முந்தைய சரித்திரத்தையா மறந்துவிடுவார்கள்!



• வெற்றியா...?

• தோல்வியா?



• மறதியை நம்பி...!



• ஆறாவது தலைவர்!



• தீர்வு தேடி....




நீயும் நானும் பேசின
வார்த்தைகள்
அழிவற்று அலையும் காற்றில்
மெரினாவும் நாடுல்ஸூம்
ஞாபகம் கிளறும், சமயங்களில்.
மோவாய் மச்சமும்
மின்சார ரயில் பயணங்களும்
மோதிக் கொள்ளும்
மண்டைக்குள்
இன்னதென்று அறியா
உணர்வுத் தகிப்பில்
கழிந்த மாலைகள்.
எல்லாம் வடிந்து
உன்னை உனக்கென்றும்
என்னை எனக்கென்றும்
பிரித்துப் போட்ட உலகம்
ஒன்றை மறந்தது:
பிரிவு வெறும் உடலுக்கானது
எரிக்காதிருக்குமோ
நினைவுக் கங்கு?

— துளசி

'கவிதையில் நகைச்சுவை'ன்னு யாராவது தனியா ரிஸர்ச் பண்ணியிருக்காங்களா, தெரியலை. (அந்த அளவுக்கு நம்ம கவிஞர்கள் நகைச்சுவையோட எழுதியிருக்காங்களான்னும் தெரியலை.) பெரும்பாலும் கவிஞர்களுக்கு சீரியஸான விஷயங்கள்தான் அகப்படுதுன்னு நினைக்கறேன். விதிவிலக்கா, ஞானக்கூத்தன் மாதிரி சிலர் ஒண்ணு ரெண்டு ட்ரை பண்ணியிருக்காங்க. அதுகூட ஸடையர் ரகம் - நான் படிச்சவரைக்கும்.

சமீபத்துல விஜயராகவன் என்ற கவிஞர் தன்னோட 'குப்பைக்கூடைக் கவிதைகள்'ங்கற தொகுப்பை (ஸ்டேப்ளர் பின் அடிக்கப்பட்ட, பதினாறு பக்கக் கையெழுத்துப் பிரதி.) எனக்கு அனுப்பியிருந்தார். பல கவிதைகள் நல்ல நகைச்சுவை இழையோட இருந்ததை கவனிச்சேன்.

எந்தக் கவிதையும் இதுவரை பப்ளிஷ் ஆனதில்லைங்கற கவிஞரோட நியாயமான வருத்தம் கலந்த கோபத்தை கவரிங் லெட்டர்லேருந்து தெரிஞ்சுக்கிட்டேன். புண்ணியம் கட்டிக்கிற விதமா இங்க ஒரு கவிதையைத் தொகுப்புலேருந்து தரேன். இதேமாதிரி தமாஷா வாசகர்கள் குட்டிக் கவிதைகள் அனுப்பலாம். சூப்பர் மார்க்கெட்ல டிஸ்ப்ளே பண்ணறதுக்கு ஒரே க்வாலிஃபிகேஷன் - எனக்குப் பிடிச்சிருக்கணும்!

## சுராங்கனி என்றால் என்ன?

## கண்ணன் ஸாரீஸ் (அன்) லிமிடெட்

என்று பாஞ்சாலத்தில்
நடுச்சபையில்
திரௌபதியின் துகில்
உரிக்கப்பட்டதோ,
அன்றே அந்த ஊர்ப்பெண்கள்
செய்த தீர்மானம்:
'புடைவையே வேண்டாம் இனி;
சல்வார் கம்மீஸே சரி.'
கலியுகத்தில்
தெருவுக்குத் தெரு
துச்சாதனர்களைச் சமாளிக்க
கண்ணன் என்ன
குமரன் சில்க்ஸ் முதலாளியா?

\- விஜயராகவன்.

• • •

## மாலு யார்?

'டைம்' மாகஸின்ல 'இந்த நூற்றாண்டின் சிறந்த மனிதர் யார்?'னு ஒரு தேர்தல் நடத்திக்கிட்டிருக்காங்க. (இன்டர்நெட் மூலம் நீங்ககூட யாருக்காவது வோட்டுப் போடலாம்!) காந்தி பேருக்கு ஒரு வோட்டுப் போட்டுட்டு, இதுவரைக்கும் யார் யாருக்கு எத்தனை வோட்டு விழுந்திருக்குன்னு பார்த்து, ஒரு லிஸ்ட் அனுப்பியிருக்காங்க, ஹைதராபாத் லாவண்யா.

அதன்படி இயேசுநாதருக்கு(!) 6,03,406 வோட்டுகள்; ஹிட்லருக்கு 1,76,658; போப் ஜான்



பால் - II க்கு 14,501; ரீகனுக்கு 12,284; சர்ச்சிலுக்கு ஏழாயிரத்து சொச்சம்; ஐன்ஸ்டீனுக்கும் அதே. பில் கேட்ஸுக்கு மூவாயிரம்.

மாதுரிதீட்சித், ரஜினி, மந்திராவுக்கெல்லாம் யாரும் வோட்டுப் போடலை போலிருக்கு. ஃபர்ஸ்ட் ட்வென்டீஸ்ல ஒரே ஒரு இந்தியர் - காந்தி. ஆறாவது இடமாம். (41,366 வோட்டு!)

● ● ●

**ப**த்து காலேஜ் பசங்க ஒண்ணா சேர்ந்தா, உடனே புறப்படற பாட்டு சுராங்கனி.

சிரஞ்சீவித்துவம் அடைந்து விட்ட இந்த 'சுராங்கனிக்கா மாலுக்கென்னாவா' பாட்டுக்கு என்ன அர்த்தம்னு சமீபத்துல தான் தெரிஞ்சது. Thanks to சந்திரமௌலி. (கல்கில ரெகுலரா எழுதறாரே... அவர்தான்) என்னவோ சிங்கள உணவுத் திருவிழாவுக்குப் போயிட்டு, சிங்கள 'கேலிப்ஸோ' இசைக் குழுக்காரங்ககிட்ட தற்செயலா விசாரிச்சிட்டு வந்ததா சொன்னார். (அவங்க ஒவ்வொரு நிகழ்ச்சிலேயும் இதைப் பாடறாங்களாம்.)

'சுராங்கனி'ங்கற சிங்களச் சொல்லுக்கு மீனவப் பொண்ணுன்னு அர்த்தம். 'மாலு'ன்னா மீனாம். விதவிதமான மீன்களைக் கூடைல எடுத்துக்கிட்டு, தெருத் தெருவா போய் விக்கற மீனவப் பொண்ணோட வனப்பையும் நடை அழகையும் வர்ணிக்கற பாட்டாம் அது.

இனிமே பசங்க 'ஸாஹித்ய' அர்த்தம் தெரிஞ்சி, பாவத்தோட பாடலாம்! (சே, சே! சும்மா தமாஷுக்குச் சொன்னேன். தும்புருவைக் கிண்டல் பண்றதா நினைச்சுக்க வேண்டாம்!)

● ● ●

**ஜோ**க் சொல்லி ரொம்ப நாள் ஆச்சு இல்லை? ஒரு குஷ்வந்த்சிங் ப்ராடெக்ட் தரேன், பாருங்க.

ஒரு ஆள் ஜோசியர்கிட்ட போனான். ரேகையெல்லாம் பார்த்துட்டு ஜோசியர், "உனக்கு இப்ப ரொம்பக் கஷ்டகாலம். கிரகங்களெல்லாம் சரியா உலவலை. ஒரு ஆயிரம் ரூபாய் ரெடி பண்ணு. ஒரு தோஷ நிவ்ருதி ஹோமம் பண்ணிறலாம்"னாரு.

"ஐயோ, ஆயிரம் ரூபாயா? என்கிட்ட ஏது அவ்ளோ பணம்?"னு இவன் ஜகா வாங்க, "சரி, ஒரு ஐந்நூறு ரூபா ரெடி பண்ணிடு. போதும்"னாரு ஜோசியர்.

"ஐந்நூறா? சான்ஸே இல்லை."

"நூறு ரூபா?"

"சூ! ஆளை விடுப்பா."

"அட ஒரு அம்பது முடியாதா?"

"சத்தியமா இல்லைங்க."

"ஓ.கே. லாஸ்டா கேக்கறேன். ஜஸ்ட் டென் ருபீஸ்?"

"ப்ச்!"

"ஃபைவ்?"

"இந்தா, நீயே பார்த்துக்கோ"ன்னு பர்ஸை எடுத்துக் கவிழ்த்துக் காண்பிச்சான்.

ஜோசியர் சொன்னார்: "சல்லிக்காசு கூட இல்லையா? கவலையே படாம போ. எந்த கிரகமும் உன்னை ஒண்ணும் பண்ண முடியாது!" ●

— சுமி



"நம்ம டிபார்ட்மெண்டுக்கே அந்த மாயாண்டிதான் பெரிய சவாலா இருக்கான் சார்..."

"ஏன்... ஒழுங்கா மாமூல் தர்றதில்லையா...?"

— சீர்காழி ரேவதி

காம்பவுண்டுக்கு வந்த போது – மணி பதினொன்றாகி விட்டது. இன்று பத்து மணிவாக்கில் இரண்டு லாரிகளுக்கான பார் சல் வந்து விட்டது. எல்லாவற்றையும் சரி பார்த்து வீடு திரும்ப நேரமாகி விட்டது. நேரமாக நேரமாக சித்ராவின் ஞாபகம்தான் வந்தது. கல்யாணமாகி இருபது நாட்கள் தான் ஆகிறது. இன்னும் – அம்மாவுடனோ, அண்ணியுடனோ, தங்கையுடனோ அவள் சரியான உறவை ஏற்படுத்திக் கொள்ள வில்லை. அது வேறு பயமாய் உள்ளது.

அண்ணி – கல்யாணமாகி மறு வீட்டுக் குப் போய் வந்த இரண்டு நாட்களிலேயே அம்மாவிடமும், தங்கையிடமும் வெகு சினேகமாகி விட்டாள். இதுவரை அம்மா வுக்கும், அண்ணிக்கும் இடையே எவ்வித முரண்பாடான நிலையும் ஏற்பட்டதில்லை. தங்கையுடனான உறவும் கூட அவ்வாறே. சித்ரா யாருடனும் சினேகமாகவில்லை – இன்னும். உம்மென்றே இருக்கிறாள். அது அவள் சுபாவமாக இருக்கலாம். ஆனால் பார்ப்பவர்கள் – ராங்கிக்காரியாய் இருக் கிறாளே என்று பேசலாம்.

சிலருக்குப் பேசாமல் இருக்கப் பிடிக்கும். சிலருக்குப் பேசிக் கொண்டிருக்கப் பிடிக் கும். அண்ணனும், அண்ணியும் பேசிக் கொண்டிருக்கும் ரகம். நான் தேவையா னால் மட்டுமே பேசும் ரகம். சித்ரா தேவை யான விஷயங்களைக் கூடப் பேச யோசிக் கிறாள்.

இரண்டாவது மாடியில் வீடு. இரண் டாவது மாடியில் மட்டும் நான்கு போர் ஷன்கள் உள்ளன. ஒரு ஹால், ஒரு கிச்சன் அவ்வளவே. அண்ணனுக்கு கல்யாணமான வுடன், கிச்சனை சுத்தப்படுத்தி, பெட்ரூமாக் கிக் கொண்டாயிற்று. ஹாலுக்கு நடுவே ஒரு திரை கட்டி திரைக்கு அந்தப் பக்கம் கிச்சனாகவும், திரைக்கு இந்தப் பக்கம் ஹாலாகவும் பயன்படுத்திக் கொண் டாயிற்று.

கதவைத் தட்டினேன். சித்ரா வந்து கதவைத் திறந்தாள். கதவோரம் அண்ணா வின் செருப்பு இருந்தது. அண்ணன் ஒரு பார்மஸியில் வேலை பார்க்கிறான். அவ னும் வர கிட்டத்தட்ட என்னைப் போலவே காலதாமதம் ஆகும். யார் முதலில் வரு கிறார்களோ அவர்கள் அன்று பெட்ரூமுக் குள் நுழைந்து கொள்வார்கள். சில சமயம் இதை நினைக்கையில் ரொம்பவும் கேவல மாய்த் தோன்றும். இதற்காகவே வேலை களை வேகவேகமாக முடித்துக் கொண்டு வர வேண்டுமோ என்று தோன்றும்.

கல்யாணம் ஏன் பண்ணினோம் என்று கூடத் தோன்றும். பெட்ரூம் பூட்டியிருந்தது. தங்கை டி.வி. பார்த்துக் கொண்டிருந்தாள். அப்பாவும், அம்மாவும் படுத்திருந்தார்கள். தூங்கி விட்டார்களா என்று தெரியவில்லை. கிச்சன் பக்கம் நுழைந்தோம். திரையை சித்ரா நன்றாக இழுத்து விட்டாள். படுத் திருப்பவர்களுக்கு விளக்கின் வெளிச்சம் தூக்கத்தைக் கெடுக்கலாம்.

கல்யாணத்துக்கு முன்பாகத் தங்கைதான் எத்தனை தாமதமாய் வந்தாலும் சோறு எடுத்து வைப்பாள். அவளுக்கு என் மீது அலாதி பிரியம். இப்போது சமீப நாட் களாய் என்னிடம் ஏதும் பேசுவதில்லையோ என்று தோன்றியது. அப்பாவைத் தவிர்த்து யாரும் என்னிடம் ஏதும் பேசுவதில்லை என்று தோன்றிற்று. பொருளாதாரச் சிக்கல் நிறைய உள்ளது. என்னை விட அண்ண னுக்கு அதிக வருமானம். நான் ஒரு லாரி பார்சல் கம்பெனியில் பணிபுரிகிறேன். படித்த படிப்புக்கும், பார்க்கும் வேலைக்கும் சம்பந்தம் இல்லைதான்.

ஆனாலும் வயிறு இருக்கிறதே... வாழ்ந் தாக வேண்டுமே... சம்பாதித்து ஆக வேண் டுமே... சித்ரா சோறு எடுத்து வைத்தாள். உம்மென்றிருந்தாள். வெறும் ரசம்தான் இருந்தது. ஊறுகாய்தான். கடைசியாய் சாப் பிடுபவர்களுக்கு சாதமும், ஊறுகாயும்தான் மிஞ்சுகிறது. அண்ணி, அண்ணனுக்குத் தனி யாய் எடுத்து வைத்திருப்பாள். ஒளித்து வைத்திருப்பாள் என்று கூடச் சொல்லலாம்.

# நெருக்கமும் நெருடல்களும்



கஷ்டத்தை யாரிடம் சொல்லி அழ முடியும்? இவளுக்கு ஏதாவது வாங்கி வரலாம். சில சமயம் பணச் சிக்கல் ஏற்பட்டு விடுகிறது. திரும்பவும் தோன்றுகிறது, ஏன் கல்யாணம் பண்ணிக் கொண்டோம் என்று. ஆனால் வயசு முப்பதாகி விட்டதே.

சித்ரா உம்மென்றிருந்தாள். 'சாப்பிட்டியா?'

"ம்" என்றாள். சித்ராவின் குரல் வெகு இனிமையாய் இருக்கும். ஆனால் பேசத்தான் காசு கேட்கிறாள். காசு கொடுத்தால் கூடப் பேசுவாளா என்று சந்தேசுந்தான். 'ஏதாவது பேசேன்' என்றேன். சிரித்தாள். எப்போதாவதுதான் பேசுவாள். எப்போதாவதுதான் சிரிப்பாள்.

எனக்கும் அவளிடத்தில் என்ன பேசுவதென்று தெரியவில்லை. அண்ணனும், அண்ணியும் ஓயாமல் பேசிக் கொண்டேயிருப்பர். அப்படி என்னதான் பேசுவார்களோ தெரியாது.

கல்யாணத்துக்கு முன் - ஒருமுறை விளையாட்டாய் நான் "அதென்ன அண்ணனுக்கு மட்டும் அப்படி" என்று அம்மாவிடம்தான் கேட்டேன்.

அண்ணி படக்கென்று சொன்னாள். 'அவரு ரொம்ப சம்பாதிக்கறார்ல' என்று. மனசு செத்து விட்டது. அம்மா ஏதாவது சொல்வாள் என்று பார்த்தேன். அம்மா ஏதும் சொல்லவில்லை. அதற்கு முன்னெல்லாம் அண்ணியிடம் ஏதாவது பேசுவதுண்டு. அதன் பிறகு ஏதும் பேசுவதில்லை. பேச என்ன இருக்கிறது? கணவனுக்கு எடுத்து வைப்போம் என்கிற எண்ணம் இவளுக்கு இல்லை போலும்.

சம்பளம் - வெறும் ஆயிரத்தி இருநூறு ரூபாய். வெளியே சொல்ல வெட்கமாய் இருக்கிறது. கல்யாணத்திற்கு முன் அறுநூறு ரூபாய் கொடுப்பேன். மீதத்தை சேமித்தேன். கல்யாணம் பற்றிப் பேசி முடிவான பிற்பாடு - அம்மாவும், அண்ணியும் சொன்னார்கள். 'இனிமே ஆயிரம் ரூபாய் கொடுக்கணும்...' என்று. மீதம் இருநூறு ரூபாய் உள்ளது. அது போக டெய்லி பத்து, இருபது இடைக்கும். எந்தப் பழக்கமும் இடையாது. மிஞ்சினால் - அம்மாவிடம்தான் கொடுப்பேன். அம்மாவே கணக்குப் பார்க்கும் போது என்

"ஏன் எப்போதும் யார்கிட்டேயும் பேசாமல் உம்மென்று இருக்கே? அம்மாவோட, அண்ணியோட, ஹேமாவோட கலகலவென்று இருந்தாத்தானே உன் மேல அவங்களுக்குப் பிரியம் ஏற்படும். அவங்க டீ.வி. பார்க்கும் போது நீ மட்டும் இந்த ரூம்ல தனியா ஏன் உட்கார்ந்திருக்கணும்?"

"எனக்கு டீ.வி. பார்க்கப் பிடிக்கலே" என்று சிரித்தாள். இவளுக்கு எது பிடிக்கும் என்று தெரியவில்லை. ஆனால் இவளுக்கு எதெல்லாம் பிடிக்காது என்று மட்டும் தெரிந்து விட்டது. போன ஞாயிற்றுக் கிழமை "சினிமாவுக்குப் போகலாமா" என்று கேட்ட போது, "எனக்கு சினிமா பிடிக்காது" என்று கூறிச் சிரித்தாள். அவளுக்குச் சிரித்த முகம்தான். எப்போதும் இதழ்களில் புன்னகை ஒட்டிக்கொண்டேயிருக்கும். இவளால் ஏன் பிறரிடம் ஒட்டிக் கொள்ள முடியவில்லை? பிறரால் ஏன் இவளிடம் ஒட்டிக் கொள்ள முடியவில்லை?

"கோவிலுக்குப் போகலாமா" என்று வெள்ளிக் கிழமை தயக்கத்துடன்தான் கேட்டேன் - 'சாமியே பிடிக்காது' என்று சொல்லி விடுவாளோ என்று. ஆனால் என்ன ஆச்சர்யம் - அவ்வாறேதான் சொன்

னான். "எனக்குக் கடவுள் நம்பிக்கை கிடையாது" என்று. எனக்கு ஆச்சர்யம்தான். பெண்களில் நாத்திகவாதி இருப்பார்களோ என்று. என் துணைவி நாத்திகவாதி. இன்னும் இவளுக்கு என்ன பிடிக்கும் என்றுதான் தெரியவில்லை.

இவளுக்குப் பூ கொடுத்து வசியப்படுத்த முடியாது என்று தோன்றியது. சுற்றிலும் கடவுளின் படங்கள். அம்மா வாரத்துக்கு இரண்டு நாள் விரதம் இருப்பாள். அண்ணி வாரத்துக்கு ஒருநாள் விரதம் இருப்பாள். சாம்பிராணிப் புகை ஹாலை அடைக்கும். எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருப்பாள். ஒருவேளை அம்மாவிடம் சொல்லியிருப்பாளோ - "எனக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை" என்று? இருக்கலாம். அதனால் கூட இவர்களுக்குள் ஒரு விரிசல் ஏற்பட்டிருக்கலாம்.

**சா**ப்பிட்டுக் கை கழுவியபோது - தன் கையில் வைத்திருந்த ஒரு துண்டுச் சீட்டை என்னிடம் நீட்டினாள்.



"நான் கவிதை எழுதுவேன். கதைகளும் எழுதுவேன். பத்திரிகைகள்ல பிரசுரம் கூட ஆகியிருக்கு. இங்க எழுத முடியலை. ஏதாவது எழுதினா, எல்லாரும் வந்து எட்டி எட்டிப் பார்க்கிறாங்க. சாயங்காலம் எல்லோரும் கோவிலுக்குப் போய் இருந்தப்ப உட்கார்ந்து எழுதினேன்..." என்று மொத்தமாய்ப் பேசி முடித்தாள்.

கையைத் துடைத்துக் கொண்டு அந்தச் சீட்டை வாங்கிப் படித்தேன். அற்புதமான கவிதை. அவளைப் பற்றின கவிதை. அந்தக் கவிதையில் அம்மா இருந்தாள். நானும் இருந்தேன். எங்கள் தாம்பத்யம் இருந்தது.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான இயல்பு. அந்த இயல்பை இவள் எதன் பொருட்டு மாற்றிக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது. இவளது சில செய்கைகளுக்காக இவள் மீது நான் கோபப்பட்டிருக்கிறேன். இப்போது இல்லை. பறவைகளின் இயல்பு பறப்பது. நதிகளின் இயல்பு ஓடிக்கொண்டேயிருப்பது. இயல்புப்படி இருக்கட்டுமே. அதனால் யாருக்கும் எந்தத் தீங்கும் இல்லையே. இவள் கவிதை எழுதுவது, கதை எழுதுவது, கடவுள் நம்பிக்கை இல்லாதது - எல்லாமே இங்கே அதிசயம்... என்ன பண்ணுவது... ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கனவு.. ஒவ்வொரு ஆசை...

"கவிதை நல்லா இருக்காங்க?" ஆசையாய், ஆர்வமாய்க் கேட்டாள்.

"ரொம்ப நல்லா இருக்கு."

இன்று இருவரும் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டோம் என்று தோன்றியது. அது சந்தோஷத்தையும் தந்தது.

"அப்படியென்ன லைட்டைப் போட்டுட்டு தொணதொணன்னு பேசிட்டு... சீக்கிரம் போய்ப் படுங்க" என்றாள் அம்மா.

நான் சித்ராவைப் பார்த்தேன். அவளைப் பார்க்கப் பாவமாய் இருந்தது. அவளும் என்னைப் பார்த்தாள். என்னைப் பார்க்க அவளுக்கும் பாவமாய்த் தோன்றியிருக்க வேண்டும். ●

---

● ஷாருக்கான் நேரடியாகத் தமிழுக்கு வருகிறார். இந்தி, தமிழ் என்று ஒரே நேரத்தில் தயாராகும் இப்படத்தை மெட்ரோ பிலிம்ஸ் தயாரிக்கிறது. படத்தை இயக்குபவர் 'ரட்சகன்' படத்தை இயக்கிய ப்ரவீன்காந்தி. மெட்ரோ பிலிம்ஸில் இவருக்காக சிபாரிசு செய்திருப்பவர் ஏ.ஆர். ரஹ்மான்.

# உங்களுக்கு ஒரு எக்ஸாம்! பரிசும் உண்டு!

அன்புள்ள கல்கி வாசகருக்கு,

உங்கள் கல்கியை நீங்கள் அறிந்து, விரும்பிப் படிப்பதுபோல், உங்களை "கல்கி" அறிய விரும்புகிறது. உங்கள் பொழுதுபோக்குகள், உங்கள் ஆசைகள், எதிர்பார்ப்புகள், இவற்றை அறிந்து உங்கள் "கல்கி" உங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்ய விழைகிறது.

இதற்காகச் சிறிது நேரம் ஒதுக்கி, கீழ்க்கண்ட கேள்விகளுக்குத் திருத்தமாக பதில் கூறுமாறு வேண்டுகிறோம். உங்கள் நேரம் பொன்னானது; எனவே பெரும்பாலான பதில்களை ✓ செய்தாலே போதும். இறுதியில் கல்கி பற்றி ஒரு வரி விமர்சனம் எழுதுங்கள். மிகச் சிறந்த விமர்சகர்கள் பத்துப் பேருக்கு புத்தகப் பரிசு. தவிர, குலுக்கல் முறையில் 50 வாசகர்களுக்கு அமரர் கல்கி நூற்றாண்டு முத்திரையிட்ட 1999-ம் ஆண்டுக்கான டைரிகள் புத்தாண்டுப் பரிசாகக் கிடைக்கும். முடிவு தேதி: 26.12.98

1) கல்கியை வாங்கியவுடன் முதலில் நான் விரும்பிப் படிப்பது (பொன்னியின் செல்வன் தவிர): துணுக்குகள் ☐ தலையங்கம் ☐ தராசு பதில்கள் ☐ செய்திக் கட்டுரைகள் ☐ விமர்சனக் கட்டுரைகள் ☐ சிறுகதைகள் ☐ தொடர்கதைகள் ☐ சினிமா செய்திகள் ☐ ஜோதிடம் ☐ பேட்டிகள் ☐ அரசியல் கட்டுரைகள் ☐ அறிவியல்/ மருத்துவக் கட்டுரைகள் ☐

| | சூப்பர் ரகம் | சுமார் ரகம் | போர் |
|---|---|---|---|
| 2) கல்கியில் வெளியாகும் துணுக்குகள்: | ☐ | ☐ | ☐ |
| 3) " தலையங்கம் | ☐ | ☐ | ☐ |
| 4) " தராசு பதில்கள் | ☐ | ☐ | ☐ |
| 5) " செய்திக் கட்டுரைகள் | ☐ | ☐ | ☐ |
| 6) " விமர்சனக் கட்டுரைகள் | ☐ | ☐ | ☐ |
| 7) " சிறுகதைகள் | ☐ | ☐ | ☐ |
| 8) " தொடர்கதைகள் | ☐ | ☐ | ☐ |
| 9) " சினிமா செய்திகள் | ☐ | ☐ | ☐ |
| 10) " அட்டைப்படப் பேட்டிகள் | ☐ | ☐ | ☐ |

11) கடந்த சில கல்கி இதழ்களில் நான் படித்தவற்றுள் இன்னமும் என் மனதை விட்டு அகலாமல் இருப்பது: ..........

12) இந்த (20.12.98) இதழில் நான் படித்தவற்றுள் சிறப்பானதாக நான் கருதுவது: (நீங்கள் ரசித்துப் படித்தவற்றின் தலைப்புகளை வரிசைப்படுத்தி எழுதவும்):

1) .......... 2) .......... 3) ..........

தயாரிப்பு உதவி: ஹன்ஸா ரிஸர்ச் க்ரூப் (பி) லிட், சென்னை.

1) பெயர் :

2) முகவரி :

தொலைபேசி:

| | | |
|---|---|---|
| 4) ஆண்/பெண் | | |
| 5) தங்கள் வீட்டின் தலைவர் (அ) பிரதான ஊதியர் (main earner) | தாங்கள்<br>தங்கள் கணவர்/மனைவி<br>தங்கள் தந்தை<br>தங்கள் உடன் பிறந்தவர்<br>மற்றவர் (விளக்குக) | 1 ✓<br>2 செய்யவும்<br>3<br>4 |
| 6) வயது | 20-ற்கு குறைவு<br>20-29 வரை<br>30-39 வரை<br>40-50 வரை<br>50 + | 1<br>2<br>3<br>4<br>5 |
| 7) படிப்பு | கொஞ்சம் பள்ளி<br>பள்ளி இறுதி<br>+2/டிப்ளோமா<br>பட்டதாரி<br>உயர் கல்வி<br>தொழில்முறைக்கல்வி (Professional)<br>மற்றவை (விளக்குக) | 1<br>2<br>3<br>4<br>5<br>6 |
| 8) வேலை | தனியார் நிறுவனம்<br>அரசாங்க/பொது நிறுவனம்<br>மாணவ/மாணவி<br>சுயதொழில்/வியாபாரம்<br>விவசாயம்<br>இல்லத்தரசி<br>மற்றவை (விளக்குக) | 1<br>2<br>3<br>4<br>5<br>6 |
| 9) அனைத்து வருமானங்களும் சேர்த்து தங்கள் வீட்டில் மாதாந்திர மொத்த வருமானம்... | ரூ. 5000வரை<br>ரூ. 5000 – ரூ. 9999<br>ரூ. 10000 – ரூ 14999<br>ரூ. 15000 – ரூ 19999<br>ரூ. 20000 – ரூ. 24999<br>ரூ. 25000ற்கு மேல் | 1<br>2<br>3<br>4<br>5<br>6 |
| 10) வீட்டில் மொத்தம் நபர்கள் (எழுதுக) | பெரியவர்கள்<br>சிறுவர் | |
| 11) தங்கள் வீட்டில் இவை உள்ளனவா? | கார்/ஜீப்<br>பைக்/ஸ்கூட்டர்<br>மோபட்<br>கலர் டீ.வி.<br>VCR<br>ஃப்ரிட்ஜ்<br>கம்ப்யூட்டர்<br>வாஷிங் மிஷின்<br>ம்யூசிக் ஸிஸ்டம் | 1<br>2<br>3<br>4<br>5<br>6<br>7<br>8<br>9 |
| 12) தங்கள் வீட்டில் அடுத்த 12 மாதங்களில் வாங்கத் திட்டமிட்டிருப்பது. | கார்/ஜீப்<br>பைக்/ஸ்கூட்டர்<br>மோபட் | 1<br>2<br>3 |

தயாரிப்பு உதவி: ஹன்ஸா ரிஸர்ச் க்ரூப் (பி) லிட்., சென்னை.

| | | |
|---|---|---|
| | கலர் டீ.வி.<br>VCR<br>ஃப்ரிட்ஜ்<br>கம்ப்யூட்டர்<br>வாஷிங் மிஷின்<br>ம்யூசிக் ஸிஸ்டம்<br>வீடு/மனை/ஃப்ளாட் | 4<br>5<br>6<br>7<br>8<br>9<br>10 |
| 13) சராசரியாக ஒரு மாதத்தில் தங்கள் வீட்டில் இப்பொருட்களுக்கு நீங்கள் செலவழிப்பது ரூபாய்.......... (எழுதுக) | துணிமணி<br>நகை<br>அழகு சாதனங்கள்<br>வெளியில் உணவருந்துதல்<br>காசட்டுகள் | |
| 14) தங்கள் சேமிப்பு/முதலீட்டு முறைகள்... | வங்கி<br>அரசாங்க சேமிப்புத் திட்டங்கள் (உ-ம் IVP, KVP, NSC..)<br>தனியார் நிறுவனங்கள்<br>ரியல் எஸ்டேட்<br>தங்கம்<br>பங்குச்சந்தை<br>ம்யூச்சுவல் ஃபண்டு<br>ஆயுள்காப்பு<br>மற்றவை (விளக்குக) | 1<br>2<br><br>3<br>4<br>5<br>6<br>7<br>8 |
| 15) தங்கள் முக்கிய பொழுது போக்குகள்... | சினிமா<br>பாட்டு<br>விளையாட்டு<br>சமையல்<br>கைவேலை<br>புத்தகங்கள்<br>மற்றவை (விளக்குக) | 1<br>2<br>3<br>4<br>5<br>6 |
| 16) தாங்கள் விடுமுறையில் வெளியூர் செல்வது... | குறைந்தது வருடத்தில் 2 முறை<br>வருடத்தில் 1 முறை<br>2 வருடங்களில் 1 முறை<br>அதற்கும் குறைவாக | 1<br>2<br>3<br>4 |
| 17. தாங்கள் வசிப்பது..... | சொந்த வீடு<br>வாடகை வீடு<br>கம்பெனி லீஸ் வீடு | 1<br>2<br>3 |
| 18) வீட்டில் மொத்தம் கல்கி வாசகர்கள் (எழுதுக) | பெரியவர்கள்<br>சிறுவர் | |
| 19) தாங்கள் கல்கி படிப்பது... | பிரதி இதழும்<br>இரண்டில் 1 இதழ்<br>மூன்றில் 1 இதழ்<br>அதற்கும் குறைவாக | 1<br>2<br>3<br>4 |
| 20) தாங்கள் கல்கி படிக்கும் முறை... | சந்தா<br>பேப்பர் கடை<br>நூலகம்<br>மற்றவை (விளக்குக) | 1<br>2<br>3 |

**கல்கி இதழ் பற்றி ஒரு வரி விமர்சனம்:** ..............................................................

..........................................................................................................

**தயாரிப்பு உதவி: ஹன்ஸா ரிஸர்ச் க்ரூப் (பி) லிட், சென்னை.**

# டீ.வி. வாங்கப்

மாதுரி

**மே**ற்கத்திய கலாசாரத் தாக்குதலால் ஏற்பட்டிருக்கும் 'கன்ஸ்யூமரிஸம்' பற்றி இரண்டு பெண்கள், இரண்டு வயோதிக வாலிபர்களோடு டீ.வி.யில் ராகம் பாடி விவாதித்துக் கொண்டிருந்தார்கள்.

உருளைக்கிழங்கு வேஃபர்ஸ் கடித்துக் கொண்டே உற்றுப் பார்த்துக் கொண்டிருந் தனர் சந்தானம் தம்பதியர்.

"ரொம்ப நாளா டீ.வி.யை மாத்தணும்னு சொல்லிட்டிருக்கேன். பாருங்க, அந்தப் பொண்ணு முகமெல்லாம் ஒரே புள்ளி புள்ளியா தெரியுது."

"மல்லி, அது டீ.வி. ஃபால்ட் இல்ல. அவ மூஞ்சில முகப்பரு வடு."

"இந்த சால்ஜாப்பெல்லாம் வேணாம்! அந்தப் பொண்ணு முகப்பரு போக்குற க்ரீமுக்கு மாடலா வேற வர்றா. அதனால நம்ம டீ.விதான் காலி!"

"இல்ல..."

"பேச்சே வேண்டாம்! வேற டீ.வி வாங்க றோம், அதுவும் பெரிசா!" என்று முடித்தாள் சந்தானத்தின் மனைவி மல்லிகா.

"...ம்... முகப்பரு வடு இன்னும் பள்ளம் பள்ளமா தெரியப் போறது!" என முணு முணுத்தார்.

தீர்ப்பு வழங்கிய பின் என்ன செய்ய? மறுநாள் கடைக்குக் கிளம்பினார்.

"மல்லி போலாமா? டீ.வி வாங் கணும். மறந்திட்டியா?"

"நான் எதுக்கு? ஏதோ வைர நெக்லஸ், ஃப்ளாட், பங்களான்னா கூட நான் வரணும். இத நீங்களே பார்த் துக்குங்க. ஆனா வாங்கறது பெரிசு."

**ஷோ**க் அண்ட் கோ வில் சந்தானம் நுழைந்ததுதான் தாமதம், சீருடை அணிந்த பத்துப் பதினைந்து பேர் அவர் மீது தாவி "சார் டீ.வியா? ஆடியோவா? ப்ரிஜ், வாஷிங் மெஷின், மிக்ஸியா?" என்று மொய்த்துக் கொண்டார்கள்.

சற்றே சுதாரித்து "டீ.வி" என்றார்.

"மச்சி விக்கியோட பார்ட்டி" என்று மற்றவர்கள் நகர்ந்தனர்.

"வாங்க சார் காட்டறேன்" என்று அழைத்துச் சென்றான்.

"சங்சாம், பாக, அம்மாய், டோனி, டாம்சன், மச்சூபி, இப்படி பல ப்ராண்ட் இருக்கு" என டீ.வி. குவியலைக் காட்டி னான். "உங்களுக்குப் பிடிச்ச...".

"நம்ம ஊர் அயிட்டம் எதுவும்?"

"எல்லாம் நம்ப ஊர்தான். பார்ட்ஸ் ஜப்பான், கொரியாவுலேயிருந்து வரும். டெல்லியிலே டப்பால போடறாங்க."

"டெல்லியிலே டப்பால போடறாங் களா!"

"அஸெம்பிள் பண்ணறாங்க, அதை சுருக்கமா சொன்னேன்!"

"ஓஹோ... சரி முதல்ல, எந்த சைஸ் பெஸ்ட்?"

"36 - 24 - 36!"

"வீட்ல கேட்டா கொன்னுடுவாங்க, டீ.வி. சைஸ் சொல்லு!"

"இருபத்தொரு இஞ்ச், இருபத்தஞ்சு, இருபத்தொன்பது, முப்பத்திரெண்டு, ஆஃப் செஞ்சுரி. இப்படி பல சைஸ். சீரியல் பார்க்க 21 இஞ்ச் போதும், படத்துக்கு 25, ஹாலிவுட் படம்னா நிச்சயமா 32, வயலும் வாழ்வும்னா 19..."

"அப்பா கொஞ்சம் இரு. அந்த மாடல் பாகவா?"

"யெஸ்."

"அதில 25 இஞ்ச் இருக்கா?"

"சாரி சார். பாக 25 போடறதில்ல. 21க்கப்புறம் நேரா 29"

"சே! சரி அம்மாய்ல?"

"இருக்கு. அதவிட சங்சாம்ல அதே சைஸ், ஸ்டீரியோ ஸ்பீக்கர்களோடு வருது. ஆயிரம் ரூபாதான் அதிகம்."

"அம்மாய் என்ன விலை?"

"சங்சாமவிட ஆயிரம் ரூபா கம்மி, சொன்னேனே!"

"ஆ... சொன்னீங்கில்ல..." ரோபோ போல தலையாட்டினார் சந்தானம்.

"இதே டிசைன் KGல."

"KG ன்னு ஒரு ப்ராண்டா? பெருங்காயம் மாதிரி!"

"யெஸ். KGல டிஜிடல் ஸ்க்ரீன். டி.வீல வர முகம் பிடிக்கலேன்னா ரிமோட்ட வைச்சே மாத்திக்கலாம்!"

"என்ன முகத்தையே மாத்தலாமா?"

"ஆமாம். இப்ப ஒரு பொண்ணு நியூஸ் படிக்கிறா, உங்களுக்கு ரம்பா நியூஸ் படிச்சா



# போனேன் ஒரு..

நல்லாயிருக்கும்னு தோணுது. 'டக்'னு அவ தலையை தூக்கிட்டு மெமரிலேயிருந்து ரம்பா தலையைப் பொருத்திடலாம்.''

''கொலைகாரப் பசங்களா இருப்பாங்க போலிருக்கு!''

''இந்த மாடல் அதவிட ரெண்டாயிரம் ஜாஸ்தி. டோனில 'ஹை'ன்னு ஒரு மாடல், காலையிலேயிருந்து நைட் வரைக்கும் என்ன ப்ரோகிராம் எந்த சேனல்னு செட் பண்ணிட்டா, அதுவா ஆன் பண்ணி சேனலையும் டயப்படி மாத்திக்கும்.''

''ஆச்சரியமாயிருக்கு!''

''இதென்ன ஆச்சர்யம்? டாம்சன்ல கார்ட்லெஸ் டீ.வி. கரண்ட்டே வேண்டாம். முழுக்க முழுக்க சோலார் செல். ஆனா ஏழாயிரம் விலை கூட. நாலு வருஷ கரண்ட் பில் மிச்சப்படுத்திறதில கூடுதல் விலைய சரிக் கட்டிடலாம். மறந்திட்டேனே, பாஉல கண்ஸ்கிரின்னு ஒரு மாடல், பார்க்கிற கண்ணுக்குக் குளிர்ச்சியா...''

''போதும்பா தலை சுத்தறது! ஒவ்வொரு ப்ரோக்ராமுக்கு ஒரு டீ.வி. கரண்ட் பில்லை மிச்சப்படுத்த ஒரு டீ.வி, கண்களைப் பாது காக்க ஒண்ணு. அய்யோ!''

**"எ**க்ஸ்க்யூஸ் மீ சார்" என்ற இனிய குரல் அவர் பேச்சை தடை செய்தது. திரும்பினார். ஏர்ஹோஸ்டஸ் போல ஒரு மங்கை.

''யெஸ்...ம்மா'' என்றார் கனிவோடு.

''டீ.வி வாங் கறீங்களா சார்?''

''வாங்கலாம்னு வந்திருக்கேன், ஏன் உங்க பிராண்ட் ஏதா வது இருக்கா?''

''இல்லல்ல சார். நாங்க டீ.வி ஸ்டாண்ட் விக்கறோம். புதுமையான ஸ்டாண்ட்.''

''நான் இன்னும் டீ.வியே வாங்கலை.''

''எங்க ஸ்டாண்டோட புதுமையே அதான். டீ.வி வேணுங்கிற அவசியமில்ல, இருந்தா நல்லது.''

''புரியலையே?''

''நாங்க மார்க்கெட் செய்யறது டீ.வி ஸ்டாண்ட் கம் ப்ரிஜ். ப்ரிஜ் மேல டீ.வியை வைச்சு பார்த்துக்கலாம். நல்ல உயரத்தில இருக்கிறதால கண்ணுக்குச் சோர்வு கம்மி, பாதுகாப்பும்கூட!''

''ப்ரிஜ்ஜா?''

''ஸ்டாண்ட் கம் ப்ரிஜ் கம் ஏசி கம் ஹீட் டர் கம்...''

''ப்ளீஸ்! இரும்மா. ப்ரிஜ் கம் ஏசியா?''

என்றபடி டீ.வி குவியலை விட்டு விலகி அந்தப் பெண்ணோடு ப்ரிஜ் பக்கம் வந்தார்.

"கம்பெனி பேர் என்னம்மா சொன்னே?"

"ஜோர்பூல். V.S. கம்பெனி சார்!"

"ஆ- ஜோர்பூல்! ஜோர்பூல்னு டீவில கூட பாட்டு வருமே... Good!"

ப்ரிஜ்ஜிடம் வந்தாள்.

"இதான் சார் மாடல்."

சிங்கிள் டோர், டபுள் டோர் என்று உண்டு. இது உடம்பெல்லாம் டோர், எல்லாப் பக்கமும் டோராக இருந்தது.

இனிமை ததும்பும் மழலையில் விவரிக்கத் தொடங்கினாள்.

"டாப் டோரை மூடி, சைட் டோரை திறந்தா ப்ரிஜ் கம் ரூம் ஹீட்டர், டாப் டோரை மூடி கீழ் டோரை திறந்தா ப்ரிஜ் கம் ஏசி, சைட் டோரை மூடி மேல் டோரை..."

"அது சரிம்மா! கரண்ட் இல்லாட்டி என்ன செய்யறது?"

எது இருந்து என்ன பயன் என்றவாறு மடக்கினார் சந்தானம்.

"வீட்ல கட்டை அடுப்பா? கேஸா?"

சுரீரென்றது அவருக்கு.

"ஏன்? கேஸ்தான்."

"அப்ப காஸ் சிலிண்டர்லேயிருந்து ட்யூப்பை பிடுங்கி இங்க பொருத்தினா ஜெனரேட்டர் ஆன் ஆயிடும். உள்ளுக்குள்ளேயே ஜெனரேட்டர். ப்ரிஜ், ஏசி எல்லாம் ஓடும். அப்புறம் இந்த ஆன்டெனாவை நீட்டினா நுனில ஒரு லைட் க்ரெக்டா டீவிக்கு மேல எரியும், கண்களுக்குப் பாதுகாப்பு. அதோட இந்த லைட்டே கொசு வர்த்தி மாதிரி. கொசுவே வராது."

"பிரமாதம்! இப்படி ஒரு ஸ்டாண்டா, வாங்கிட வேண்டியதுதான்!"

● சீக்கிரம் இசையமைத்துத் தருவதில்லை என்பது ரகுமான் மீது சொல்லப்படும் பொதுவான குற்றச்சாட்டு. இதிலிருந்து தப்பிக்க ஒரு வழி கண்டுபிடித்தார்கள் புதிதாக வந்திருக்கும் இயக்குநர்கள். அதாவது, ரகுமானை உல்லாசப் பயணமாக எங்காவது வெளிநாடு கடத்திக் கொண்டு போய்விடுவது. பத்துப் பதினைந்து நாள் கூடவே சுற்றி, குறைந்தது இரண்டு, மூன்று ட்யூன்களை வது பிராய்ந்து விடுவது! ரகுமான் இசையில் படம் தயாரிக்கும் தயாரிப்பாளர்கள். பட்ஜெட்டில் இந்த உல்லாச உலாவுக்கு ஒரு கணிசமான தொகை ஒதுக்க வேண்டியது. காலத்தின் கட்டாயமாகியிருக்கிறது!

**வீ**ட்டிற்குள் வந்தார். உள்ளே மல்லி,

"உங்களை என்ன வாங்க கடைக்கு அனுப்பினேன்?"

"டீவி!"

"என்ன வாங்கினீங்க?"

"டீவி ஸ்டாண்ட்..."

"ஸ்டாண்ட் இந்தா இருக்கு. டீவி எங்க?"

"அதான் உள்ள இருக்கே" என்றபடி உள்ளே ஓடினார்.

டீ.வியில் 'கன்ஸ்யூமரிஸம்' தொடர்ச்சி இரண்டாம் பாகம் ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தது. ●

# நெய்வேலி மாநகரில்
# ஸ்ரீ அதிருத்ர மஹாயக்ஞம்

நெய்வேலி மாநகரில் ஸ்ரீ அதிருத்ர மஹா யக்ஞம் 22.1.99 முதல் 1.2.99வரை (11 நாட்கள்) ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசார்யர்கள் மற்றும் குருமஹா ஸந்நிதானம் (திருப்பனந்தாள், திருவாவடுதுறை, தர்மபுரம்) அனுக்கிரகத்துடன் ஸ்ரீ நடராஜர் கோவில் வளாகம், வட்டம்-16ல் நடக்க இருக்கிறது. உலகில் நிலவி வரும் பலவிதமான கேடுகளை நீக்கி எல்லோருக்கும் நல்வாழ்வை அருளும் மஹாயக்ஞம் இது. இத்துடன் அம்பிகையின் அருளை அள்ளித் தரும் **"சதசண்டி"** யக்ஞமும் நடக்க இருக்கிறது. மிகுந்த பொருட் செலவில் நடக்க இருக்கும் இந்த வேள்விகளுக்கு பொருளுதவி, மற்றும் ஹோமங்களுக்கு வேண்டிய நெய், வஸ்த்ரம், திரவியங்கள் இவற்றினை உதவி செய்து ஸ்ரீ உமா மஹேஸ்வரரின் அருளை பெற உங்களை அழைக்கிறோம்.

குறிப்பு:- தங்களால் இயன்ற நன்கொடைகள், கட்டளைகள் அனைத்தையும் நெய்வேலி அதிருத்ரம மஹாயக்ஞக் கமிட்டி C/o சத்ஸங்கம் வட்டம் - 2. நெய்வேலி - 60 7801 என்ற பெயருக்கு DD/காசோலை எடுத்து அனுப்புமாறு தாழ்மையுடன் கேட்டு கொள்கிறோம்.

# பொன்னியின் செல்வன்

## பூர்வ கதை




**கல்கி கலெக்ஷன்**

தமிழகத்தின் சரித்திரத்தில் இராஜ ராஜ சோழர் என்று புகழ் பெற்ற அருள்மொழி வர்மர் இளவரசராயிருந்த சமயத்தில் இலங்கையில் சோழ நாட்டுப் படைகளுக்குத் தலைமை வகித்துப் போர் நடத்திக் கொண்டிருந்தார். அவருடைய தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்தி நோய் வாய்ப்பட்டுத் தஞ்சையில் படுத்த படுக்கையில் இருந்தார். சுந்தர சோழரின் மூத்த குமாரரும் பட்டத்து இளவரசருமான ஆதித்த கரிகாலர் காஞ்சியில் தங்கியிருந்தார். இரண்டு இராஜ குமாரர்களுக்கும் நடுவில் பிறந்தவரான குந்தவை பழையாறை நகரில் செம்பியன் மாதேவியின் ஆதரவில் இருந்து வந்தார்.

சோழ சாம்ராஜ்யத்துப் பெருந்தரத்து அதிகாரிகளிலே மிக முக்கியமானவர்கள் அண்ணன் தம்பிகளான பழுவேட்டரையர்கள். பெரிய பழுவேட்டரையர் ஏறக்குறையச் சோழ நாட்டின் சர்வாதிகாரி பதவியை வகித்து வந்தார். சாம்ராஜ்யத்தின் தன பொக்கிஷமும் தானிய பண்டக சாலையும் அவருடைய வசத்தில் இருந்து வந்தன. சின்னப் பழுவேட்டரையர் தஞ்சைக் கோட்டையின் தளபதி பதவியை வகித்து வந்தார். சுந்தர சோழ சக்கரவர்த்தி பெரிதும் இந்த இரு சகோதரர்களின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தார்.

பெரிய பழுவேட்டரையர் முதுமைப் பிராயத்தில் நந்தினி என்னும் அழகிய பெண்ணை மணந்தார். நந்தினியும் குந்தவையும் ஒருவரையொருவர் அவமானப்படுத்தவும் பழிவாங்கவும் சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

நந்தினியின் தூண்டுதல் காரணமாகப் பெரிய பழுவேட்டரையர் ஒரு பெரிய சதியில் ஈடுபட்டார். சுந்தர சோழரின் இரு புதல்வர்களுக்கும் பட்டமில்லாமல் செய்துவிட்டு, அவருடைய பெரிய தந்தை மகன் மதுராந்தகனைச் சிம்மாசனத்தில் ஏற்றத் தீர்மானித்தார்.

**அமரர் கல்கி**

இதற்குக் கடம்பூர் சம்புவரையர் முதலிய சிற்றரசர்களின் பூரண சம்மதத்தையும் பெற்றார். காஞ்சியிலிருந்த ஆதித்த கரிகாலர் தம் தந்தையைத் தஞ்சையிலிருந்து காஞ்சிக்கு வரும்படி செய்வதற்காகக் காஞ்சியில் ஒரு பொன் மாளிகை கட்டினார். அதை வந்து பார்க்கும்படி தந்தையை வேண்டிக் கொண்டு தஞ்சைக்கு ஓலை கொடுத்து அனுப்பினார். ஓலையை எடுத்துச் சென்றவன் வந்தியத்தேவன் என்னும் பழைய வாணர் குலத்து வீரன். அவன் வழியில் சம்புவரையர் மாளிகையில் தங்கியிருந்தபோது மேற்படி சதியாலோசனையைப் பற்றித் தெரிந்து கொண்டான். தஞ்சை சென்று சுந்தர சோழரிடம் ஓலையைக் கொடுத்த பிறகு பழையாறைக்குப் போய்க் குந்தவைதேவியைக் கண்டான். அவளிடம் தான் அறிந்ததையெல்லாம் சொன்னான். குந்தவை அவனை இலங்கை சென்று தன் அருமைச் சகோதரனை அழைத்து வரும்படி ஏவினாள். வழியில் பல அபாயங்களுக்குத் தப்பி வந்தியத்தேவன் இலங்கை வந்து அருள்மொழி வர்மரிடம் குந்தவையின் ஓலையைக் கொடுத்தான். அதேசமயத்தில் இளவரசரைத் தேடிக் கொண்டு இன்னும் சிலரும் வந்து சேர்ந்தார்கள். முதன் மந்திரி அநிருத்தர், ஆழ்வார்க்கடியானிடம் இளவரசர் இலங்கையிலேயே இருத்தல் நலம் என்று சொல்லி அனுப்பினார். தம்பியைக் கையோடு காஞ்சிக்கு அழைத்து வரும்படி ஆதித்த கரிகாலர் பார்த்திபேந்திரனை அனுப்பியிருந்தார். சோழ குலத்தை அடியோடு கருவறுக்கச் சபதம் செய்திருந்த கொலைகாரர் கூட்டத்தைச் சேர்ந்த இருவரும் இலங்கைக்கு வந்திருந்தார்கள்.

அருள்மொழி வர்மர் இலங்கைக்கு வந்த புதிதில் அவர் தண்டு இறங்கியிருந்த இடத்தை ஊமை ஸ்திரி ஒருத்தி சுற்றிச் சுற்றி ஓலமிட்டாள். இளவரசர் அவளருகில் சென்று பார்த்தபோது குழந்தைப் பிராயத்தில் தன்னைக் காவேரி நதியில் மூழ்கிப் போய் விடாமல் காப்பாற்றியவள் அவள்தான் என்று அறிந்தார். இளவரசர் தங்கியிருந்த இடம் கொடிய நடுக்கு சுரம் பரவியிருந்த இடம் என்பதை அம் மாதரசி உணர்த்தி அங்கிருந்து போய் விடும்படி எச்சரித்தாள்.

அநுராதபுரத்தின் வீதிகளில் அருள்மொழி வர்மரும் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் மகாபோதி விஹாரத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தபோது அவர்கள் மீது ஒரு பழைய மாளிகையின் முகப்பு இடிந்து விழுவதற்கிருந்தது. அந்தச்சமயத்தில் மேற்கூறிய மூதாட்டி தோன்றிக் கைதட்டி அழைத்து அவர்களைக் காப்பாற்றினாள்.

மூவரும் இளவரசர் வழக்கமாகத் தங்கிய விடுதிக்குச் சென்று படுத்துக் கொண்டார்கள். ஆனால் ஒருவருக்கும் தூக்கம் வரவில்லை. இளவரசர் இலங்கையில் அம் மூதாட்டியைத் தாம் சந்தித்த வரலாற்றை அவர்களுக்குக் கூறினார்.

## முப்பத்து எட்டாம் அத்தியாயம்

# சித்திரங்கள் பேசின!



ளவரசர் சட்டென்று கதையை நிறுத்தி விட்டு, ''உங்களுக்கு ஏதாவது காலடிச் சத்தம் காதில் விழுந்ததா?'' என்று கேட்டார்.

கதையில் முழு கவனம் செலுத்தியிருந்த தோழர்கள் இருவரும் தங்களுக்கு ஒன்றும் கேட்கவில்லை என்றார்கள்.

ஆழ்வார்க்கடியான் சற்று நிதானித்து விட்டு ''நாம் உட்கார்ந்திருக்குமிடம் முன்னை விட இப்போது உஷ்ணமாயிருக்கிறதே!'' என்றான்.

''ஏதோ புகை நாற்றம்கூட வருகிறது!'' என்றான் வந்தியத்தேவன்.

''ஐயா! இந்த இடத்தில் அபாயம் ஒன்றுமில்லையே?'' என்று ஆழ்வார்க்கடியான் கவலையுடன் கேட்டான்.

''அபாயம் ஏதாவது இருந்தால் காவேரி அம்மன் கட்டாயம் வந்து எச்சரிப்பாள். கவலை வேண்டாம்!'' என்று இளவரசர் கூறி, மேலும் தொடர்ந்து சொன்னார்:-

''அந்த இடத்தை விட்டு உடனே தாவடியைக் கிளப்பிக்கொண்டு புறப்பட்டோம். அப்படியும் நமது வீரர்களில் பத்துப் பேருக்குக் குளிர் காய்ச்சல் வந்து

விட்டது. அம்மம்மா! அந்தக் காய்ச்சல் மிகப் பொல்லாதது. எப்பேர்ப்பட்ட வீர னையும் கோழையாக்கி விடும். உடம் பெல்லாம் போரில் காயம் பட்டும் கலங் காதவர்கள் மூன்று நாள் காய்ச்சலில் மனம் தளர்ந்து 'ஊருக்குப் போக வேண் டும்' என்று சொல்ல ஆரம்பித்து விடுவார் கள். சோழர்களின் குல தெய்வமான துர்க்கா பரமேஸ்வரிதான் அந்த ஊமை ஸ்திரீயின் உருவத்தில் வந்து எங்களை அங்கிருந்து புறப்படச் செய்தாள் என்று கருதினேன். அதற்குப் பிறகும் தேவி என்னைக் கைவிட்டு விடவில்லை. நான் போகுமிடங்களுக்கெல்லாம் அவளும் தொடர்ந்து வந்து கொண்டிருந்தாள். வன விலங்குகள், மலைப் பாம்புகள், மறைந் திருந்த எதிரிகள் – இத்தகைய பல ஆபத்து களிலிருந்து என்னைக் காப்பாற்றினாள். திடீரென்று எப்படித் தோன்றுவாளோ, அப்படியே மறைந்தும் விடுவாள். சில நாளைக்குள் அந்தத் தேவியுடன் முக பாவத்தினாலும் சைகைகளினாலும் பேசும் சக்தியை நான் பெற்று விட்டேன். பெரும் பாலும் அவள் உள்ளத்தில் நினைப்பதை என் நெஞ்சம் தெரிந்து கொண்டு விடும். அது மட்டுமல்ல; அம்மாதரசியைக் கண் ணால் பார்க்காமலேயே அவள் பக்கத்தில் எங்கேயோ இருக்கிறாள் என்பதை நான் அறிந்து கொள்வேன். இப்போது கூட.... நல்லது; நீங்கள் உடனே சென்று உங்கள் படுக்கையில் படுத்துக் கொள்ளுங்கள். தூக்கம் வராவிட்டாலும் தூங்குவது போல் இருங்கள்! சீக்கிரம்!" என்றார் இளவரசர்.

அவ்விதமே இருவரும் சென்று படுத்துக் கொண்டார்கள். கண்களை மூடிக் கொள் ளவும் முயன்றார்கள். ஆனால் அவர்களை மீறிய ஆவலினால் கண்ணிமைகள் மூடிக் கொள்ள மறுத்தன.

பார்த்துக் கொண்டிருக்கும் போதே நிலா வெளிச்சம் வந்த பலகணியின் அருகில் ஓர் உருவம் வந்து நின்றது. வீதியில் இடிந்து விழுந்து மாளிகைக்கு எதிரில் பார்த்த அதே ஸ்திரீயின் உருவந்தான். மிக மெல்லிய 'உஸ்' என்ற சத்தம் அங்கிருந்து வந்தது. அருள்மொழி வர்மர் எழுந்து பலகணி ஓரமாகச் சென்றார். வெளியில் நின்ற உருவம் ஏதோ சமிக்ஞை செய்தது. இளவரசர் அந்த அறையில் படுத்திருந்த தன் தோழர்களைச் சுட்டிக் காட்டினார். சமிக்ஞை பாஷையில் அதற்கும் ஏதோ மறுமொழி கிடைத்தது.

உடனே அருள்மொழி வர்மர் தோழர் கள் இருவரையும் தன்னைத் தொடர்ந்து வரும்படி சொல்லிவிட்டு அம்மாளிகையி லிருந்து வெளியேறினார். அந்த மூதாட்டி சென்ற வழியில் மூவரும் மௌனமாக நடந்தார்கள். இருபுறமும் மரங்கள் அடர்ந்து இருள் சூழ்ந்திருந்த பாதையில் அவர்கள் வெகுதூரம் சென்ற பிறகு திடீரென்று நிலா வெளிச்சத்தில் ஒரு அதி சயமான காட்சியைக் கண்டார்கள். கரிய பெரிய யானைகள் பல வரிசையாக நின்று, பிரும்மாண்டமான ஸ்தூபம் ஒன்றைக் காவல் புரிந்து கொண்டிருந்தன. அதைப் பார்த்ததும் வந்தியத்தேவனுடைய மூச்சு நின்று விடும் போலிருந்தது. அந்த மூதாட் டியோ சிறிதும் தயங்காமல் யானைக் கூட் டத்தை நோக்கி நடந்தாள். ஆழ்வார்க்கடி யான் வந்தியத்தேவன் காதோடு "அந்த யானைச் சிலைகள் எவ்வளவு தத்ரூபமாக இருக்கின்றன பார்த்தாயா?" என்று சொன்ன பிறகுதான் வந்தியத்தேவனு டைய திகைப்பு நீங்கியது. ஆயினும் அவனுடைய வியப்பு நீங்கிய பாடில்லை.

ஒன்றோடொன்று நெருக்கி இடித்துக் கொண்டு நின்று, அந்த மலை போன்ற ஸ்தூபத்தைத் தாங்கிக் கொண்டிருப்பது போல் அமைக்கப்பட்டிருந்த யானைச் சிலை ஒவ்வொன்றுக்கும் இரண்டு நீண்ட தந்தங்கள் இருந்தன. அவ்விதம் வரிசை யாக நின்ற நூற்றுக்கணக்கான யானை களில் ஒன்றே ஒன்றுக்கு மட்டும் ஒரு தந்தம் ஒடிந்து போயிருந்தது. அந்த யானை அருகில் அவள் சென்றாள். அதன் காலடி யில் கிடந்த பெரிய கருங்கல் ஒன்றை அகற்றினாள். அகற்றிய இடத்தில் ஒரு படிக்கட்டு காணப்பட்டது. அதன் வழி யாக அவள் இறங்கிச் செல்ல, மற்றவர் களும் பின் தொடர்ந்தார்கள். படிக்கட்டில் இறங்கிச் சிறிது தூரம் குறுகலான வழியில்

சென்றதும் ஒரு மண்டபம் காணப்பட்டது. அதில் இரண்டு பெரிய அகல் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

விளக்குகளில் ஒன்றைத் தூண்டி விட்டு அந்த மூதாட்டி கையில் எடுத்துக் கொண்டாள். இளவரசரை மட்டும் தன்னுடன் வரும்படி சமிக்ஞையினால் தெரிவித்தாள். மற்ற இருவரும் இதைப் பற்றி முதலில் சிறிது கவலை கொண்டார்கள். ஆனால் அந்த மூதாட்டி விளக்கைத் தூக்கிப் பிடித்து அந்த மண்டபச் சுவர்களில் உள்ள சித்திரங்களைத்தான் இளவரசருக்குக் காட்டுகிறாள் என்று தெரிந்ததும் அவர்களுடைய கவலை ஓரளவு நீங்கியது.

இளவரசர் அம் மண்டபச் சுவரில் பார்த்த சித்திரங்கள் ஏதோ ஒரு கதையில் நிகழ்ந்த சம்பவங்களை வரிசைக் கிரமமாகக் கூறும் தொடர் சித்திரங்களாகத் தோன்றின. புத்த பகவானின் பூர்வ அவதாரக் கதைகளைப் புத்த விஹாரங்களில் சித்திரித்திருக்கும் முறைப்படி இச் சித்திரங்களும் அமைந்திருந்தன. ஆனால் இவை புத்தரின் அவதார நிகழ்ச்சிகளைக் குறிப்பிடவில்லை. ஒரு மானிடப் பெண்ணின் கதையையே சித்திரித்திருந்தது. அந்தச் சித்திரப் பெண்ணின் முகத் தோற்றம் ஏறக்குறைய இப்போது விளக்குப் பிடித்துக் காட்டிய மூதாட்டியின் முகத்தை ஒத்திருந்தது. ஆகவே இந்த ஊமை ஸ்திரீ தன்னுடைய வரலாற்றையே சித்திரங்களாக எழுதியிருக்கிறாள் என்று இளவரசர் இலகுவாகத் தெரிந்து கொண்டார்.

அவற்றில் முதல் சித்திரம் கடல் சூழ்ந்த தீவில் ஓர் இளம் பெண் தன்னந்தனியாக நிற்பதையும் அவளுடைய தகப்பனார் கட்டு மரம் ஏறி மீன் பிடித்துக் கொண்டு வருவதையும் காட்டியது. பின்னர், அந்தப் பெண் காட்டு வழியே சென்றாள். ஒரு மரத்தின் கிளை மீது ஓர் இளைஞன் உட்கார்ந்திருந்தான். அவன் இராஜ குமாரனைப் போலிருந்தான். அந்த மரத்தின் மீது ஒரு கரடி ஏறிக் கொண்டிருந்தது. இராஜ குமாரன் அதைக் கவனியாமல் வேறு திசையில் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பெண் கூச்சலிட்டு விட்டு ஓடினாள். கரடி அப்பெண்ணைத் துரத்தியது. மரத்தின் மேலிருந்த இளைஞன் குதித்து வந்து கரடியின் மேல் வேலை எறிந்தான். கரடிக்கும் அவனுக்கும் துவந்த யுத்தம் நடந்தது. அந்தப் பெண் தென்னை மரம் ஒன்றின் மீது சாய்ந்து கொண்டு கரடிக்கும் இளைஞனுக்கும் நடந்த சண்டையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியில் கரடி இறந்து விழுந்தது. இளைஞன் அந்தப் பெண்ணை நெருங்கி வந்தான். அவளுக்குத் தன் நன்றியைத் தெரிவித்தான். ஆனால் அவள் மறுமொழி சொல்லாமல் கண்ணீர் விட்டாள். பிறகு அவள் ஓடிப் போய்த் தன் தந்தையை அழைத்து வந்தாள். வந்த வலைஞன் தன் பெண் பேச முடியாத ஊமை என்பதைத் தெரிவித்தான். இராஜகுமாரன் முதலில் வருத்தப்பட்டான். பிறகு வருத்தம் நீங்கி அவளுடன் சிநேகம் செய்து கொண்டான். காட்டு மலர்களைக் கொய்து மாலை தொடுத்து அவள் கழுத்தில் போட்டான். இருவரும் கை கோத்துக் கொண்டு காட்டில் திரிந்தார்கள்.

ஒருநாள் பெரிய மரக்கலம் ஒன்று அந்தத் தீவின் சமீபம் வந்தது. அதிலிருந்து சில வீரர்கள் இறங்கி வந்தார்கள். இராஜகுமாரனைக் கண்டு பிடித்து அவனுக்கு வணக்கம் செலுத்தினார்கள். அவனை மரக் கலத்துக்கு வரும்படி வருந்தி அழைத்தார்கள். இராஜகுமாரன் அந்தப் பெண்ணுக்கு ஆறுதல் கூறி விடை பெற்றுக் கொண்டான். கப்பலில் ஏறிச் சென்றான். அந்தப் பெண் அவன் போன பிறகு ரொம்பவும் வருத்தப்பட்டுக் கண்ணீர் பெருகினாள். அதை அவள் தகப்பன் பார்த்தான். ஒரு படகில் அவளை ஏற்றிக் கொண்டு கடல் கடந்து சென்றான். கலங்கரை விளக்கம் ஒன்றை அடைந்து கரையில் இறங்கினான். அங்கே ஒரு குடும்பத்தார் தகப்பனையும் மகளையும் வரவேற்றார்கள். எல்லாருமாக மாட்டு வண்டியில் ஏறிப் பிரயாணம் போனார்கள். கோட்டை மதில் உள்ள ஒரு பட்டணத்தை அடைந்தார்கள். அங்கே அரண்மனை மேன் மாடத்தில் இராஜகுமாரன் தலையில்



கிரீடத்துடன் நின்றான். அவனைச் சூழ்ந்து ஆடை அலங்காரங்கள் புனைந்த பலர் நின்றார்கள். அதைப் பார்த்த அந்த இளம் பெண்ணின் மனம் கலங்கியது. அவள் ஒரே ஓட்டமாக ஓடினாள். கடற்கரையை அடைந்தாள். கலங்கரை விளக்கத்தின் மேலேறிக் கீழே குதித்தாள். அலைகள் அவளைத் தாங்கிக் கொண்டன. படகில் வந்த ஒருவன் அவளைத் தூக்கிப் படகில் ஏற்றிக் காப்பாற்றினான். அவளைப் பேய் பிடித்திருக்கிறதென்று எண்ணி ஒரு கோயிலில் கொண்டு போய் விட்டான். கோயில் பூசாரி அவளுக்கு விபூதி போட்டு வேப்பிலை அடித்தான்.

யாரோ ஒரு பெரிய ராணி சுவாமி தரிசனம் செய்ய அந்தக் கோயிலுக்கு வந்தாள். பூசாரி அந்தப் பெண்ணைப் பற்றி ராணியிடம் சொன்னான். ராணி கர்ப்பந்தரித்திருந்தாள். அந்தப் பெண்ணும் தன்னைப் போலவே கர்ப்பவதி என்று அறிந்தாள். பல்லக்கில் ஏற்றிக் கொண்டு அரண்மனைக்கு அழைத்துப் போனாள். அரண்மனைத் தோட்டத்தில் அந்தப் பெண்ணுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தன. ராணி வந்து இரண்டு குழந்தைகளில் ஒன்றைத் தான் வளர்ப்பதாகச் சொன்னாள். முதலில் வளைஞர் பெண் அதை மறுத்தாள். பிறகு யோசித்துப் பார்த்தாள். இரண்டு குழந்தைகளுமே அரண்மனையில் வளரட்டும் என்று தீர்மானித்தாள். குழந்தைகளை விட்டு விட்டு நள்ளிரவில் ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் ஓடிப் போய் விட்டாள். வெகு காலம் காட்டில் திரிந்து கொண்டிருந்தாள். ஆனால் குழந்தைகளைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அடிக்கடி வந்து விடும். ஆற்றங்கரை ஓரமாக வந்து மரங்களின் மறைவில் ஒளிந்திருப்பாள். படகில் ராஜாவும் ராணியும் குழந்தைகளும் வருவார்கள். தூரத்தி

விருந்தபடியே பார்த்து விட்டுப் போய் விடுவான். ஒரு சமயம் ஒரு குழந்தை படகிலிருந்து தவறி விழுந்து விட்டது. அதை யாரும் கவனிக்கவில்லை. இவள் நீரில் மூழ்கிக் குழந்தையை எடுத்துக் கொடுத்தாள். உடனே மீண்டும் நதி வெள்ளத்தில் மூழ்கிச் சென்று அக்கரையை அடைந்து காட்டில் மறைந்து விட்டாள்.

வ்வளவு நிகழ்ச்சிகளும் காவிக் கோட்டினால் தத்ரூபச் சித்திரங்களாக அச்சுவரில் வரையப்பட்டிருந்தன. இளவரசர் அருள்மொழி வர்மர் அளவில்லா ஆர்வத்துடனும் அதிசயத்துடனும் அச் சித்திரங்களைப் பார்த்துக் கொண்டு வந்தார். கடைசிச் சித்திரம் வந்ததும் இளவரசர், "நதியிலிருந்து காப்பாற்றப்பட்ட சிறுவன் நான்; காப்பாற்றியவள் நீ!" என்று சமிக்ஞையாகச் சுட்டிக் காட்டினார். அந்த மூதாட்டி இளவரசரைக் கட்டி அணைத்துக் கொண்டு உச்சி மோந்தாள்.

பின்னர் அந்த மண்டபத்தின் இன்னொரு மூலைக்கு இளவரசரை அழைத்துச் சென்றாள். அங்கே எழுதியிருந்த சில சித்திரங்களைக் காட்டினாள். அவை அவளுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள் அல்ல. இளவரசருக்கு நேரக் கூடிய அபாயங்களைப் பற்றி அச் சித்திரங்களின் மூலமாகவும் சமிக்ஞைகளின் மூலமாகவும் எச்சரிக்கை செய்தாள்.

இவ்வளவையும் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் மண்டபத்தின் ஓரத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். நந்தினியின் முகத்தையும் இந்த ஊமை ஸ்திரீயின் முகத்தையும் வந்தியத்தேவன் அடிக்கடி ஒப்பிட்டுப் பார்த்தான். அவன் மனத்தில் பற்பல எண்ணங்கள் உதித்தன; பற்பல சந்தேகங்கள் தோன்றின. அவற்றைக் குறித்துப் பேச அது சந்தர்ப்பம் அன்று எனப் பேசாதிருந்தான்.

யானைச் சிலைகள் பாதுகாத்த அந்த ரங்க மண்டபத்திலிருந்து அவர்கள் வெளியே வந்தார்கள். மூதாட்டி அவர்களை அழைத்துக் கொண்டு அந்த ஸ்தூபத்தின் சிகரத்தை நோக்கி ஏறினாள். அவளுடைய தேக வலிமையைக் குறித்து மற்றவர்கள் அதிசயித்தார்கள். வந்தியத்தேவனுக்கு மிகவும் களைப்பாயிருந்தது. ஆயினும் வெளியில் சொல்லாமல் ஏறினான்.

பாதி ஸ்தூபம் ஏறியதும் நின்று பார்த்தார்கள். நகரத்தின் ஓரிடத்தில் தீயின் ஜுவாலை கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது.

"ஆகா! மகாஸேன சக்கரவர்த்தியின் புராதன மாளிகை தீப்பற்றி எரிகிறது!" என்றார் இளவரசர்.

"நாம் படுத்திருந்த இடமா?"

"அதுவேதான்!"

"அங்கே நாம் படுத்துத் தூங்கியிருந்தால்...?"

"நாமும் ஒருவேளை அக்கினி பகவானுக்கு உணவாகியிருப்போம்!"

"அதுதான் நாம் படுத்திருந்த அரண்மனை என்று இத்தனை தூரத்திலிருந்தபடி எதனால் சொல்கிறீர்கள்?"

"மண்டபத்துக்குள்ளே நான் பார்த்த சித்திரங்கள் என்னுடன் பேசின!"

"எங்களுக்குக் கேட்கவில்லையே?"

"அதில் ஒன்றும் அதிசயமில்லையே. சித்திரங்கள் ஒரு தனி பாஷையில் பேசும். அந்த பாஷை தெரிந்தவர்களுக்குத்தான் அவற்றின் பேச்சு விளங்கும்."

"அந்தச் சித்திரங்கள் தங்களுக்கு இன்னும் என்ன தெரிவித்தன?"

"என் குடும்ப சம்பந்தமான பல இரகசியங்களைச் சொல்லின. இந்த இலங்கைத் தீவை விட்டு உடனே போய் விடும்படியும் தெரிவித்தன...!"

"சித்திரங்களின் பாஷை வாழ்க! வைஷ்ணவரே! என் கட்சி ஜயித்தது!" என்றான் வந்தியத்தேவன்.

"இளவரசே! சித்திரங்கள் அத்துடன் நிறுத்தவில்லை. இலங்கையில் உள்ள வரையில் கூரையின் கீழ்ப் படுக்க வேண்டாம். வீடுகளின் ஓரமாக நடக்க வேண்டாம். மரங்களின் அடியில் போக வேண்டாம் என்றும் சொல்லவில்லையா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"சரியாகச் சொன்னீர்! உமக்கு எப்படித் தெரிந்தது?"

"தங்களுக்குச் சித்திரங்களின் பாஷை தெரியும். அடியேனுக்கு அபிநய பாஷை

தெரியும். தங்கள் குல தெய்வம் தங்களிடம் பேசிக் கொண்டிருந்தபோது அத் தெய்வத்தின் அபிநய முக பாவங்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"சந்தோஷம். இரவு இன்னும் ஒரு ஜாமந்தான் மிச்சமிருக்கிறது. இந்த ஸ்தூபத்தின் உச்சியில் ஏறிச் சிறிது நேரமாவது படுத்துத் தூங்கி விட்டுப் பொழுது விடிந்ததும் புறப்படுவோம்'' என்றார் அருள்மொழி வர்மர்.

மறுநாள் உதயத்தில் சூரிய கிரணங்கள் சுளீர் என்று அடித்து வந்தியத்தேவனை தூக்கத்திலிருந்து எழுப்பின. முதல் நாளிரவு நடந்த உண்மையான நிகழ்ச்சிகள் போதாவென்று சதிகாரர்களும், தீ வைப்பவர்களும், ஊமைகளும், செவிடர்களும், மரத்தில் ஏறும் கரடிகளும், பேய் பிசாசுகளும், புத்த பிக்ஷுக்களும், மணி மகுடங்களும் ஒரே குழப்பமாக வந்தியத்தேவனுடைய கனவிலேயும் வந்து துன்புறுத்தினார்கள். சூரிய வெளிச்சத்தில் அவையெல்லாம் மாயக் கனவுகளாகி மறைந்தன. குழப்பமும் பீதியும் பறந்தன.

இளவரசரும், ஆழ்வார்க்கடியானும் முன்னதாக எழுந்து பிரயாணத்துக்கு ஆயத்தமாகியிருப்பதை வந்தியத்தேவன் கண்டான். அவனும் அவசரமாக ஆயத்தமானான். மூன்று பேரும் ஸ்தூப சிகரத்திலிருந்து இறங்கினார்கள். நடுவீதிகளின் வழியாகவே நடந்து சென்று மகா மேக வனத்தை நோக்கிச் சென்றார்கள். அந்த நந்தவனத்தின் மத்தியிலேதான் புராதனமான, ஆயிரத்தைந்நூறு வயதான, மிகவும் புனிதத் தன்மை வாய்ந்த போதி விருட்சம் இருந்தது.

பிக்ஷுக்களும் பிக்ஷுக்களல்லாத பக்தர்கள் பலரும் போதி விருட்சத்தை வலம் வந்தும் மலர்களைச் சொரிந்தும் வணங்கிக் கொண்டிருந்தார்கள்.

இளவரசர் அருள்மொழிவர்மரும் அந்தப் போதி விருட்சத்துக்கு வணக்கம் செலுத்தினார். "உலகத்தில் இராஜ்யங்களும் இராஜ்யங்களை ஆண்ட மன்னர்களும் மறைந்து போய் விடுவார்கள். ஆனால் தர்மம் என்றென்றைக்கும் நிலைத்து நிற்கும் என்பதற்கு இந்தப் போதி விருட்சம் நிதர்சனமாயிருக்கிறது!" என்று இளவரசர் மற்ற இருவரையும் பார்த்துக் கூறினார். இப்படிச் சொல்லிக் கொண்டே சுற்று முற்றும் பார்த்தார். ஒரு மூலையில் மூன்று குதிரைகள் பிரயாணத்துக்கு ஆயத்தமாக நின்றன. மூன்று குதிரைகளையும் பிடித்துக்கொண்டு மூன்று பேர் நின்று கொண்டிருந்தார்கள்.

இளவரசர் அங்கே சென்றதும் அவர்கள் மூவரும் முகமலர்ந்து மரியாதையுடன் வணங்கினார்கள். இளவரசர் அவர்களை ஏதோ கேட்டுத் தெரிந்து கொண்டார். வந்தியத்தேவனைப் பார்த்து "இராத்திரி எரிந்தது நாம் படுத்திருந்திருந்த மகாசேனரின் அரண்மனைதான்! நாமும் அதில் எரிந்து போய் விட்டோமோ என்று இவர்கள் பயந்து கொண்டிருந்தார்கள். நம்மை உயிரோடு பார்த்ததும் இவர்களுக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை!" என்றார்.

"ஆயிரத்தைந்நூறு வயதான அரச மரம் இன்னும் நிற்பது என்னமோ உண்மைதான். ஆனால் தர்மம் செத்துப் போய் எத்தனையோ நாளாகி விட்டது!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

"இனி ஒரு தடவை அவ்விதம் சொல்லாதே! நான் ஒருவன் உயிரோடிருக்கும் போது தர்மம் எப்படிச் சாகும்?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

மூன்று பேரும் குதிரைகள் மீது ஏறிக் கொண்டு புறப்பட்டார்கள். அனுராதபுர நகரத்தின் வடக்கு வாசல் வழியாக வெளியேறினார்கள். திருவிழாக் கூட்டம் இன்னமும் நகரிலிருந்து நாலாபுறமும் 'ஜேஜே' என்று சென்று கொண்டிருந்த படியால் இவர்களை யாரும் கவனிக்கவில்லை.

அனுராதபுரத்துக்கு, வட கிழக்கில் ஒருகாத தூரத்தில் மகிந்தலை என்னும் சிறிய பட்டணம் இருந்தது. "அசோக சக்கரவர்த்தியின் குமாரர் மகிந்தர் முதன் முதலில் இந்த ஊரிலேதான் வந்திறங்கிப் புத்த மதத்தை உபதேசிக்கத் தொடங்கினார்! எப்படிப்பட்ட பாக்கியசாலி அவர்! ஆயுதந் தாங்கிய படைகளை அழைத்துக் கொண்டு நாடு கவர்வதற்கு அவர் போகவில்லை. கொலைகாரர்



களிடம் சிக்காமல் ஒளிந்து மறைந்து திரிய வேண்டிய அவசியமும் அவருக்கு ஏற்படவில்லை" என்றார் அருள்மொழி வர்மர்.

"அவருக்குக் கொடுத்து வைத்திருந்தது அவ்வளவுதான்!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

இளவரசர் நகைத்தார்.

"நீர் எப்போதும் என்னை விட்டுப் பிரியவே கூடாது. நீர் பக்கத்தில் இருந்தால் எப்படிப்பட்ட கஷ்டமும் சந்தோஷமாகி விடும்!" என்றார் இளவரசர்.

"அதே மாதிரி எப்படிப்பட்ட சந்தோஷமும் கஷ்டமாகி விடும்!" என்றான்




ஆழ்வார்க்கடியான்.

இச் சமயத்தில் சாலையில் அவர்களுக்கு எதிர்ப் பக்கத்தில் ஒரு புழுதிப் படலம் தெரிந்தது. பல குதிரைகள் நாலு கால் பாய்ச்சலில் வரும் சத்தமும் கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் சிறிய குதிரைப்படை ஒன்று கண்ணுக்குத் தெரிந்தது. குதிரை வீரர்கள் கையில் பிடித்திருந்த வேல் முனைகள் காலை வெயிலில் பளபளவென்று ஜொலித்தன.

"ஐயா! உறையிலிருந்து கத்தியை உருவுங்கள்!" என்று எச்சரித்தான் வந்தியத்தேவன்.

(தொடரும்)

இல்லை, நேயர்களே! "கிட்டப்பா பிளேட்டு நன்றாயிருக்கிறது" என்று நான் சொல்லவரவில்லை. அப்படி நான் சொன்னால், "கிட்டப்பா பிளேட்டு நன்றாயிருக்கிறது என்று நீ யார் சொல்வதற்கு?" என்பதாகத் தமிழ் நாட்டில் லட்சம் பேர் சண்டைக்கு வருவார்கள். ஆகையால் நான் சொல்லவில்லை. பின் என்னவென்றால், "கிட்டப்பா பிளேட்டு நன்றாய்த் தானிருக்கிறது" என்று நீங்கள் சொல்வதை நான் ஒப்புக் கொள்கிறேன். அவ்வளவுதான்!

* * *

சாதாரணமாக, வயதானவர்களைப் பார்த்து நாம் அசூயைப்படுவதில்லை. தங்களுடைய பால்யத்தில் நடந்தவைகளைப் பற்றி அவர்கள் பெருமையடித்துக் கொள்ளும்போதெல்லாம் நாம் மனதிற்குள் சிரிக்கிறோம். குப்புத் தாத்தா சொல்கிறார்: "இந்த நாளிலும் பிள்ளைகள் இருக்கிறீர்களே, பெண்டாட்டி என்றதும் பல்லை இளித்துக் கன்னத்தில் போட்டுக் கொண்டு! அந்த நாளில் நாங்கள் அப்படி இருக்க மாட்டோம்; துளிக் கூடப் பயப்படவே மாட்டோம். வேணுமானால் கேளுங்கள்: எனக்கும் என் சம்சாரத்துக்கும் ஒரே நாளில் ஒரே முகூர்த்தத்தில் ஒரே பந்தலில் கல்யாணம் நடந்தது! அன்று சாயங்காலம் நலங்கு வைத்தார்கள். 'மாப்பிள்ளை! உம் பெண்டாட்டியைக் குட்டினால்தான் இன்று உம்மை விடுவோம்' என்று பக்கத்திலிருந்த குட்டிகள் சொல்லிக் கொண்டிருந்தார்கள். நானும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். கடைசியில் பொறுக்க முடியாமல் ரோஸம் வந்து விட்டது. ஓங்கி ஒரு குட்டுக் குட்டினேன் – பக்கத்திலிருந்த தோழிப் பெண் தலையில்!..."

இப்படியெல்லாம் குப்புத் தாத்தா தமது பால்ய லீலைகளைப் பற்றிப் பேசும்போது நமக்கு வெட்கமாயிருக்கிறது! "ஐயோ! கிழவருக்குப் பல்லுப் போய் விட்டது; இன்னும் சபலம் மட்டும் போகவில்லையே!" என்று பரிதாபப்படுகிறோம்.

ஆனால் கிழவர்கள் ஒரே ஒரு விஷயத்தைப் பற்றிப் பெருமை பேசும்போது மட்டும் நமக்குப் பொறாமையாயிருக்கிறது. "கும்பகோணத்தில் ஒரு தனிகர் வீட்டில் கல்யாணம் நடந்தது. முதல் நாள் சரப சாஸ்திரிகள்



• இளவயதில் கிட்டப்பா

புல்லாங்குழல்; இரண்டாம் நாள் மகா வைத்தியநாதய்யர் கச்சேரி, திருக்கோடிக் காவல் கிருஷ்ணய்யர் பிடில்; மூன்றாம் நாள் தஞ்சாவூர் கிருஷ்ண பாகவதர் கதை. ஆகா! அமிர்தவர்ஷமாய்ப் பொழிந்தார்கள். இந்தக் காலத்திலும் பாடுகிறார்களே, பாட்டு!..." என்று இம்மாதிரி அந்த ஜாம்பவான்கள் பேசும்போது, அவர்களுடைய மண்டையை உடைத்து விடலாமாவென்று நமக்கு ஆத்திரம் வருகிறது.

அம்மாதிரி சந்தர்ப்பங்களில் எனக்கு, "இந்தப் போனகிராப் பொட்டி ஐம்பது வருஷத்துக்கு முன்னால் கிளம்பியிருக்கக் கூடாதா? அந்த மகா வித்வான்களுடைய சங்கீதத்தைப் பிளேட்டிலாவது கேட்டு ஆனந்திக்கலாமே?'' என்று தோன்றுவதுண்டு.

# கிட்டப்பா பிளேட்டு!

நமக்கெல்லாம் கிடைக்காத அந்த அதிர்ஷ்டம், நம்முடைய பின் தலைமுறையைச் சேர்ந்தவர்களுக்கு உண்டு என்பதை நினைக்கும்போது அந்தப் பின் தலைமுறையினர் மீதும் எனக்குப் பொறாமை ஏற்படுகிறது. "யாரோ கிட்டப்பாவாமே! தேவகானமாய்ப் பொழிவானாமே? அது எப்படித்தான் இருந்திருக்குமோ?" என்று பிற்காலத்தவர்கள் ஏங்க வேண்டியதில்லை. திவ்யமாய்ப் பிளேட்டில் கேட்டு விடலாம் அந்த தேவகானத்தை!

ஸ்ரீமான் எஸ்.ஜி. கிட்டப்பாவின் அபூர்வ சங்கீதத்தை இன்றைய தினம் நாம் பிளேட்டில் கேட்கக் கூடியதாயிருப்பதை நினைக்கும்போதுதான், கிராமபோன் கருவியும் உபயோகமானதே என்பதை நாம் நன்குணர்கிறோம். தாமஸ் ஆல்வா எடிஸனை வாயார, மனமார வாழ்த்தவும் ஆசை உண்டாகிறது.

* * *

கிட்டப்பாவின் ஜீவிய தசையில் அவரிடம் அபார பிரேமை கொண்டிருந்தவர்கள் எத்தனையோ பேர். அவர்களில் என்னுடைய சிநேகிதர் ஒருவர் உண்டு. கிட்டப்பா காலஞ்சென்றதும் அவர் ஒரு சபதம் செய்தார் – "கிட்டப்பா நாடகத்தைப் பார்த்த கண்ணால் இனிமேல் வேறு நாடகம் எதுவும் பார்ப்பதில்லை" என்று. அப்புறம் இந்த சபதத்தைக் கொஞ்சம் தளர்த்தி, "நாடகத் தொழிலாளிகளால் நடத்தப்படும் தமிழ் நாடகம் எதற்கும் போவதில்லை"யென்று தீர்மானித்து அதை நிறைவேற்றி வருகிறார்.

அவருக்கு நான் சொன்னது : "காசிக்குப் போகிறவர்கள் ஏதாவது ஒரு கறியை விட்டுவிட வேண்டுமென்பதற்காகக் 'கொத்தவரங்காய்', 'பூவரசங்காய்', 'எட்டிக்காய்' இப்படி ஏதாவது ஒன்றை விட்டுவிடுகிறார்களே, அம்மாதிரியல்லவா இருக்கிறது, உங்கள் காரியம்? தமிழ் நாடகம் பார்க்காததினால் நீங்கள் அடையப் போகும் நஷ்டம் ஒன்றும் பிரமாதமில்லையே! உண்மையில், கிட்டப்பாவினிடம் உங்களுக்குள்ள அபிமானத்தைக் காட்ட வேண்டுமானால், சங்கீதக் கச்சேரி கேட்பதையல்லவா நிறுத்த வேண்டும்?'' என்றேன்.

நான் சொன்னது போன்ற விரதம் கொள்ள அவருக்குத் தோன்றாததின் காரணம் என்னவென்று சுலபமாய் ஊகிக்கலாம். பெரும்பாலான ஜனங்களின் மனத்தில், "கிட்டப்பா ஒரு நாடகக்காரர்" என்ற ஞாபகந்தான் மேலோங்கியிருந்தது. ஸ்ரீமான் கிட்டப்பா சங்கீதத் துறையிலேயே முழுதும் ஈடுபட்டிருந்தாரானால், அவர் காலஞ்சென்றபோது, எத்தனையோ பேர் "கிட்டப்பாவின் சங்கீதத்தைக் கேட்ட காதால் இன்னொருவரின் சங்கீதத்தைக் கேட்பதில்லை" என்று விரதம் எடுத்துக்

அமரர் கல்கி

கொண்டிருக்கக் கூடும். அப்படி நேராம லிருந்தது சங்கீத சபைகளின் அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும்.

* * *

கிட்டப்பாவின் சாரீர மேன்மையைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. மேல் ஸ்தாயியில் அநாயாஸமாக சஞ்சரிக்கும் சக்தியுடையது; பனிக் காலத்தில் காலை வேளையில் பவளமல்லிகைச் செடியி லிருந்து பனித் துளிகளும் புஷ்பங்களும் கலகலவென்று உதிர்வது போல் சங்கதி களை உதிர்க்கும் இயல்பு வாய்ந்தது; கேட் போர் செவியையும் உள்ளத்தையும் ஒருங்கே பரவசப்படுத்தும் மோஹன சக்தி பொருந்தியது. அந்த சாரீரம் இசைத் தட் டுக்கு எடுத்ததாயும் அமைந்தது இன்னும் விசேஷமாகும்.

கிட்டப்பா சிட்சைப்பட்டவரல்ல; அதாவது குருவினிடம் முறையாகப் பாடம் படித்து சங்கீதம் பயின்றவரல்ல. பூர்வ ஜன்ம சுகிர்தத்தினால் - இசை வாணியின் அருள் விலாஸத்தினால் - சங்கீதம் தானே தேடி வந்து அவரை அடைந்தது. ஆகவே சாதாரண வித்வான் கள் போகத் துணியாத இடங்களுக்கெல் லாம் அவர் அநாயாஸமாகப் போவார். வித்வான்கள் பிரமித்து நிற்பார்கள்; "அம்மம்மா! இது நம்மாலாகாது!" என்பார் கள். "இது சம்பிரதாயத்துக்கு விரோதம்; அது யாரும் போகாத புது வழி; இங்கே எல்லை கடந்து போய் விட்டார்" என் றெல்லாம் பண்டிதர்கள் முணுமுணுக் கவும் செய்வார்கள். ஆனால் இலக்கியத் துறையில் வரகவிகள் செய்யும் 'பிழை'களே பிற்காலத்தில் 'இலக்கண'மாகி விடுகின் றன. சங்கீதத்திலும், எத்தனையோ விவா தத்துக்கிடமான பிரச்னைகளைப் பெரி யோர்களின் 'பிரயோக'ங்களைக் கொண்டு தானே முடிவு கட்டுகிறார்கள்? ஸ்ரீமான் கிட்டப்பா சங்கீதத் துறையிலேயே தனித்து ஈடுபட்டிருந்தால் அவருடைய 'பிரயோக'ங் களே பிற்காலத்தில் எடுத்துக் காட்டுகளாக ஆகியிருக்கும். இப்போது அவருடைய துணிச்சலைக் கண்டு மூக்கில் விரல் வைத்து ஆச்சரியப்படுவதுடன் நிற்கி றோம்.

இதையெல்லம் விட முக்கியமாக, ஸ்ரீமான் கிட்டப்பா சங்கீதத்தின் ஜீவகை எது என்பதை இயற்கையறிவால் உணர்ந் தவர் என்பதைக் குறிப்பிட வேண்டும். அவர் பாட்டிலெல்லாம், ஸாஹித்யத்தின் வார்த்தைகளுடன் இசை கலந்திருப்பதைக் காணலாம். உதாரணமாக,

"கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர் தருவே"

என்ற அருட்பாவை அவர் இசைத் தட்டில் பாடியிருப்பதைக் கேளுங்கள். பாவின் சொற்களும் இசையும் எப்படி ஒன்றுடன் ஒன்று கலந்து வருகின்றன? சொற்களை அப்படியே அந்தரத்தில் தொங்க விட்டு விட்டு, ராக விஸ்தாரத்தில் புகுந்து விடுகிறாரா, பாருங்கள்! கிடை யாது. அங்கங்கே முக்கியமான சொற்களில் நின்று இசையமுதத்தைக் கலந்து பொழி கிறார். "கனியே!" "பூங்காற்றே!" "மண வாளா!" முதலிய சொற்களில், சொல்லின் பழும், பொருளின்பழும், இசையின்பழும் ரஸபாவத்துடன் கலந்து பெருகுகின்றன.

சங்கீதத்தின் இந்த முக்கியாம்சத்தை நன்கு தெரிந்து கொள்வதற்கு, இந்த அம்சம் சிறிதேனும் இல்லாத இன்னொரு இசைத் தட்டை உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம். ஒரு பெரிய வித்வான் - சாரீர சம்பத்தில் இணையற்றவர் - கொடுத்திருக்கும் "ஒருமையொடு" என்ற பிளேட்டைக் கேளுங்கள். ஒரே மூச்சில் மளமளவென்று வார்த்தைகளைக் கொட்டி 'டும்' என்று நிறுத்திவிட்டு, ராக விஸ்தாரத்தில் புகுந்து விடுகிறார். "பொய்மை பேசாதிருக்க வேண்டும்" என்பதி; "பொய்..." என்று நிறுத்தி ஒரு பிர்கா அடிக்கிறார். இன்னும், "பொய்மை பேசாதிருக்க வேண்டும்", "மருவு பெண் ணாசையை மறக்க வேண்டும்" என்ற வாக்கியங்களில், இசையின் பாவம், "ஐயோ! பொய் பேசாமல் இருக்க வேண்டி யிருக்கிறதே!" "அடாடா! மருவு பெண்ணா சையை அநியாயமாய் மறக்க வேண்டி யிருக்கிறதே!" என்று துயரப்படுவது போலிருக்கிறது.

விருத்தங்கள் பாடும்போது, சொற்களை யும் ராகத்தையும் இசைத்துப் பாடினால், பாலில் சர்க்கரையைக் கலந்து சாப்பிடும் ருசி ஏற்படுகிறது. வார்த்தைகளை மடமட

வென்று ஒப்பித்து விட்டு, ராக விஸ்தாரத்திற்குப் போதல், சர்க்கரையை முதலில் தின்றுவிட்டு அப்புறம் பால் குடிப்பது போல்தான். இன்னும் பார்க்கப் போனால், முதலில் சர்க்கரையைத் தின்றுவிட்டு, அப்புறம் சர்க்கரை போதா காப்பி குடிப்பது போல் என்றும் சொல்லலாம்!

* * *

ஸ்ரீமான் கிட்டப்பாவின் இசைத் தட்டுகளில், முக்கியமாக, ஸாஹித்யம் நன்றாயில்லாத காரணத்தினால் சிலவற்றைத் தள்ள வேண்டியதாயிற்று. பச்சை சிருங்காரப் பாட்டுகளையும், கொச்சை நாடகப் பாட்டுகளையும், - சங்கீதம் நன்றாயிருந்த போதிலும் - நான் எடுக்கவில்லை. சிலவற்றை, சாரீரத்தில் சுகபாவம் குறைந்திருந்த காரணத்தினால் நீக்க வேண்டியிருந்தது. இதற்கு, ஒலிப்பதிவின் குறைபாடு காரணமாயிருக்கக் கூடும். இத்தகைய காரணங்களினால் விலக்கியமை நீங்கலாக, பாக்கிப் பன்னிரண்டு பிளேட்டுகள் தேர்ந்தெடுத்தேன். அவை பின்வருமாறு :

- LBE 14. கிதார்த்தமு
- LBE 16. ஆண்டவன் தரிசனமே
- LBE 22. கிளிக் கண்ணி
- LBE 28. ஜீவசிந்தாமணியே
- LBE 31. சரவணபவா
- LBE 34. கோபிகள் கொஞ்சும் ரமணா
- LBE 42. ராகஸுதாரஸ
- LBE 46. கோடையிலே
- LBE 58. ஸோபில்லு ஸப்தஸ்வர
- LBE 62. பெரியோர் இருக்குமிடம்
- LBE 72. காண்டீபன் மைத்துனா
- LBE 73. நாளைப் போகாமல்

மேற்படி இசைத் தட்டுகளில் பெரும்பாலானவற்றில் பின்புறம் வேறு பாட்டுக்களும் இருக்கின்றன. அவைகளும் அநேகமாக நல்ல பாட்டுக்களேயாகும்.

**(ஆடல் பாடல் – ஆனந்தவிடனில் வெளியானது)**

# சமாதானம்! ஜாக்கிரதை!

ரயில்வே நிலையங்களில் முன்னெல்லாம் "திருடர்கள்! ஜாக்கிரதை!" என்று போட்டிருக்கும். அதைக் கண்டு பொது ஜனங்கள் ஜாக்கிரதை அடைந்தாலும் அடையா விட்டாலும், திருடர்கள் உஷார் ஆவார்கள்!

அதுபோல் "சமாதானம்! ஜாக்கிரதை!" என்று இந்த நாளில் சொல்ல வேண்டியதாயிருக்கிறது. சமாதான மகாநாடுகள் கூட்டிச் சண்டைப் பிரசண்டமாய்ச் சண்டைப் பேச்சுப் பேசுகிறார்களே, அவர்கள் விஷயத்தில் பொது ஜனங்களும் எச்சரிக்கையாயிருக்க வேண்டும்; சமாதான தேவதையோ உஷாராயிருக்க வேண்டியதுதான்!

ருஷியாவிலும் சீனாவிலும் உள்ள இராஜ தந்திரிகள் சில காலமாக மேற்படி "சமாதானப் பூச்சாண்டி"யைக் கிளப்பி விட்டிருக்கிறார்கள்.

ருஷியாவிலும் சீனாவிலும் அடுத்த யுத்தத்துக்குப் பிரமாதமான முஸ்திபுகள் நடந்து வருகின்றன. அணுகுண்டைத் தோற்கடிக்கும் பரமாணுக் குண்டுகளும், மற்றும் பல கொடிய ஆயுதங்களும் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன.

ஆனால் இந்தியா போன்ற நாடுகளில் அவர்கள் சமாதான இயக்கத்தைத் தூண்டி விடுகிறார்கள். அவர்களுடைய நோக்கம் என்ன தெரியுமா?

1. யுத்தம் என்று வரும்போது மற்ற நாடுகள் யுத்தத்துக்கு ஆயத்தமாயிருக்கக் கூடாது. அவற்றை உடனே சுவாதீனம் செய்யச் சௌகரியமாயிருக்க வேண்டும்.

2. மற்ற நாடுகளில் ஐந்தாம்படை ஸ்தாபனங்களுக்கு இப்போதிருந்தே ஏற்பாடுகள் செய்து வைத்திருக்க வேண்டும். அதற்காக அங்கங்கே சில அப்பாவி மனிதர்களைப் பிடித்துத் தயார் செய்து வைத்திருக்க வேண்டும்.

3. தங்களுடைய பிரசாரங்களை நடத்துவதற்குக் குற்றமற்றவைபோல் வெளிக்குக் காணப்படும் சில ஸ்தாபனங்களை ஏற்படுத்தி, அவற்றுடன் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும்.

இத்தகைய நோக்கங்களுள்ள சமாதான சூழ்ச்சிப் பிரசாரத்தில் நம்மில் நல்லவர்கள்

சிலர் அகப்பட்டுக் கொண்டு திண்டாடு வதைப் பார்க்கிறோம்.

● ● ●

சில நாளைக்கு முன்பு சென்னை மாநகரிலும் இத்தகைய சமாதான மகா நாடு ஒன்று தடபுடலாக நடந்தது. போர்க் கோலம் பூண்டு பலர் சமாதானத்துக்காகப் பேசினார்கள். பம்பாயிலிருந்து இதற் கென்று இறக்குமதியான ஸ்ரீ கரஞ்சியா என்பவர் "பண்டித நேரு செத்துப் போனால்?" என்பதையே விஷயமாக வைத்துக் கொண்டு சக்கைப் போடு போட்டார்!

ருஷியாவில் "ஸ்டாலின் செத்துப் போனால்?" என்றோ, சைனாவில் "மாசே துங் செத்துப் போனால்?" என்றோ வைத் துக் கொண்டு பேசினால், அப்படிப் பேசு கிறவர்களின் கதி உடனே அதோகதியாகி விடும்! ஆனால் நம்மவர்கள் சாதுக்கள்; அதோடு சாவைப் பற்றி அவ்வளவாகக் கவலைப்படாதவர்கள். ஆகையால் "சும் மாப் பேசட்டும்!" என்று சும்மா இருந்து விட்டார்கள். இந்த ரீதியிலேயே மற்ற சமாதானப் பேச்சுகளும் இருந்தன. இச் சமாதான வெறும் பேச்சுக்களுக்கிடையே ஆந்திர-தமிழ் சண்டைகள் கிளம்பி மண் டைகள் உடையுமோ என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது!

● ● ●

தற்போது உலகில் சமாதானப் பிர சாரம் யாருக்குச் செய்ய வேண்டும் என் றால், அமெரிக்காவிலும் ருஷியாவிலும் சீனாவிலும் பிரான்ஸிலும் உள்ள இராஜ தந்திரிகளுக்குத்தான்! அவர்கள்தான் அடுத்த உலக மகா யுத்தத்துக்கு ஆயத்தம் செய்து வருகிறார்கள்! உலகை மீண்டும் யுத்தப் படுகுழியில் வீழ்த்த முயன்று வரு கிறவர்கள்.

உலகின் சமாதானத்துக்கு உண்மை யாகப் பாடுபட்டு வருகிறவர் நம் மாபெரும் தலைவரான பண்டித ஜவாஹர் லால் நேருதான்! உலகத்துக்கும் யுத்தத்துக் கும் நடுவில் நின்று வருகிறவர் நம் நேருஜி தான்! இதை உலகத்து அறிஞர்கள் பலரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

ஆகையால் நேருவின் விரோதிகள் எல் லாரும் சமாதான விரோதிகள்; 'சமா தானம்' என்ற பெயரால் யுத்தச் சூழ்ச்சி செய்கிறவர்கள்.

இந்திய மக்களிடையே இப்போது செய்யப்பட வேண்டிய பிரசாரம் சமா தானப் பிரசாரம் அல்ல.

இந்தியா புதிதாகப் பெற்ற சுதந்தரத் தைக் கபளீகரம் செய்ய நாலாபுறமும் எதிரிகள் காத்திருக்கிறார்கள். அவர்கள் தீய முயற்சிகளைத் தகர்த்தெறிந்து இந்தியாவின் சுதந்தரத்தைப் பாதுகாக்கும் முறைகளையே பிரசாரம் செய்ய வேண் டும்.

சத்ரபதி சிவாஜி, வீரபாண்டிய கட்ட பொம்மன், ஜான்ஸி ராணி, வ.உ. சிதம் பரம்பிள்ளை, லோகமானிய திலகர் முதலியவர்களுடைய சரித்திரங்களைப் பிரசாரம் செய்ய வேண்டும். அவர்களைப் போல் நாட்டின் சுதந்தரத்தைப் பாதுகாப் பதற்கு வீரச் செயல்கள் புரியும் சாக ஸத்தை நமது இளந்தலைமுறைகளுக்கு ஊட்ட வேண்டும்.

போலி சமாதானப் பிரசாரம் ஒரு பயங் கர ஐந்தாம் படைச் சூழ்ச்சி; அந்தச் சூழ்ச்சி வலையில் நம் வாலிபர்கள் விழுந்து விடக் கூடாது.

## போகிறார்கள்! வருகிறார்கள்! பயனற்றுப் போகிறார்கள்!

இந்தியாவிலிருந்து சில காலமாகக் கலைஞர் கோஷ்டியார் பிற நாடுகளுக்குப் போகிறார்கள்! திரும்பி வருகிறார்கள்! அநேகமாகப் பயன் அற்றுப் போகிறார்கள்! நாட்டுக்கும் தங்களுக்கும் கலைக்கும் பயன் அற்றுப் போகிறார்கள்!

சிலர் ருஷியாவுக்குப் போய்த் திரும்பி வந்தார்கள்! சிலர் அமெரிக்காவுக்குப் போயிருக்கிறார்கள்!

சிலர் சீனாவுக்குப் போகிறார்களாம்!

ருஷியாவுக்குப் போய் வந்தவர்கள் தங்களை உடனே நாட்டின் மாபெரு தலைவர்களைவிட மேலான அரசியல் தலைவர்களாக நினைத்துக் கொண்டார்கள். அந்த ஹோதாவில் பேச ஆரம்பித்தார்கள்! அதனால் நாட்டுக்கும் கலைக்கும் அவர்களுடைய உபயோகம் குறைந்து போயிற்று!

அமெரிக்காவுக்குப் போயிருக்கிறவர்களும் சீனாவுக்குப் போகப் போகிறவர்களும் இத்தகைய கதியை அடையாமல் இருக்க வேண்டுமே என்று கவலைப்படுகிறோம்.

அயல் நாடுகளுக்குப் போகும் இந்தியக் கலைஞர்கள் அவரவர்களுடைய கலைத்துறையில் புதிதாக ஏதேனும் தெரிந்து கொண்டு வந்து நாட்டுக்குப் பயன்படுத்த முயல வேண்டும். அந்த முயற்சியைக் கைவிட்டு, அரசியலில் தலையிடுவது அனர்த்தமாக முடிவதைக் காண்கிறோம்.

இந்தியாவின் சுதந்தர சர்க்காரால் கலைஞர் கோஷ்டிகள் அயல் நாடுகளுக்கு அனுப்பி வைக்கப்பட வேண்டும். அப்போது அவர்களுக்கு அயல்நாடுகளில் நல்ல மதிப்பு இருக்கும். அப்படிப் போய்த் திரும்புகிறவர்களால் தான் நமது நாட்டுக் கலைகளுக்கு நன்மை விளையக்கூடும்.

அயல்நாட்டு சர்க்காராலோ, அயல் நாட்டு ஸ்தாபனங்களினாலோ அழைக்கப்பட்டுப் போகிறவர்கள், மேற்படி வெளிநாட்டாரின் கருத்துக்களையும் நோக்கங்களையும் பிரசாரம் செய்வதற்குக் கருவிகளாகத் திரும்பி வந்து சேர்கிறார்கள்! அத்தகையர்களால் நாட்டுக்கும் நாட்டுக் கலைகளுக்கும் அவர்களுக்குமே பயன் விளைவதில்லை; அதனால் தீமைகூட உண்டாகிறது.

# சினிமாவும் நடனக் கலையும்

• வழுவூர் ராமைய்யாப் பிள்ளை



சமாதானச் சூழ்ச்சி மகாநாட்டுக்காகச் சென்னைக்கு வந்து "நேரு செத்துப் போனால்?" என்ற அருமையான பொருள் பற்றிப் பேசிய ஸ்ரீ கரஞ்சியாவின் மேலான தலைமையின்கீழ் சென்னையில் 'அகில இந்திய நடனக் கழகம்' அங்குரார்ப்பணம் ஆயிற்று.

இந்தக் கழகம் எவ்வளவு தூரம் உருப்படப் போகிறது, இதனால் நடனக் கலைக்கு என்ன பயன் விளையப் போகிறது என்று சொல்வதற்கில்லைதான்.

இந்த நடனக் கழக ஆரம்ப விழாவில் பேசிய நடனக் கலை ஆசிரியர் வழுவூர் ஸ்ரீ ராமய்யாப் பிள்ளை, ஸினிமாவினால் நம் புராதன நாட்டியக் கலை எப்படி நாசம் அடைந்து வருகிறது என்பதை நன்கு எடுத்துக் காட்டினார்:-

"நாட்டியத்தைக் கச்சேரிகளில் சிலர்தான் பார்க்க முடிகிறது. அதிலும் சிலர்தான் ரஸிக்க

முடிகிறது. காரணம், கச்சேரிகளில் அருகில் இருப்பவர்கள்தான் முக பாவங் களையும், நாட்டியக் கலையில் உள்ள அநேக நுணுக்கங்களையும் நன்றாய்ப் பார்த்து ரஸிக்க முடியும். பிறரால் முடிகிறதில்லை. ஆனால் சினிமாப் படத்தில் எவ்வளவு ஜனங்கள் பார்த் தாலும் நேரில், அருகில் இருந்து பார்ப்பது போலவே பார்த்து ரஸிக்க வசதி இருக்கிறது. ஒவ்வொரு படத்தை யும் தொலை தூரங்களில் உள்ள சகல கிராமத்து ஜனங்களும் பார்க்க நேருகிறது. ஆகையால் சினிமாவின் மூலமாக நாட்டியத்தின் பெருமையை எல்லோரும் உணரும்படிச் செய்யலாம். இதற்கு, சினிமாப் படங்களில் சேர்க்கப்படும் நடனம் உத்தமமான முறையில் உன்னத அமைப்புகளைக் கொண்டு இருக்க வேண்டும். ஆனால் தற்காலத்தில் நடனம் என்ற பெயருடன் சினிமாப் படங்களில் புகுத்தப்படும் காட்சிகள் அற்ப உணர்ச்சியைத் தூண்டிவிடும் அர்த்தமற்ற ஆட்டங்களாக இருக்கின்றன.

நம் நாட்டின் இப்புராதனக் கலையைக் கண்டு இதர நாட்டார் அனைவரும் புகழ்ந்து போற்று கின்றார்கள். நம் நாட்டில் சிறுபான் மையோர் மேல் நாட்டிலிருந்து வேண்டாத முறையில் ஆபாச நாட்டி யத்தைக் கடன் வாங்கி நம் நடனக் கலையுடன் கலந்து உருக்குலைத்து, நல்லுணர்ச்சி உள்ளோர் பார்த்து வெட்கித் தலை குனியும்படி ஏன் செய்ய வேண்டும்? அப்படி செய்யும் நடன ஆசிரியர்களும் பட முதலாளி களும் நமது நாட்டின் நடனக்கலைப் பண்பை மறக்க வேண்டாம்."

நடன ஆசிரியர் ஸ்ரீ ராமைய்யாப் பிள்ளை நிலைமையை வெகு நன்றாக எடுத்துக் கூறியிருக்கிறார். அதனால் ஏதேனும் பயன் விளையப் போகிறதா என்று பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

(கல்கி, செப். 21 - 1952)

## சோதனை இதுவோ?

மாயம் புரிந்து கோகுலம் போந்தனை
மன்னர் மகுடம் தன்னை மறந்தனை
தாயும் தந்தையும் தாரணியும் ஏங்கிட
ஆயர் குலத்தினைப் பாலனம் செய்தனை

நேயமாய் வந்தென் நினைவினில் கலந்தனை
நீள் துயரக்கடல் தன்னிலே தள்ளினை
தேயும் என் உயிர் இது நீ அறிந்திலையோ
மாதவனே உந்தன் சோதனை இதுவோ?

— அமரர் கல்கி



கோவை கேஜி. மருத்துவமனை லண்டன் SGS நிறுவனத்திடம் 'ISO 9002' சான்றிதழ் பெற்றுள்ளது. இந்தியாவில், ISO 9002 தரச் சான்றிதழ் பெற்ற மருத்துவமனைகள், மொத்தமே நான்குதான். அந்த நான்கை விடவும் இது சிறப்பு வாய்ந்தது என்றார்கள். எப்படி?

முன்னதாக ISO 9002 சான்றிதழ் பெற்ற மருத்துவமனைகள் கூட Single Speciality – அதாவது, ஏதாவது ஒரே ஒரு முக்கியமான துறையை தரச் சோதனைக்கு உட்படுத்தி இச்சான்றிதழ் பெற்றுக் கொண்டவை.

ஆனால் கோவை கேஜி. ஹாஸ்பிடல் 'Multi Speciality ISO 9002' சான்றிதழைப் பெற்று, இந்தியாவில் நெ. 1 ஹாஸ்பிடல் அந்தஸ்தைப் பெற்றுள்ளது!

இது தரச் சோதனைக்கு உட்படுத்திய துறைகள் ஒன்றல்ல... இரண்டல்ல.. ஆறுபத்தி மூன்று! முப்பத்தி மூன்று ISO நிபுணர்கள் இதற்கெனப் பிரத்தியேகமாக உருவாக்கப்பட்டு, தினம் நான்கைந்து துறைகளைத் தொடர்ந்து பரிசோதனைக்கு உட்படுத்தி, எட்டு மாத காலம் சுமார் 750 பேர் டீம் ஒர்க் செய்ததன் பலனாக இத்தரச் சான்றிதழ் கிடைத்திருக்கிறது!

# மயக்கும் மருத்துவ மனை!



• டாக்டர் பக்தவத்சலம்



• எங்கும் நேர்த்தி....

• எதிலும் சுத்தம்

மருத்துவமனைக்குள் நுழைந்து, ஒரு சுற்று வந்த போது நிர்வாகப் பிரிவு துவங்கி ஆய்வுக்கூடம், ஆபரேஷன் தியேட்டர்கள், ஸ்கேனிங் பிரிவு, அவசர சிகிச்சைப் பிரிவு, ரத்த வங்கி, செக்யூரிட்டி, கார் பார்க்கிங், பொது விசாரணைப் பிரிவு வரை எந்த மருத்துவமனைகளிலும் காணக் கிடைக்காத ஒழுங்கு, சுத்தம்! ஒவ்வொரு பிரிவுக்குள்ளும் செல்லும்முன் செய்யக் கூடியவை - செய்யக் கூடாதவை, ஒவ்வொரு கருவியை இயக்கும் முன் செய்யக் கூடியவை - கூடாதவை, (சுமார் ஆயிரக்கணக்கான கருவிகள் - பல கோடி மதிப்பீட்டில்) எனத் தனித்தனியே எழுதியே வைத்திருக்கிறார்கள்! அவற்றை அதிகாரிகள் முதல் கடைநிலை ஊழியர்கள் வரை இம்மி பிசகாமல் பின்பற்ற வேண்டும். அந்த ஒழுங்கைப் பார்த்து மயக்கம் வராத குறை!

தரக் கொள்கை என்பது பெரிய சமாசாரம். யார் யாருக்குக் கீழே வேலை பார்க்கணும்... தலைமைக்குக் கீழே எப்படி நடக்க வேண்டும்; எப்படியெல்லாம் பதில் கொடுக்க வேண்டும் என்பது தொடங்கி, ISO அறிக்கை எப்படி எழுத வேண்டும் என்பதற்குக் கூடத் தனி வழி-கம்-விதிமுறைகள்!

நடைமுறை அனைத்தையும் எழுதி வைத்து விட வேண்டுமாதலால், எந்த இடத்திலும் தவறு நேரவே வாய்ப்பில்லை! தவறு நேர்ந்தாலும் எளிதாகக் கண்டு பிடித்து விட முடியும்.

"மருத்துவத் துறையில் தவறு நேர்ந்தால் நுகர்வோர் கோர்ட்டுக்கு எப்பவும் போகலாம். ஆனால் பொதுவாக டாக்டர்களுக்குக் கூடுதல் லாபம் இருக்கு. நோயாளிகளின் உடல் நிலை அறிக்கையை, அவங்க நினைச்சா மாற்றி எழுதிடலாம். அதனால் கோர்ட்டுக்குப் போனா டாக்டர்களே ஜெயிச்சுடலாம்! நோயாளிகள் காட்டற ஆதாரம் பொய்யாப் போயிடலாம். ஆனா ISO 9002 அதை அனுமதிக்காது.. ரெக்கார்ட்ஸைத் திருத்தி எழுத முடியாது! ஆனால் தரமான மருந்துகளை, தரமான மருத்துவர்களால் - தரமான சிகிச்சை முறையைத் தருகிற எங்களுக்கு இதில் எந்தப் பாதகமும் இல்லை..." என்கிறார் கே.ஜி. மருத்துவமனையின் சேர்மன் டாக்டர் ஜி. பக்தவத்சலம்.

"கே.ஜி. ஹாஸ்பிடலில் அபரிமித கட்டண வசூல் உள்ளது எனப் பொது மக்களிடம் குற்றச்சாட்டு. அது ISO 9002 வாங்கினதன் மூலமாகக் கூடுதலாகி உள்ளதே...?"

இது தவறான அபிப்பிராயம். எங்களைப் பிடிக்காதவர்கள் இப்படி ஒரு வதந்தி பரப்புகிறார்கள் என நினைக்கிறேன். ஆனால் மக்களுக்கு உண்மை தெரியும். அதனாலேயே இவ்வளவு கூட்டம் வருகிறது. இப்போது கோயமுத்தூர்லயே எடுத்துட்டீங்கன்னா சின்னச் சின்ன மருத்துவமனைகள், கிளினிக்ஸ் நிறைய. அங்கே போயிட்டு வந்தவங்க சொல்றது என்னன்னா 'உங்ககிட்ட இருபது சதவீதக் கட்டணம் குறைவா இருக்கு' என்பது தான். அதோடு, தரம் கூடுதல் என்பது வேறு..! இந்தியாவிலேயே இண்ட்ரா ஆகுலர் லென்ஸ், இலவசமா பொருத்தப் படும் ஆஸ்பிடல் எங்களுடையது ஒன்று தான்! தினம் அதற்கு மட்டும் நாங்கள் ரூ. 75,000 செலவு செய்கிறோம்.!"

"ISO 9002 மூலமா அடிமட்ட மக்களுக்கு என்ன அனுகூலம்...?"

"எங்க கண் மருத்துவப் பிரிவில் ஒரு பைசா வாங்காம சிகிச்சை அளிக்கிறோம். ஆம்புலன்ஸ் ஏற்பாடு, லென்ஸ், உணவு, படுக்கை எல்லாமே இலவசம். அதுவும் ISO 9002 தரம்! அப்படிப் பண்ணினாத்தான் ஆப

---



**● கீர்த்திரெட்டியின் உடைகளை அவரது அம்மா அகல்யாவே வடிவமைக்கிறார். இதற்காக, கீர்த்திரெட்டி நடிக்கும் கம்பெனியிலிருந்து சில லகரங்களைக் கணிசமாகப் பெற்றுக் கொள்கிறார். பெங்களூரில் இவர் புகழ் பெற்ற காஸ்ட்யூம் டிசைனர். அதைச் சொல்லியே கீர்த்திரெட்டி நடிக்கும் படங்களில் காஸ்ட்யூம் டிசைனர் வாய்ப்பைத் தட்டிப் பறித்துக் கொள்கிறார் என்று நம்மூர் உடை நிபுணர்கள் புலம்புகிறார்கள்!**

• கீர்த்தி ரெட்டி




• ISO 9002 சான்றிதழ் வழங்கப்பட்டபோது...

ரேஷன் செய்யப்படுகிற அத்தனை பேருக்கும் கண் தெரியும்! இல்லாமல் போனா சிலருக்குக் கண் போய் விட சான்ஸ் இருக்கு! இதுக்கு மட்டும் ISO 9002 -ன்படி 30 அயிட்டம்ஸ் இருக்கு. 'நெ. 1. நல்ல செக் பண்ணணும்.., நெ. 2. கண்ணு நல்லா சுத்தமா இருக்கான்னு பார்க்கணும், நெ. 3. லென்ஸ் தரமானதான்னு பார்க்கணும்'. இப்படி முப்பது பாயிண்ட்டும் சரியா கவனிச்சாத்தான் அடுத்தநா நோயாளி சுத்தமா கண் தெரிஞ்சு, வீட்டுக்கு சந்தோஷமா போறதைப் பார்க்க முடியும்!"

"உங்களிடம் உள்ள மருத்துவர்கள், துறைகள் மிக அதிகம். தரப்படுத்தும்போது நிறைய சோதனைகள் வந்திருக்குமே?"

"உண்மைதான். சென்னையில் ஒரே ஒரு கண் மருத்துவமனை ISO 9002 வாங்குவது சுலபமாக இருந்தது. நாங்களும் முதல்ல சி.டி. ஸ்கான், ரத்த வங்கிக்கு மட்டும் ISO 9002 வாங்கலாம்ன்னுதான் இருந்தோம். சாப்பாட்டில் பல வகை அயிட்டம் பரிமாறப்படும் பொழுது பாயசம் மட்டும் நல்லா இருந்தா போதுமா? அத்தனை அயிட்டமும் நல்லாயிருக்கணும் அல்லவா? அதனால அனைத்தையும் தரமா மாற்ற முடிவு செஞ்சோம். அது பற்றி ஒரு பெரிய விழிப்புணர்ச்சியே ஏற்படுத்த வேண்டியதா போச்சு. முதலில் எங்க டாக்டர்களே, 'நாங்க செய்த வேலையை நீங்க ஏன் ஆடிட் பண்ணணும்னு' எதிர்ப்புத் தெரிவித்தனர். அந்த சமயத்தில் அவர்களுக்கு நிறைய விளக்கி ஒரு ISO 9002 புரட்சியே ஏற்படுத்த வேண்டியதாப் போச்சு! அப்புறம் பாருங்க, அது வாங்கும்போது அனைவருக்கும் ஒரே புளகாங்கிதம்! இப்ப எதிர்ப்புத் தெரிவிச்சவங்க கூட ஆடிட்டர்களா மாறிட்டாங்க..."

"ISO 9002 க்குக் கடும் உழைப்பு தேவைப்பட்டிருக்கிறது. தரச் சான்றிதழைத் தக்க வைத்துக் கொள்ள என்னென்ன ஏற்பாடுகள் செய்திருக்கிறீர்கள்?"

"தினம் செக்-அப் இருக்கு. ISO 9002 துறை ஒன்றை ஏற்படுத்தி முப்பத்திமூணு டாக்டர்களே இன்டர்னல் ஆடிட்டர்ஸா செயல்படறாங்க. அதற்குத் தமிழ்ச் செல்வன் என்பவர் தலைவர். தினம் நாலு துறை வீதம் செக் பண்ணிட்டே இருக்கிறார்கள். அதுதான் அவங்க வேலையே! ஆறு மாதத்திற்கு ஒரு தடவை SGS கம்பெனி ஆடிட்டர்ஸ் வந்து பரிசோதனை பண்ணி மறு சான்றிதழ் கொடுக்க எப்போதும் தயார் நிலையிலேயே உள்ளோம்...!"

கோவை வாசிகள் கொடுத்து வைத்தவர்கள்! ●

— கா.சு. வேலாயுதன்

# புதையல்

ஹேமா இராஜ்

எங்கே தப்பு? பதற்றத்துடன் யோசித்தார், பேராசிரியர்.

"முதல்ல அந்தக் கூம்புப் பாறையைக் கண்டுபிடிச்சோம். அப்புறம் அந்த மரக் கோயில். அந்த மரக் கோயில்ல இருந்த மாட்டுச் சிலையோட இடது பக்கக் கொம்புக்கு நேர் கீழ் இருக்கற இடம்தான் முதல் ரெஃபரன்ஸ் பாயிண்ட். அதைச் சரியா கண்டுபிடிச்சோம். அப்புறம் அங்க இருந்து இந்தக் கூம்புப் பாறைக்கு ஒரு நேர்க்கோடு. அந்த நேர்க்கோட்டை அப்படியே நீட்டி, ஒரு இருநூறு அடி தாண்டினதும் இந்த இடம் வந்தது. இங்கதான் தோண்டினோம். சரியாத்தான இருக்கு?" என்று சற்று வேகமாய்த் தன் கையில் இருந்த குறிப்புகளைப் புரட்டிய பேராசிரியர், கோபமாய்க் கத்தினார்.

"அப்ப எங்க நடந்தது தப்பு? எங்கே?"

ஒரு கனமான அமைதி நிலவியது. பேராசிரியர் மெல்ல தளர்ந்து அப்படியே தரையில் உட்கார்ந்தார். அவர் உடல் குலுங்க ஆரம்பித்தது. இதுநாள்வரை தன் தந்தை அழுது பார்க்காத ப்ரேம் திகைப்புடன் அவர் அருகில் சென்றான். அவர் கையில் இருந்த குறிப்புகளை வாங்கி மெல்லப் புரட்டினான்.

போபால். அடர்ந்த காடு. குரங்குகள். சமவெளி, மேற்குப் பக்கம். கூம்புப் பாறை. மரக் கோயில். மாட்டுச் சிலை. இடது பக்கக் கொம்பு. நேர்க்கோடு. இருநூறு அடி. எல்லாம் சரியாகத்தானே இருக்கிறது? அப்புறம் எங்கே, எப்படி தப்பு நடந்திருக்கும்? ப்ரேம் புருவங்களை சுருக்கிக் கொள்ள, சடாரென்று அவனுக்கு அது புரிந்தது. ஆமாம். இங்குதான் தவறு நடந்திருக்க வேண்டும். சரிதான். இப்படித்தான் இருந்திருக்க வேண்டும்.

"அப்பா.... அப்பா..." ப்ரேம் ஆர்வமாய்க் கத்தினான்.

"என்ன ப்ரேம்?"

"எங்கே தப்பு நடந்திருக்குன்னு கண்டுபிடிச்சிட்டேம்ப்பா!"

தரையில் இருந்து பேராசிரியர் துள்ளி எழுந்தார்.

"சொல்லு ப்ரேம்... எங்க தப்பு, என்ன தப்பு?"

"மொதல்ல மாணிக்கத்தைக் கூப்பிடணும். மாணிக்கம்... வா இங்கே..."

மாணிக்கம் சற்றுக் குழப்பத்துடனும், திகிலுடனும் முன்வந்தான்.

"மாணிக்கம், நல்லா கவனமா பதில் சொல்லு. அந்த மாட்டுச் சிலையின் எந்தப் பக்கக் கொம்பு வழியா தாமிரக்குண்டை விட்ட?"

"இடப்பக்கக் கொம்பு வழியா விட்டேனுங்க. பெரிய ஐயா அப்படித்தாங்க சொன்னாரு!"

"உன்னோட இடது பக்கமா? அந்த மாட்டோட இடது பக்கமா?"

மாணிக்கம் உட்பட அனைவரும் அதிர்ந்தார்கள். பேராசிரியர் கூட. மாணிக்கம் தன் இரண்டு கைகளையும் நீட்டி

அவரைத் தடுத்தான்.

"அப்பா... நில்லுங்க. தப்புப் பண்ணினது நீங்கதான். நீங்கதான் தெளிவாச் சொல்லியிருக்கணும். தாமிரக் குண்டையும் நூலையும் மாட்டோட இடதுபக்கக் கொம்பு வழியா விடுன்னு. நீங்க பொதுவா இடதுபக்கம் விடுன்னா யாருக்குமே தன்னோட இடதுபக்கமா விடத் தோணும். இது சிம்பிள் சைக்காலஜி. இது தெரியாம தப்புப் பண்ணினது நீங்க."

பேராசிரியர் அப்படியே உறைந்து நின்றார்.

அவர்கள் பெரும்பாலான வேலையை மீண்டும் செய்ய வேண்டியதாக இருந்தது. மரக் கோயிலின் கோபுரத்தின் மீது மாணிக்கம் மீண்டும் ஏற்றப்பட்டான். வெகு கவனமாக அவன் மாட்டுச் சிலையின் இடது பக்கக் கொம்பு ஓட்டை வழியாக தாமிரக் குண்டை இறக்கினான்.

முன்னம் தாமிரக் குண்டு தரை இறங்கிய இடத்திற்கும் இப்போதைய இடத்திற்கும் கிட்டத்தட்ட ஆறு அடி வித்தியாசம் வந்தது. இந்த ஆறு அடி வித்தியாசம் கழியை ஆறு அடி தள்ளி நட வைத்தது. பின்னர் அந்தப் புதிய இடத்தில் அமைந்த கழியில் இருந்து கூர்ப் பாறை வரையிலான நேர்க் கோடு வெகுவாக மாறி அமைந்தது. பின்னர் அந்த நேர்க்கோடு இருநூறு அடி நீட்டிக்கப்பட்டதும் புதிதாகக் கிடைத்த இடம், முதலில் அவர்கள் தோண்டிய இடத்தில் இருந்து தெற்குப் புறமாகக் கிட்டத்தட்ட பதினைந்து அடி தள்ளி வந்தது.

தெற்குப் புறமாகப் பதினைந்து அடி தள்ளிக் கிடைத்த இடத்தில் அவர்கள் தோண்ட ஆரம்பித்தார்கள்.

அவர்கள் ஒரு அடி தோண்டியதுமே உலோகச் சப்தம் அவர்களை வரவேற்றது. தோண்டுவதை நிறுத்தி விட்டு அவர்கள் மெல்ல இங்கிருந்த மண்ணை விலக்கி விட்டுப் பார்த்தார்கள். மெலிந்த, சற்று துருவேறிய தகடு அவர்களுக்குப் புலப்பட்டது. சுற்றி இருந்த மண்ணை விலக்க, ஆறடி விட்டத்தின் ஒரு வட்டமாக அந்தத் தகடு வெளிப்பட்டது.

பேராசிரியர் 'வெற்றி... வெற்றி' என்று கத்தாத குறை. ஏற்கெனவே சிவந்திருந்த அவர் முகம், உற்சாகப் பதற்றத்தால் மேலும் சிவந்திருந்தது. தன் கை கால்களைப் போலவே நடுங்கும் குரலில் அவர் உத்தரவைப் பிறப்பித்தார்.

"மெல்ல அந்தத் தகட்டை அப்படியே எடுங்க. தைரியமா எடுங்க. ஒண்ணும் கனமா இருக்காது. ஆங்... அப்படித்தான் மெல்ல."

அந்தத் தகடு எடுக்கப்பட்டதும், அதன் கீழே மற்றொரு உலோகத்தால் ஆன தடிமனான கதவு புலப்பட்டது. அது நான்கு அடி விட்டத்தில் வட்ட வடிவமாக இருந்தது.

அவற்றை மேலும் கீழுமாக சற்றுக் குழப்பத்துடன் ஆட்டிக் கொண்டான்.

"என்னோட இடது பக்கம் தாங்க. என்னோட இடது பக்கம் இருந்த கொம்பு ஓட்டை வழியாதாங்க அந்தத் தாமிரக்குண்டையும் நூலையும் விட்டேன்."

"முட்டாள்...." என்று கத்திக் கொண்டு பேராசிரியர் அவனை அடிக்க ஓடினார்.

ப்ரேம் இடையில் புகுந்து

அதன் மேற்புறம் ஒன்பது கட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. பேராசிரியர் அந்தக் கதவை நெருங்கிப் பார்த்தார். கூடவே ப்ரேமும். மற்றவர்கள் கொஞ்சம் தள்ளியே நின்றார்கள்.

பேராசிரியர் அந்தக் கதவின் மீது மெலிதாகப் படிந்து இருந்த மண்ணை விலக்கினார். அதன் மேற்புறத்தில் இருந்த கட்டங்கள் தெளிவு பெற்றன. பேராசிரியர் சற்று நேரம் அவற்றை ஆராய்ந்தார்.

"ப்ரேம்..." அவர் குரலில் இப்போது நிதானம் இருந்தது.

"அப்பா...."

"இந்தக் கட்டங்களை நல்லாப் பாரு. ஏதாவது வித்தியாசமா தெரியுதான்னு..."

"மொத்தம் ஒன்பது கட்டம் இருக்குப்பா. அதுல மூணு கட்டத்துல மட்டும் சின்னச் சின்ன ஓட்டைகள் இருக்குப்பா. அந்த ஓட்டைகள் இருக்கற கட்டங்கள், வரிசைக் கிரமமா இல்லாம, முன்ன பின்ன இருக்கு."

"ஒரு சின்னக் குச்சியை எடுத்துக்கோ."

ப்ரேமிடம் ஒரு மெல்லிய குச்சி தரப்பட்டது.

"அந்த ஓட்டைகள்ள இந்தக் குச்சியை மெதுவா நுழைச்சி, ஏதாவது மண்ணு அடைச்சிருந்தா கிளியர் பண்ணி விடு ப்ரேம்."

ப்ரேம் மெல்ல அந்தக் குச்சியை ஒன்றன் பின் ஒன்றாக அந்த ஓட்டைகளில் நுழைத்து, சற்றே அடைபட்டிருந்த அவற்றை சுத்தமாக்கினான். இரண்டு அங்குலம் அந்தக் குச்சி ஓட்டைகளின் உள்ளே நுழைந்தும் எதுவும் தட்டுப்படாததை ப்ரேம் உணர்ந்து கொண்டான். அதற்கும் மேலாகக் குச்சியை உள் நுழைக்க அவனுக்கு தைரியம் இல்லை.

பேராசிரியர் வேலையாட்களின் தலைவனைப் பார்த்துச் சொன்னார்.

"அந்தக் குரங்குகளைக் கொண்டு வாங்க."

"அப்பா..."

"என்ன ப்ரேம்?"

"குரங்கு எதுக்கப்பா?"

"பலி கொடுக்க!"

ப்ரேம் அதிர்ந்தான். தன் தந்தையிடம் இருந்து அந்த வார்த்தைகளை அவன் எதிர்பார்க்கவே இல்லை.

"என்னப்பா! என்ன சொல்றீங்க?"

"இந்தக் குரங்குகளை பலிகொடுக்கணும். அப்பத்தான் அந்தக் கதவு திறக்கும்!"

"அப்பா...."

"நான் சொல்லலை ப்ரேம். இந்தக் குறிப்புகள்ல இருக்கு. மூணு குரங்குகளோட தலையை வெட்டி அந்தத் துவாரங்கள் இருக்கற கட்டங்கள்ல வைக்கணும்."

ப்ரேம் தன் காதுகளை மூடிக் கொண்டான்.

"அப்பா, உங்ககிட்ட இருந்து நான் இதை எதிர்பார்க்கலை."

"இங்க பாரு ப்ரேம். நீ என்கிட்ட என்ன எதிர்பார்க்கறேங்கறதைப் பத்தி எனக்கு எந்தக் கவலையும் இல்லை. இப்ப நான் உன்கிட்ட எதிர்பார்க்கிறது மௌனத்தைத் தான்."

ஏகத்துக்கு மாறிப் போயிருந்த தன் தந்தையை ப்ரேம் திகைப்பாய்ப் பார்த்தான். அவருக்கு உள் இருந்து ஒரு தீமையே உருவான அடையாளம் மெல்ல மெல்ல வெளி வருவதை உணர்ந்தான்.

பேராசிரியர் முன் அந்தக் குரங்குகள் கொண்டு வரப்பட்டன. அவை மயக்க உணர்வில் இருந்து சற்று மீண்டிருந்தன. பேராசிரியர் அந்தக் குரங்குகளை கூண்டிலிருந்து வெளியேற்றச் சொன்னார். வேலையாட்கள் அந்தக் குரங்குகளை வெளியே எடுத்தார்கள்.

"இதுங்க தலையை வெட்டிடுங்க"

வேலையாட்களின் தலைவனிடம் ஒரு தயக்கம் தெரிய, பேராசிரியர் ஒரு உறுமலைத் தன் குரல்வளையில் இருந்து விடுவித்தார். எந்த வகையிலும் மனித அம்சமில்லாமல் தொனித்த அந்த உறுமல் வேலையாட்களை இயந்திரமாய் இயக்கியது. மூன்று பேர் குரங்குகளை அழுத்திப் பிடித்துக் கொள்ள, ஒரு வேலையாள் வீச்சரிவாளுடன் நெருங்கினான்.

காரியம் முடிந்ததும் அவர்கள் காத்திருந்தார்கள்....

சற்று நேரத்தில் அந்த மெல்லிய அதிர்வை அவர்கள் உணர்ந்தார்கள். இன்னதுதான், இங்கேதான் என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாதபடி அந்த அதிர்வு எங்கும் வியாபித்தது. பின்னர்

---

**"ரொம்ப நாளா நான் ஒரு கண் வச்சிருந்த அந்த விமலா, வங்கியில் இரண்டு லட்சம் ரூபா போட்டு வச்சிருக்கிற விஷயம் நேற்றுத்தான் எனக்குத் தெரிஞ்சது."**

"அப்புறம்?"

**"அப்புறம் என்ன! நேற்றிலிருந்து அவள் மீது ரெண்டு கண்ணும் வைக்க ஆரம்பிச்சிட்டேன்!"**

**– உ. ராஜாஜி**

---



அந்த மெல்லிய ஆனால் தெளிவான 'க்ளிக்' ஓசையை அவர்கள் அனைவருமே கேட்டார்கள். அடுத்தக்கணமே குரங்குகளின் தலைகள் இருந்த கதவு சற்று உள் சென்று, சுழன்று காணாமல் போனது!

அந்தக் கதவு இருந்த இடத்தில் நாலடி விட்டத்தில் ஒரு வட்ட வடிவ இருண்ட அந்தகாரம் அவர்களை எதிர்கொண்டது.

பயம், திகைப்பு, வியப்பு, ஆர்வம் இப்படிப் பலவான உணர்வுகள் ததும்பி வழியும் முகங்களுடன் அவர்கள் சிலை போல நின்று கொண்டிருந்தார்கள்.

ப்ரேம்தான் முதலில் தன்னிலைக்கு வந்தான்..

"அப்பா...."

"என்ன ப்ரேம்?"

"இது எப்படிப்பா நடந்தது? அந்தக் கதவு எப்படிப்பா திறந்தது?"

"இதுக்கு என்னால பதில் சொல்ல முடியலை. ஆனா, நம்மை மிஞ்சின ஒரு சக்தி இங்க இயங்கிச்சுன்னு எனக்குத் தோணுது ப்ரேம்..."

"இல்லப்பா! இதுல எந்த அமானுஷ்யமும் இல்ல. இது ப்யூர் மெக்கானிக்ஸ். தெளிவான இயக்கவியல். 'க்ளிக்'னு சப்தம் கூட வந்ததே. ஏதோ சாவியைப் போட்டுப் பூட்டை திறக்கற மாதிரி...."

பேராசிரியர் அமைதியாய் இருந்தார். ப்ரேம் தொடர்ந்தான்.

"அந்தக் குரங்குகளோட இரத்தம் ஒரு லூப்ரிகன்ட் மாதிரி. அந்தக் குரங்குகளோட தலைகளோட கனம் ஏதோ மறைஞ்சிருந்த விசைகளை இயக்கி இருக்கணும். அந்த இரத்தம் உராய்வைக் குறைக்கிற திரவமா, ஒரு லூப்ரிகன்டா செயல்பட்டிருக்கணும். இப்படித்தான் நடந்திருக்கணும்ப்பா..."

"அப்ப வெளியே சுழலா காத்து வந்ததே... அது என்ன?" என்றான் சோமு.

"உளறாத சோமு. வருஷக்கணக்கா அடைபட்டிருக்கற காத்து திடீர்னு வெளியேற வழி கிடைச்சா, அப்படித்தான் சுழலா வெளியேறும்."

பேராசிரியரின் குரல் ப்ரேமை இடைமறித்தது.

"இந்த ஆர்க்யூமென்ட் இப்ப அநாவசியம் ப்ரேம். மேற்கொண்டு ஆக வேண்டியதைப் பார்ப்போம்."

அவர்கள் அந்தத் துவாரத்தின் அருகில் சென்றார்கள். நாலடி விட்டத்தில் இருளாகத் தெரிந்த அது, மறைந்து கொண்டிருந்த சூரிய வெளிச்சத்தில் திகிலூட்டுவதாகவே தெரிந்தது! பேராசிரியர் தன்னுடைய டார்ச் லைட்டை உயிர்ப்பித்து அதன் பிம்பத்தை அந்தத் துவாரத்தினுள் பாய்ச்சினார். சிறிய படிக்கட்டுகள் சற்று கீழிறங்கி, பின்னர் வளைந்து எங்கேயோ பாதை போடுவது தெரிந்தது.

பேராசிரியர் தீப்பந்தங்கள் வேண்டும் என்றார். கொளுத்தப்படாத சில தீப்பந்தங்கள் அவரிடம் தரப்பட்டன.

"இப்பவே இதுக்குள்ள இறங்கணுமாப்பா?"

"பின்ன, இதுக்கு நாள் நட்சத்திரமா பார்க்கணும்?"

"இப்ப நான் சொல்றதை நல்லாக் கவனிங்க. நீங்க இங்க வந்த வேலை முடிஞ்சுப் போச்சு. இனிமே உங்களால ஆக வேண்டியது இன்னிக்கு எதுவும் இல்லை. அதனால நான், சோமு, ப்ரேம் மட்டும் இங்க இருந்து மேற்கொண்டு ஆக வேண்டியதைப் பார்த்துப்போம். நீங்க எல்லோரும் கூடாரங்களுக்குத் திரும்பிப் போயிடுங்க."

வேலையாட்கள் சற்றுத் தயக்கத்துடனும் நிம்மதியுடனும் தலையாட்டினார்கள். அவர்களின் தலைவன் முன்னால்' செல்ல, அவர்கள் அவனைப் பின்தொடர்ந்தார்கள்.

அவர்கள் மரங்களிடையே மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்த பேராசிரியர்,

"ப்ரேம், நான் சொல்றதைக் கவனமாக் கேட்டுக்கோ. இப்ப நானும் சோமுவும் இந்தக் குகைக்குள்ள போகப் போறோம்."

"அப்ப நானு?" என்று திகிலாய் பிரேம் இடைமறித்தான்.

"சொல்றதைக் கேளு. இந்த வேலையாட்களை நம்ப முடியாது. இந்நேரம் உள்ள என்ன இருக்குன்னு யூகிச்சிருப்பாங்க. அதனால நீ இங்க காவலா இரு. எதுக்கும் இதை வச்சுக்கோ" என்றவாறு தன்னுடைய இடுப்பில் இருந்த அந்த ரிவால்வரை எடுத்து நீட்டினார்.

ப்ரேம் தயக்கத்துடன் அதை வாங்கித் தன் இடுப்பில் செருகிக் கொண்டான்.

பேராசிரியர் சிகரெட் லைட்டர் மூல மாக அந்தத் தீப்பந்தங்களைக் கொளுத்திக் கொண்டார். ஒரு தீப்பந்தத்தை ப்ரேமின் கையில் கொடுத்தார்.

"ஜாக்கிரதை ப்ரேம்!"

பேராசிரியர் அந்தத் துவாரத்தின் அருகில் சென்றார். தீப்பந்தத்தை அதனுள் நுழைத்து, கிடைத்த ஒளியில் அந்தத் துவாரத்தை சற்று நேரம் ஆராய்ந்தார்.

பின்னர் மூச்சை நன்கு உள்வாங்கிக் கொண்டு ஒரு காலை உள்ளே படியில் வைத்தார். அவர் மெல்ல மெல்ல துவாரத்தினுள் மறைவதை ப்ரேம் பார்த்துக் கொண்டிருந்தான். எங்கேயோ மீள முடியாத இடத்திற்கு அவர் போவது போல அவனுக்குத் தோன்றியது.

சோமு அவன் தோளைத் தொட்டதும் நிமிர்ந்து பார்த்தான்.

"பயப்படாதே ப்ரேம். நான் பார்த்துக்கறேன். நீ ஜாக்கிரதையா இருந்துக்கோ. எதுன்னா பிரச்னைன்னா உடனே கூடு. சப்தம் கேட்டுட்டு நான் ஓடி வந்துடறேன்."

ப்ரேம் தலையசைக்க, சோமு அந்தப் படிகளில் இறங்கி மறைந்தான்.

பேராசிரியரும் சோமுவும் குகையினுள் போய் அரைமணி நேரத்திற்கு மேல் ஆகிவிட்டது.

இதுவரை லேசாக அவன் அடி மனதை நனைத்துக் கொண்டிருந்த பய ஓடை திடீரென்று பிரவாகமாய்ப் பாய ஆரம்பிக்க, அதில் முற்றிலுமாய் நனைந்து போன அவன், ஏதோ அந்தப் பயத்தில் இருந்து தப்பிக்கப் போவது போல சடாரென்று அந்தத் துவாரத்தினுள் நுழைந்தான். நுழைந்தவுடன் அதுவரை இருந்த தயக்கம் காணாமல் போக, வளைந்த படிக்கட்டுகளில் இறங்கினான்.

அரைவட்டமாய் வளைந்த படிக்கட்டுகள் சட்டென்று சமவெளிக்கு இட்டுச் செல்ல, அவன் ஒருகணம் நிதானித்தான். ஆறடி உயரமும் நான்கடி அகலமும் உடைய ஒரு குகைப் பாதையில் தான் நின்று கொண்டிருப்பதை உணர்ந்தான். உள்ளிழுத்த காற்று தன் பழைமையை உணர்த்தியது. ஆயிரம் ஆண்டுகளாக எந்த நாசித் துவாரங்களிலும் நுழையாத காற்றை நாம் உள்ளிழுக்கிறோம் என்று நினைத்த போது ஏதோ ஒருவகைப் பெருமிதம் தன்னுள் ஊறுவதை அவன் உணர்ந்தான்.

தீப்பந்த வெளிச்சத்தில் தூரங்களும், தோற்றங்களும் சிதிலமாகித் தெரிய, அவன் மெல்ல மெல்ல நடந்தான்.

சடாரென்று ஒரு திருப்பத்தின் முடிவில் அந்த வெளி தெரிந்தது. ஒரு சிறிய மண்டபத்தைப் போன்ற இடத்தில் அவன் நுழைந்தான். பூமிக்கு அடியில் இருந்த காரணத்தால் அவன் முதலில் அதன் குளிர்ச்சியைத் தான் உணர்ந்தான். மேலேயும் கீழேயும் நான்கு பக்கங்களிலும் மண் தரை. இறுகிய மண்ணையே அரணாகக் கொண்ட பாதாள மண்டபத்தின் சுவர்களில் பேராசிரியர் கொண்டு வந்த தீப்பந்தங்கள் செருகப்பட்டு வெளிச்சத்தை வீசிக் கொண்டிருந்தன.

ஆனால் ப்ரேமின் கவனத்தைக் கவர்ந்தது அந்த மண்டபத்தின் மையத்தில் இருந்த அமைப்புதான். ஒரு சிறிய வட்டமான பீடத்தின் மீது அந்தச் சிலை காணப்பட்டது. ஆறடி உயரத்தில் மனித உடலும் எருமை மாட்டின் தலையுமாய் சற்றே அகட்டி வைக்கப்பட்ட கால்களும் இடுப்பிலே வைக்கப்பட்ட கைகளுமாய் ஒரு சூட்சுமமான இருப்பை அந்தச் சிலை வெளிப்படுத்திக் கொண்டிருந்தது.

மிகப் பெரியதாகவும் அடர் கறுப்பாகவும் காணப்பட்ட அந்தக் கண்களில் தீப்பந்தங்களின் இரத்த வெளிச்சம் படர்ந்து ஒரு அதி பயங்கர ஆக்ரோஷ உயிர்ப்பைப் புலப்படுத்திக் கொண்டிருந்தது.

அந்த உயிர்ப்பைத் தொடர்ந்து பார்க்க முடியாமல் தன் கண்களை தாழ்த்திக் கொண்டான். அந்தச் சிலைக்குச் சற்று முன்னால் ஒரு பெரிய செவ்வகப் பள்ளம் காணப்பட்டது. எட்டடி நீளமும் நான்கடி அகலமும் இருந்த அந்தப் பள்ளத்தைப் பார்த்ததும் ப்ரேமின் முதுகெலும்பின் ஊடே ஒரு கடும் குளிர் உணர்வு ஓடியது. அவன் சிலிர்ப்புடன் பார்வையை அந்தப் பள்ளத்திலிருந்து அகற்றினான்.

அந்தப் பள்ளத்திற்கு முன்னே மரத்தால் ஆன ஒரு செவ்வக வடிவ மேஜை போன்ற பீடம் காணப்பட்டது. அதன் மேல் சோமு, மேல் சட்டையின்றிப் படுத்திருந்தான். வெகு சீராக ஏறி இறங்கிக் கொண்டிருந்த அவன் மார்பு அவன் ஆழ்ந்த மயக்கத்தில் இருப்பதைப் புலப்படுத்தியது! அவன் அருகில் சிலைக்கு முதுகைக் காட்டியவாறு பேராசிரியர் நின்று கொண்டிருந்தார். அவர் கையில் இருந்த கத்தி, தீப்பந்தங்களின் ஒளியில் அமானுஷ்யமான மினுமினுப்பைப் பெற்றிருந்தது!

(தொடரும்)

அருட்செல்வர் அருளும் உதவித்தொகையோடு

மிகக் குறைந்த விலையில்

# சமய இலக்கியங்கள்



வர்த்தமானன் பதிப்பகம் வழங்கும் மாபெரும் முன் வெளியீட்டுத் திட்டம்

# ஒரே ஆண்டில்

புத்தக உலகில் இதுவரை எவரும் துணியாத முயற்சி

4 மாபெரும் முன் வெளியீட்டுத் திட்டங்கள்

(1) நவம்பர் 97 : வியாசபாரதம், வால்மீகி இராமாயணம், ஸ்ரீமத் பாகவதம்
(2) மார்ச் 98 : பன்னிரு திருமுறைகள், திருவிளையாடற்புராணம்
(3) மே 98 : கம்பராமாயணம், உத்தரகாண்டம்
(4) நவம்பர் 98 : ஐம்பெருங்காப்பியங்கள்

**இந்த வெற்றியினைத் தொடர்ந்து**

தற்போது **சங்க இலக்கியங்கள்** – 15 தொகுதிகள்

இலவசம் : **பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்** – 5 தொகுதிகள்

வழக்கம்போல்
**சலுகை,**
**சலுகை மேல் சலுகை,**
**சிறப்புச் சலுகை,**
**இலவச நூல்,**
**தவணை முறை**
ஆகிய அனைத்தும் உண்டு.

## சங்க இலக்கியங்கள்

15 தொகுதிகளில் அடங்கிய நூல்கள்

**எட்டுத்தொகை :** நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு.

**பத்துப்பாட்டு :** திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம்.

## பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்

5 தொகுதிகளில் அடங்கிய நூல்கள்

திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, இனியவை நாற்பது, இன்னா நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணை மாலை நூற்றைம்பது, திணை மொழி ஐம்பது, திரிகடுகம், ஆசாரக் கோவை, சிறுபஞ்ச மூலம், பழமொழி நானூறு, முதுமொழிக் காஞ்சி, ஏலாதி, இன்னிலை, கைந்நிலை

**அனைத்தும் மூலமும் உரையுமாக அமைந்தவை**



# மங்காத சங்கத் தமிழ்போல் வாழ்க!

அன்று பறம்பிற் கோமான் **பாரி**யும்
கொல்லி யாண்ட வல்வில் **ஓரி**யும்
மாரி யீகை மறப்போர் **மலையனு**ம்
குதிரைமலைத் தலைவன் கூர்வேல் **எழினி**யும்
பெருங்கல் நாடன் **பேகனு**ம்
திருந்து மொழி மோசி பாடிய **ஆயு**ம்
தள்ளாது ஈந்த **நள்ளி**யும் எனவாங்கு
எழுவர் மாய்ந்த பின்னர்
'என்னரும் செல்வம் யார் காப்பார்?' எனத்
தமிழ்த்தாய் ஏங்கித் தவிக்கும் இந்தநாளில்
'யான் காப்பேன்!' என எழுந்தார் அருளின் செல்வர்!
இதோ முழங்கிற்றுப் பார் முத்தமிழ்ச் சங்கம்!
தாழாது இனித் தமிழ் எங்கும் தழைக்கத்
தளராது வழங்கும் நம் **அருட்செல்வர்**
மன்னும் இமயமலை போல் வாழ்க!
மங்காத சங்கத் தமிழ்போல் வாழ்க!



# சங்க காலம் ஒரு பொற்காலம்

உலகத்தில் எந்த நாடும் பெறாத பேற்றை நம் பண்டைத் தமிழர் வாழ்விலும், அவ்வாழ்வை உணர்த்தும் சங்க இலக்கியங்களிலும் கண்டு உணர்ந்த பாரதியார், ''தந்தையர் நாடெனும் பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே'' என்று பெருமிதம் தோன்றப் பாடி மகிழ்ந்தார். இந்தச் சக்தி எதனால் தோன்றியது? நம் முன்னோரின் சீரிய வாழ்வால் தோன்றியதல்லவா? நம் முன்னோர் வாழ்ந்த வாழ்வு, கொண்ட கொள்கை, போற்றிய அறம் ஆகியவற்றைப் பழந்தமிழ் இலக்கியங்கள் பெருமையுடன் பறை சாற்றுகின்றன.

'பழந்தமிழ் நாட்டு மக்கள் வேற்று நாட்டவருடன் நெருங்கிய தொடர்பு கொள்வதற்கு முன்னமே தமிழிலக்கியம் தோன்றி வளரத் தொடங்கியது. அதனால் பழந்தமிழிலக்கியம் நாட்டின் சொந்தக் கலையாய் வளர்ந்தது. வேற்று நாட்டு இலக்கியத்தின் சார்போ கலப்போ இல்லாமல் தமிழிலக்கியம் வளர்ந்த காலம் அது. ஆதலின் தமிழ் நாட்டு இயற்கை வளமும், பழந் தமிழரின் வாழ்க்கை நெறியுமே, அந்தப் பழைய இலக்கியத்திற்கு அடிப்படையாக அமைந்தன'.

'தமிழ்நாடு முப்புறமும் கடல் சூழ்ந்ததாய், குன்றமும் காடும், அருவியும், ஆறும், வயலும், சோலையும் சூழ்ந்து அழகு செய்வதாய் வளமுள்ளதாக அமைந்துள்ளது. இயற்கையன்னை, தமிழ் நாட்டு மக்களை அச்சுறுத்துபவளாக இல்லை. மக்கள் இயற்கையின் உதவியைப் பெற்று இயற்கையோடு ஆடிப்பாடி இயற்கையோடு இயைந்து வாழும் இயல்பைப் பெற்றிருந்தனர். இத்தகைய இயற்கைச் சூழலில் வாழ்வு நடாத்திய பழந்தமிழரின் கற்பனைக் கனவுகளும் இயற்கையோடு இயைந்தன வாகவே விளங்கின. அத்தகைய இன்பக் கனவுகளையே பழந்தமிழ் இலக்கியங் களில் காண்கிறோம்.

## வாழ்வே இலக்கியம்

ஒத்த அன்பும், ஒத்த பண்பும், ஒத்த வயதும், ஒத்த கல்வியும் உடைய ஆண் பெண் இருவரின் காதல் வாழ்வையே பழந்தமிழ் இலக்கியங்கள் உரைக்கின்றன. இயற்கை வாழ்வில் திளைத்த போதிலும் பழந்தமிழர் நாடும், நகரமும், அரசும் அமைத்து வாழலாயினர். அடுத்தடுத்து நாடும் நகரமும் அமையவே பூசலும் போரும் எழுந்தன. ''ஆகவே போரின் தொடர்பான வீர உணர்ச்சிகளும், அவற்றின் முடிவான வெற்றி முதலியவற்றின் கொண்டாட்டங்களும், ஆடல் பாடல்களும் இவற்றில் வல்ல கலைஞர்களுக்குப் பரிசில் கொடுத்து மகிழ்விக்கும் வண்மைச் செயல்களும் பழந்தமிழ் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.

நம் முன்னோர் தாம் படைத்த இலக்கியச் செல்வங்களிலெல்லாம் உயர்ந்த குறிக்கோளை வற்புறுத்த விழைந்தனர். ஆகவே அகப்பாட்டுக் களெல்லாம் அவ்வாறே அமையலாயின. தலைவன் தலைவி முதலியோர் பெயரைக்



குறிப்பிடாமல் தம் கற்பனைகளை யாவர்க்கும் பொதுவாக்கிப் பாடினர். காதல் உணர்ச்சிளைப் பற்றிய பாட்டுக்க ளெல்லாம் அகம் என்றும் மற்றையவற்றைப் புறம் என்றும் முறைப் படுத்தினர். தூய காதற் பாட்டுக்களைத் திணை துறைப்படுத்தி வகுத்தது போலவே புறப்பாடல்களையும் பாகுபாடு செய்து இலக்கிய மரபு ஒன்றை ஏற்படுத்தினர். ஆகவே விரிவான இலக்கியமும் தோன்றலாயிற்று.

காலப்போக்கில் பல பாடல்கள் அழிந்தன. கிடைப்பவற்றைக் காக்க வேண்டும் என்ற முயற்சி சங்க காலத்தில் தோன்றியது. அதன் பயனாகக் கிடைத்த பாடல்களைப் பொருள் நோக்கி, அகம் புறம் என்று முதலில் பிரித்தனர். பின்னர், அடிவரையறை கருதி வகுத்து அமைத்தனர். எட்டுத்தொகையிலும், பத்துப் பாட்டிலும் உள்ள செய்யுட்களின் எண்ணிக்கை 2380. அவற்றுள் மூன்று அடிச் செய்யுள் முதல் எழுநூற்று எண்பத்திரண்டு அடிச் செய்யுள் வரை பல திறத்தன உள்ளன.



## இயற்கையோடு இயைந்த வாழ்க்கை

பழந்தமிழர் இயற்கை வாழ்வு வாழ்ந்த போதிலும் இயற்கையை மட்டுமே பாடிக் கொண்டிருக்கவில்லை. அவர்கள் இயற்கையை வருணித்த இடங்களில் மக்களின் வாழ்வே பாட்டின் உரிமைப் பொருளாக விளங்குகிறது. இயற்கை அவ்வாழ்வுக்குப் பின்னணியாக, முதற் பொருளாகவும் கருப்பொருளாகவும் அமைந்துள்ளது. நெடுநல்வாடை முதலிய நெடும் பாட்டுக்களிலும் இயற்கை எவ்வளவோ விரிவாக வருணிக்கப்பட்டிருப்பினும் இயற்கைப் பொருளே பாட்டின் பெயராக அமையினும், இயற்கைக்கு அங்கு முதன்மை இல்லை. மக்களின் வாழ்வுக்கே முதன்மையுள்ளது.




## புலவர்கள்!

இப்பாடல்களைப் பாடியவர்களில் இயற்பெயரால் அறியப் பெற்றவர் பலர்; சிலர் இயற்பெயர் மறக்கப்பட்டு, அவர்கள் பாடிய பாட்டுக்களின் சிறப்பால் காரணப் பெயர் பெற்றுள்ளனர். இவ்வாறு இயற்பெயராலும், காரணப் பெயராலும் அறியப்பெறும் புலவர் 473 பேராவர். இவருள் 30 பேர் பெண்பாலார்; அரச குடும்பத்தைச் சார்ந்தவர் 25 பேர்; புலவர்களின் பெயர் அறியமுடியாத செய்யுட்கள் 102 உள்ளன.



## சங்க இலக்கியப் பாகுபாடு

சங்க நூல்கள் என்று கூறப்படும் எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் பல செய்யுட்களின் தொகுப்புக்களாகும். அத்தொகுப்பில் காணப்பெறும் பாடல்கள் ஒரே காலத்தில் பாடப்பெற்றவை அல்ல. பல புலவர்களால், நாட்டின் பல்வேறு பகுதிகளில் வெவ்வேறு காலத்தில் பாடப் பெற்றவையாகும். பழந்தமிழ்ப் பாடல்கள் அனைத்தும் நமக்குக் கிடைக்கவில்லை.



## யாதும் ஊரே யாவரும் கேளிர்

**உலக மக்கள் அனைவரும் உறவினரே!**

இப்பாட்டுக்களினின்று பழந்தமிழரின் சிறப்பியல்புகளை நாம் உணரலாம். இன்று பலபடப் பாராட்டிப் பேசும் பொதுமை நோக்குச் சங்க காலத்திலேயே விளக்கம் பெற்றதை, **''யாதும் ஊரே யாவரும் கேளிர்''** என்ற தொடரால் அறியலாம். இன்பமும் துன்பமும் உலக இயற்கை என்பதைத் தெளிவாக உணர்ந்தவர்கள் அவர்கள். இந்த உண்மை நிலையை உணர்ந்து 'இனியவற்றைக் கண்டு இன்பமாக வாழ்தல் வேண்டும்' என்பது புலவர் கருத்து.

## பொய்யுரையாப் புனிதர்!

மக்களுடைய செம்மை சான்ற வாழ்க்கையை அக்காலப் பாடல்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன. பழந்தமிழ் நாட்டு மக்கள் உண்மையைப் போற்றி வாழ்ந்தனர். வள்ளலிடத்தில் பரிசு பெற விரும்பிய புலவர் ஒருவர், ''வாழ்தல் வேண்டிப் பொய் கூறேன்; மெய் கூறுவல்'' என்று உண்மை விளம்பினார்.

## மான உணர்ச்சி

பண்டைத் தமிழரின் தலையாய பண்புகளில் ஒன்றாக விளங்கியது மான உணர்ச்சி. மானம் என்றால் என்ன என்பதைப் பரிமேலழகர் திருக்குறளுக்கு உரையெழுதும் பொழுது, ''எஞ்ஞான்றும் தன் நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும்'' என்று விளக்கினார்.

பொய்யில் புலவரும், ''மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார், உயிர் நீப்பர் மானம்வரின்'' என்றார். இம்மான உணர்ச்சியில் அக்காலத் தமிழர் மிகச் சிறந்து விளங்கினர். சோழன் செங்கணானிடம் தோல்வியுற்றுச் சிறைப்பட்ட சேரமான் கணைக்காலிரும்பொறை, காவலாளரிடம் பருகிடத் தண்ணீர் கேட்க, அவர்கள் காலந் தாழ்த்திக் கொணர்ந்தனர். இச்செயல் அவமானத்திற் குரியது என்றுணர்ந்த சேரமான் உயிர் துறந்தான். சேர மரபைச் சார்ந்த மற்றொரு மன்னனான பெருஞ்சேரலாதன், கரிகாலனுடன் வெண்ணிப் பறந்தலையில் போர் செய்யும் போது, வேல் ஒன்று மார்பில் பாய்ந்து புறம் போந்து புண்ணுண்டாக்கியது. அப்புறப் புண்ணுக்கு நாணி வடக்கிருந்து உயிர் துறந்தான் சேரன். ''மன்னன் எவ்வழி அவ்வழி மக்கள்'' என்பதற்கேற்பக் குடி மக்களும் மானத்துடன் வாழ்ந்து சிறந்தனர்.

சங்க கால மன்னர்கள் எப்படியெல்லாம் போற்றும்படி திகழ்ந்தனர் என்பதனை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். ஓய்மா நாட்டு நல்லியக் கோடன் என்னும் மன்னனை நல்லூர் நத்தத்தனார் பாடும் சிறுபாணாற்றுப் படை நம் சிந்தைக்கு விருந்தாகும். அம் மன்னன் செய்ந்நன்றி மறவாத சீலம் உடையவன்; சிற்றினம் சேரா இயல்பினன்; மலர்ந்த முகமும் இனிய சொற்களும் உடையவன்.அவனது இத்தகைய இனிய பண்புகளை அறிஞர் பாராட்டுவர்.

அஞ்சினவர்களுக்கு அடைக்கலம் தந்து காப்பவன்; சினம் கொள்ளாச் சிறப்பினன்; பகைவர் படைக்குள் நுழைந்து அவர்களை நிலை குலையச் செய்பவன்; நிலை குலைந்து தடுமாறும் தன் படையை



வீறுகொண்டு எழச் செய்யும் ஆற்றல் உடையவன். அவனது இத்தகைய அடல் ஆண்மையை வாள் வீரர் பாராட்டுவர்.

எண்ணிய எண்ணியவாறே முடிக்கும் ஆற்றல் உடையவன்; பிறரால் விரும்பப் படுபவன்; பிறரை விரும்புபவன்; ஒரு தலைப் பக்கமாகச் சாயாதவன்; மற்றவர் கருத்தை மதித்து நடப்பவன்! அவனது இந்த இனிய இயல்புகளை மகளிர் பாராட்டுவர்.

தன்னிலும் அறிவு குறைந்தவர் மத்தியில் தானும் அவ்வாறே காட்டிக் கொள்பவன்; அறிவுடையோர் முன் அறிவுடையோனாய்த் திகழ்பவன்; அவரவர் தகுதி அறிந்து தருபவன், இத்தகை இனிய பண்புகளைப் பரிசிலர் பாராட்டுவர்.

அடையா வாயில் அவன் அருங்கடை குறுகி
செய்ந்நன்றி அறிதலும், சிற்றினம் இன்மையும்,
இன்முகம் உடைமையும், இனியன் ஆதலும்
செறிந்து விளங்கு சிறப்பின் அறிந்தோர் ஏத்த;

அஞ்சினர்க்கு அளித்தலும் வெஞ்சினம் இன்மையும்,
ஆண் அணிபுகுதலும், அழிபடை தாங்கலும்,
வாள்மீக் கூற்றத்து வயவர் ஏத்த;

கருதியது முடித்தலும், காமுறப் படுதலும்,
ஒருவழிப் படாமையும், ஓதியது உணர்தலும்,
அரிஏர் உண்கண் அரிவையர் ஏத்த;

அறிவு மடம் படுதலும், அறிவு நன்கு உடைமையும்,
வரிசை அறிதலும், வரையாது கொடுத்தலும்
பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்த -



விண்மீன்களுக்கு இடையே விளங்கும் முழுமதிபோல வீற்றிருக்கும் மன்னனை, 'பெரியோரைக் கண்டால் ஒரு முறை அல்ல - பலமுறை வணங்கி வாழ்த்தும் கையை உடையவனே என்றும், உன்னிலும் இளையவர்களைக் கண்டால் அவர்களை ஆரத் தழுவிக் கொள்ளும் மார்பினை உடையவனே என்றும், உழவர்களைக் காக்கும் செங்கோலினை உடையவனே என்றும், தேர் ஏறி வரும் பகைவர்க்கு அச்சத்தைத் தரும் வேலினையுடையவனே' என்றும் போற்றிய அளவில் வேண்டியவற்றை வரையாது வழங்கினான் மன்னன். இதனை,

முதுவோர்க்கு முகிழ்த்த கையினை எனவும்
இளையோர்க்கு மலர்ந்த மார்பினை எனவும்
ஏரோர்க்கு நிழன்ற கோலினை எனவும்
தேரோர்க்கு அழன்ற வேலினை எனவும்

பாடிய அளவில் நன்பொருள் அளித்து, நல்லுள்ளம் மகிழ்ந்தான் அவ்வேந்தன் எனப் பாராட்டுகிறது, சிறுபாணாற்றுப் படை.

## இலக்கியமே சான்று

தமிழ் நாட்டின் சங்ககால வரலாற்றை அறிவதற்கு அக்காலக் கல்வெட்டுக்களோ அன்றி நாணயங்களோ கிடைத்தில; இலக்கியங்களே கிடைத்துள்ளன. முடியுடை மூவேந்தர்கள், குறுநில மன்னர்கள், கடையெழு வள்ளல்கள், புலவர்கள் ஆகிய இவர்களுடைய வரலாறு களைப் பற்றிய குறிப்புக்களை நாம் புறநானூற்றில் கண்டு களிக்கலாம். புறப்பாடல்களைப் பாடிய புலவர்கள் என்றோ நடந்த நிகழ்ச்சிகளைப் பின்னர் நினைத்துப் பார்த்துப் பாடினாரல் லர். அவர்கள் தத்தம் காலத்து மன்னர்கள், வள்ளல்கள் முதலியோரைப் பற்றி அவ்வப்போது பாடி முடித்தனர். பொய் உரையாப் புலவர்கள் கூற்றில் நம்பத் தகாதவை இருக்க முடியாது.



## அறம் பொருள் இன்பம்

புலமை நலம் மிக்க சான்றோர் பலர் அவ்வப்போது மன்னரைச் சார்ந்து அறிவுரை கூறினர். மன்னர்களும் அவ்வறிவுரைகளைப் பொன்னேபோல் போற்றிப் பின்பற்றினர். சோழன் நலங்கிள்ளிக்கு உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்னும் புலவர் அறிவுரை கூறும்போது, ''உன் செல்வம் அறம் பொருள் இன்பம் ஆகியவற்றை வளர்க்க வேண்டும்; அங்ஙனம் நீ அதனைச் செய்யாவிடின், உன்னை நீ பாதுகாவாதவன் ஆவாய்'' என்று கூறினார்.

''அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெருமதின் செல்வம்
ஆற்றா மைந்நிற் போற்றா மையே.''

அறவாழ்வில் பற்றுக் கொண்ட மன்னர்கள் கொடை நோக்கில் சிறந்து வாழ்ந்த செய்தியைச் சங்க இலக்கியங்களால் நாம் அறியலாம். அவர்கள் ''செல்வத்துப் பயனே ஈதல்'' என்பதனை உணர்ந்து ஈத்துவக்கும் ஈர நெஞ்சினராய் விளங்கினர். அம் மன்னர்களின் கொடைத்தன்மை மறுமை நோக்கியது அன்று; பிறர் வறுமை நோக்கியது.

## துறவு ரெ

இல்லற இனிமையைப் பாராட்டும் இலக்கியங்களில் துறவறத்தின மேன்மையயைக் கூறும் பாடல்களையும் கண்டு மகிழலாம். ''உலகப் பற்றினை விட்டுத் தவநெறியை மேற்கொண்டவரைத் திருமகள் விடாள்; அப்பற்றினை விடாதவரைத் தான் விட்டு விலகுவாள்'' என்பதனை வான்மீகியார் என்னும் புலவர்,

''விட்டோரை விடாஅள் திருவே
விடாஅதோரிவள் விடப்பட்டோரே''

என அழகுறக் கூறுகிறார்.

## உணவு கொடுத்தோர் உயிர் கொடுத்தோராவர்

''பிறருக்கு உண்டி (உணவு) கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்'' என நன்றியோடு போற்றுகிறது சங்க இலக்கியம். உண்டிக்கு இன்றியமையாது தேவைப்படுவது நீர். நிலம் பள்ளமான பகுதிகளில் நீரைத் தேக்கி வைத்து உணவுப் பொருள் பெருகச் செய்த சான்றோர், தம் புகழையும் இவ்வுலகில் தேக்கி வைத்தவராவர்; நீர் நிலைகளைப் பாதுகாவாதவர், தமது புகழையும் காவாதவராவர்'' எனக் கூறுகிறது ஒரு புறப்பாட்டின் பின்வரும் அடிகள்.

''நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்மஇவண் தட்டோரே
தள்ளாதோர் இவண் தள்ளா தோரே''.

உணவைப் பெருக்கி வீட்டிலிருந்து வாழும் வாழ்க்கை பிறர்க்கு விருந்தோம்பவே என்பதனை நன்கு உணர்ந்தவர்கள் தமிழர். சாவா மருந்தெனினும் தனித்திருந்து உண்ணாத பெருவாழ்வைப் பண்டைப் பனுவல்கள் பெரிதும் பாராட்டி உரைக்கும்.



## மகளிர் வாழ்வு

'மலையிலே பிறக்கிறது சந்தனம். அச் சந்தனத்தால் மலைக்கு என்ன பயன்? அது பூசுபவர்க்கு அல்லவா பயனைத் தருகிறது! கடலிலே பிறக்கிறது முத்து. அம் முத்தால் அக்கடலுக்கு என்ன பயன்? அது அணிபவர்க்கு அல்லவா அழகு தருகிறது! யாழிலே பிறக்கிறது இசை. அவ் இசையால் யாழுக்கு என்ன பயன்? அது கேட்பவர்க்கல்லவா இன்பத்தைத் தருகிறது!'' என்ற பல உண்மைகளைக் காட்டி ஒரு பெண் திருமணத்துக்குப் பின், பிறந்த வீட்டைப் பிரிந்து வேறோர் இடத்தில் வாழ்க்கைப்படுவாள் என்பதை அறிவுறுத்துகின்றனர். இவ்வரிய கருத்துக் கள் அமைந்த தாழிசைகள் வருமாறு:



''பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே

சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே

ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என்செய்யும்
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே''

பண்பு, அன்பு, அறிவு ஆகியவற்றைப் பற்றி,

''பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்''
''அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை''
''அறிவெனப் படுவது பேதையார் சொல் நோன்றல்''

என மாண்புற விளக்குகின்றன இவ்வரிகள்.

## வரலாற்றுக் குறிப்புகள்

முதற் கரிகாலனைப் பற்றி இரு புறப்பாடல்கள் கூறுகின்றன. இவன் கரிகாற் பெருவளத்தானுக்குப் பாட்டானா வான். இம்முதற் கரிகாலன் வெண்ணிப் பறந்தலையில் பெருஞ் சேரலாதனுடன் போரிட்டபோது, சேரன் புறப்புண் நாணி வடக்கிருந்தான் என அறிகிறோம்.

இரண்டாம் கரிகாலன் இமயம்வரை சென்று பகைவரை வென்றவன். இவன் காலத்தில் பூம்புகார் மிகச் சிறந்த துறைமுகப் பட்டினமாக விளங்கியது என அறிகிறோம். இவனுக்குப் பின் நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, கிள்ளி வளவன், கோப்பெருஞ்சோழன் முதலியோர் சோழநாட்டை ஆண்ட செய்தியையும் புறநானூறு தெரிவிக்கிறது.

வட இந்தியாவை அடிமைப் படுத்திய வரலாற்றுச்சிறப்புடைய பேரரசன் மோரிய சந்திரகுப்தன் ஆவான். அவனைப் போலவே பாண்டியருள் சயமா கீர்த்தி விளங்கினான்; சோழருள் இரண்டாம் கரிகாலன் தோன்றினான்; சேரருள் செங்குட்டுவன் விளக்க முற்றான். சயமா கீர்த்தி சாவகம் முதலிய கடல் கடந்த நாடுகளை வென்றான். கரிகாலன் இமயம்வரை சென்று வெற்றி பெற்றான். சேரன் ஆரிய அரசரை வென்று பெருஞ் சிறப்போடு இமயத்தினின்றும் பத்தினிக்குக் 'கல்' கொணர்ந்தான்.





## அரசுக்கு அடிப்படை அறமே!

முடியுடை வேந்தர் நாடுகளில் குறுநில மன்னர்கள் பலர் இருந்தனர். அவர்களுள் பாரி, காரி, ஓரி, மலையமான், அதியமான் ஆகியோர் குறிப்பிடத் தகுந்தவராவர். முடியுடை வேந்தன் ஒருவன் தனக்கு இணையான வேந்தனுடன் போர் எதிருங்கால் தன் சிற்றரசருடன் வந்து போரிடல் இயல்பு. தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை வேளிர் ஐவர் துணையுடன் இருபெரு வேந்தரும் எதிர்த்தமை கொண்டு இதனை அறியலாம். அரசியல் நிலை, சமுதாய நிலை முதலியவற்றின் வரலாற்றை அறியவும் புறப்பாடல்கள் பயன்படுகின்றன. மக்களுடைய துன்பங்களைத் துடைத்து அவர்களைப் பாதுகாத்தல் மன்னனின் கடமை. குற்றத்திற்கேற்பத் தண்டித்து நீதி கூறுவதும் அவனது பொறுப்பு.

**''அறநெறி முதற்றே அரசின் கொற்றம்''** என்று புலவர்கள் மன்னரைச் சார்ந்து கூறியதற்கேற்ப மன்னர்கள் தம் கடமையாற்றினர். கொடை, மன்னனின் தனிப்பண்பாகக் கருதப்பட்டது. கைம்மாறு கருதாது பாணர்க்கும் புலவர்க்கும் மன்னன் பரிசு அளித்தான். மன்னர்கள் புலவர்க்குப் பரிசில் கொடுத்த தோடல்லாமல் நட்புப் பூண்டு வாழ்ந்த வரலாற்றைப் புறப்பாடல்கள் பல விளக்குகின்றன.

## நா நலம் மிக்க பாடல்களை நாடாளும் மன்னர்களும் இயற்றினர்

புவியாளும் வேந்தரும் புலமைச் செல்வம் பெற்றுத் திகழ்ந்த சிறப்பியல் பையும் நாம் காண்கிறோம். தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன், ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், சோழன் நலங்கிள்ளி, சேரமான் கணைக் காலிரும்பொறை முதலிய மன்னர்கள் கவித்திறம் மிக்கவர்களாய் விளங்கினர்.

வீரம் புறவாழ்வில் சிறந்து ஓங்கியது. மன்னர்கள் போர்க்களம் சென்று இறுதிவரை போரிட்டு வெற்றி பெறுவர் அல்லது இறப்பர். மன்னர்தம் இவ்வீரம் மக்களிடையே பரவியிருந்தது. தாய் தன் மகன் போரில் வெற்றி பெற்றுச் சிறக்க வேண்டும் என விரும்பினாள். ''ஈன்று புறந்தருதல்'' எனத் தொடங்கும் பொன்முடியார் பாட்டு இதற்குச் சான்று பகரும்.

பண்டைத் தமிழரின் இனப் பாகுபாடு அவரவர் செய்த தொழில்களின் தன்மையையொட்டி அமைந்திருந்தது. உழவர், தச்சர், வணிகர், வேட்டுவர், ஆயர் முதலிய இனப்பெயர்கள் காணப் படுகின்றன.



# வழிபடு தெய்வம்

தமிழ் மக்கள் வழிபட்ட தெய்வங்களை யும் பல பாடல்கள் புலப்படுத்துகின்றன. அருகர் கோயில் பல சங்க காலத்தே விளங்கின். சாவகர் (சமணரில் 'விரதம் காக்கும் இல்லறத்தார்) பூவும், புகையும் கொண்டு அருகப் பெருமானை வழிபட்டனர்.



அவர்களைச் 'சான்ற கொள்கையர்; சாயாயாக்கையர்' என மதுரைக் காஞ்சி பாராட்டுகிறது. (சான்ற கொள்கை-தந் நிலைக்கு ஏற்ற விரதம்; சாயா யாக்கை-அவ்விரதத்தின் வலிமையால் கேடில்லாத, தளராத உடல்).



புத்தர் கோயிலும் பல மதுரையில் இருந்தன. சிவன், திருமால், முருகன் முதலிய தெய்வங்களை மிகுதியாக வழிபட்டனர் தமிழர்.



திருமுருகாற்றுப்படை, தமிழ் மொழிக்கே கடவுள் வாழ்த்துப்போல் அமைந்துள்ளது. அதில், முருகன் ஆறுமுகமும் பன்னிரு கையும் கொண்டு யானைமீது வீற்றிருக்கும் காட்சி போற்றிக் கூறப்பட் டுள்ளது.



எங்கே அன்பர் நினைந்து வழிபடுகிறாரோ, அந்த இடத்திலும், வேலன் வெறியாடும் களத்திலும், காட்டிலும், சோலையிலும், எழில் மிகும் ஆற்றிடைக் குறையிலும், ஆற்றிலும், குளத்திலும், சந்தியிலும், சதுக்கத்திலும், மன்றத்திலும் வேண்டியாங்கு முருகன் வெளிப்பட்டுக் காட்சியளிப்பான்.



அந்தப் புகழ் முருகனை,

''மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ!
இழையணி சிறப்பின் பழையோள் குழவி!
வானோர் வணங்குவில் தானைத் தலைவ!
மாலை மார்ப! நூலறி புலவ!
செருவில் ஒருவ! பொருவிறல் மள்ள!
அந்தணர் வெறுக்கை! அறிந்தோர் சொன்மலை!
மங்கையர் கணவ! மைந்தர் ஏறே!''
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ!
குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ!
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே!
அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருக!

என்றெல்லாம் வாய் மணக்கும் தமிழால் போற்றிப் புகழ்கிறது திருமுருகாற்றுப் படை. (கோயில்களில் மாமுருகனை இவ்வினிய தமிழால் வழிபடலாம்).

## வாணிபம் செய்வார் இயல்பு

வாய்மையில் குன்றாது வணிகர் நடுவு நிலைமையில் நின்று, பிறருடைய பொருளைத் தம் பொருளாகப் போற்றி மிகையாகக் கொள்ளாமல், குறைவாகக் கொடுக்காமல் சிறந்த முறையில் வணிகம் செய்வர்.

''நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து.
தமவும் பிறவும் ஒப்பநாடி.
கொள்வதூஉ மிகைகொளாது
கொடுப்பதூஉங் குறைபடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும் வாழ்க்கையர்...

## இனி, பதினெண் கீழ்க்கணக்கில் காணும் சில வைர மணிகள்

சங்ககாலச் சான்றோர்களின் அனுபவ உண்மைகளையே பிற்காலப் புலவர்கள் நீதிக் கருத்துக்களாகப் போற்றினர். அவை மக்கள் வாழ்வை வளப்படுத்தும் சீரிய தொண்டினைச் செய்கின்றன. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள், திருக்குறள், நாலடியார், நான்மணிக் கடிகை, இனியவை நாற்பது, இன்னா நாற்பது, திரிகடுகம், ஆசாரக் கோவை, சிறுபஞ்சமூலம், பழமொழி, முதுமொழிக் காஞ்சி, ஏலாதி என்ற பதினொரு நூல்களும் நீதியை இயம்புவன.

நீதிகளைக் கூறுவதில் திருக்குறளும், நாலடியாரும் ஏறக்குறைய ஒரே முறையைப் பின்பற்றுகின்றன. இரண்டு அடிகளால் திருக்குறள் இயல, நாலடி கொண்டு நடக்கிறது நாலடியார். திருக்குறள் ஒரே ஆசிரியரால் இயற்றப் பெற்றது; நாலடியார் பல ஆசிரியர்கள் பாடிய பாடல்களின் தொகுப்பாகும். பழமொழிகளை அமைத்து முன்றுரையனார் பாடிய பாடல்களின் தொகுப்புப் பழமொழி என்னும் நூலாம். ஏனைய நூல்கள் தனித்தனிப் புலவர்களால் பாடப்பெற்றவை.

## உலகப் பொதுமறை

உலகப் பொதுமறை என்னும் ஒப்பற்ற சிறப்பினையுடையது, திருக்குறள். இவ்வுயரிய நூற் கருத்தைப் பிற்காலப் புலவர்கள் அனைவரும் எடுத்தாண்டுள்ளனர். எல்லாச் சமயத்தாரும் ஒப்பப் போற்றுகின்ற பெருமை இந்நூலுக்கு மட்டுமே உண்டு. மேனாட்டு அறிஞர் பலர் திருக்குறளைத் தத்தம் மொழிகளில் மொழி பெயர்த்துள்ளனர்.

அறத்துப்பால் தனி மனிதனது வாழ்வின் மேன்மையைக் குறிக்கும். பொருட்பால் சமுதாய வாழ்வைச் சுட்டிக் காட்டும். காமத்துப்பால் அகவாழ்வின் வெற்றியைச் சிறப்புற எடுத்துரைக்கும்.



தமிழ் இலக்கிய வரலாற்றில் பெரும் புரட்சியைச் செய்தவர் திருவள்ளுவர். கொலை, கள், சூது ஆகிய இவற்றை விலக்குமாறு மக்களை வற்புறுத்திய முதல் தமிழ்ப்புலவர் இவரே. பிற்காலப் புலவர்கள் இவர்தம் கொள்கைகளைப் பெரிதும் போற்றினர்.

திருக்குறளின் மேன்மையைக் கூறும் திருவள்ளுவ மாலையில் சீத்தலைச் சாத்தனார்,

''மும்மலையும் முந்நாடும் முந்நதியும் முப்பதியும்
மும்முரசும் முத்தமிழும் முக்கொடியும் - மும்மாவும்
தாமுடைய மன்னர் தடமுடிமேல் தார்அன்றோ
யாமுரைதேர் வள்ளுவர்முப் பால்''

எனப் போற்றுகிறார்.

சொல்லழகும் பொருளழகும் கொண்டு ஒளிரும் திருக்குறளை 'வாழ்க்கை விளக்க'மாகக் கொள்வது சாலப் பொருத்தமே.

செல்வம் நிலையற்றது. அது ''சகடக்கால் போல வரும்'' தன்மையது. அகவே அச்செல்வம் ''கைத்துண்டாம் போதே கரவாது அறம் செய்மின்'' என மக்களுக்கு அறிவுறுத்துகிறது, நாலடியார்.

## பழமொழி உணர்த்தும் இராமாயணம்

பண்பால் உயர்ந்த பெரியாரைத் துணையாகக் கொண்டால் யாவரும் நன்மை அடையமுடியும் என்னும் உண்மையை இராமாயணக் கதையைக் கொண்டு விளக்குகிறது, கீழ்க்காணும் பழமொழிப் பாட்டு.

''பொலந்தார் இராமன் துணையாகப் போதந்து
இலங்கைக் கிழவற்கு இளையான் - இலங்கைக்கே
போந்துஇறை ஆயதூஉம் பெற்றான்; பெரியாரைச்
சார்ந்து கெழீஇஇலார் இல்''.

பதினென் கீழ்க் கணக்கு நூல்களுள் இது, திருக்குறள் நாலடியார்க்கு அடுத்த நிலையில் சிறப்புற வைத்து எண்ணப் படுகிறது.

இந்நூலில் காணப்படும் சில பழமொழிகள்:

''தமக்கு மருத்துவர் தாம்''
''பழம்பகை நட்பாதலில்''
''தம் கன்னிற் - கண்டதூஉம் எண்ணிச் சொலல்''
''காணாரெனச் செய்யார் மாணாவினை''
''அணியெல்லாம் ஆடையின் பின்''
''பின்னின்னா பேதையார் நட்பு''

தன்னைப் புகழ்ந்து திரிவதும், வீணாகக் கோபம் கொள்வதும், பொருள் யாவற்றையுமே தாமே அடைய வேண்டும் என நினைப்பதும் ஆகிய தாழ்ந்த பண்புகள் ஒருவனது செல்வத்தைத் தொலைத்து விடும். இதனை,

''தன்னை வியந்து தருக்கலும் தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும் - முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும் இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை''

என விளக்குகிறது 'திரிகடுகம்' என்னும் நூல்.





# வாழ்க்கைக்குத் துன்பம் தருபவை எவை? எவை?

வாழ்க்கைக்குத் துன்பம் தருபவை இவை இவை எனக் கூறுகிறது 'இன்னா நாற்பது'.

'கல்வி கேள்வி ஒழுக்கம் ஆகியவற்றில் சிறந்து விளங்கும் சான்றோர் அவையில் அறிவற்ற ஒருவன் புகுதல் துன்பம் தரும். இருண்ட பொழுதில், வழியில் செல்லுதல் துன்பத்தைத் தரும். தனக்கு நேரும் துன்பங்களைப் பொறுத்துக்கொள்ளும் ஆற்றல் இல்லாதவர் மேற்கொள்ளும் தவம் துன்பம் தரும். பெற்ற தாயைக் காப்பாற்றாது விடுதல் துன்பம் தரும்.'

## துன்பம் தரவனற்றுள் மேலும் சில

''இன்னா - ஈன்றாளை ஓம்பாவிடல்''
''தீமையுடையார் அயல் இருத்தல் இன்னா''
''இன்னா - கள்ள மனத்தார் தொடர்பு''
''திருவுடையாரைச் செறல் இன்னா''
''ஒடுங்கி அரவு உறையும்இல் இன்னா''

## மழையின்றி மாநிலம் இல்லை!

இப்பெரிய உலகில் உள்ளவர்க்கு மழை இல்லாமல் நன்மை உண்டாவதில்லை. அந்த மழையும் தவம் செய்யாதவர் இடங்களில் பெய்யாது. அத்தகைய சிறப்புடைய தவமும் அரசன் இல்லாத இடத்து நிகழாது. அந்தச் செங்கோல் அரசனும் குடிமக்கள் இல்லா விடத்து இல்லாதவன் ஆவான்.

''மழையின்றி மாநிலத்தார்க் கில்லை மழையும்
தவமிலார் இல்வழி இல்லை தவமும்
அரசன் இலாவழி இல்லை அரசனும்
இல்வாழ்வார் இல்வழி இல்''.

எனக் கூறுகிறது, 'நான்மணிக் கடிகை'.

இவை போன்ற எல்லையற்ற எண்ணக் குவியல்களைச் சங்க இலக்கியங்களிலும், பதினெண்கீழ்க் கணக்கு நூல்களிலும் கண்டு மகிழலாம்; நம் வாழ்க்கையைச் செம்மையுற அமைத்துக் கொள்ளலாம்.

இவ்வாறு சங்க இலக்கியங்கள் மாசுமறுவற்ற பேரொளியாய் நின்று பெரும்புகழுடன் ஒளிர்கின்றன. சங்க காலத்து வாழ்க்கை வேறு அக்கால நூல்கள் வேறு அல்ல என்று கூறும் வகையில் பழங்கால மக்களின் வாழ்க்கையின் விளக்கமாகவே அவ் விலக்கியங்கள் அமைந்திருக்கின்றன. தமிழ் மக்கட்கும் தமிழ் மொழிக்கும் உலக அரங்கில் ஒரு பெருமையுண்டு என்று கருதினால் அதற்குக் காரணம் சங்க இலக்கியங்களே என்று துணிந்து கூறலாம். அப் பொற்காலத்துத் தோன்றிய கவிதைகளாம் வைரமணிகளை எட்டுத் தொகை, பத்துப்பாட்டு அகிய தங்கப் பேழைகளில் கண்டு இன்புறலாம்.

உலக அரங்கில் மிகச் சிறந்த பாரம்பரியத்தின் வழி வந்தவர் நாம் என்னும் பெருமித வாழ்வு வாழ வழி காட்டுவது சங்க இலக்கியம்; நம்பிக்கை தருவது சங்க இலக்கியம்! இன்று புதிதாய்ப் பிறந்தோம் என்ற எண்ணமதைத் திண்ணமுற அமைத்துக் கொண்டு புதியதோர் உலகு செய்வோம்!

## வட்ட மேஜை

# சமத்துவபுரமா? சமுத்திரபுரமா?

✉ "ஜாலம் காட்டும் ஜாதி அரசியல்"- சூடான தலையங்கம். அரசின் பார்வையில் அது பட்டும் படாமலும் போய் விடக் கூடாது. அதன் நன்மையை உணர்ந்து நடைமுறைப்படுத்தினால் 'மக்களாட்சி' என்பதற்கே ஒரு இலக்கணமாகத் திகழலாம்.

திருச்சி - 8, இ.மா. தமிழழகன்.

✉ 'லால்குடி வயலின் வாசிக்கும்போது' எனும் சச்சிதானந்தனின் கவிதை, வஞ்சப் புகழ்ச்சி அணி வகையைச் சேர்ந்ததுதான். சாருகேசியின் கட்டுரையும் அதே ரகத்தைச் சேர்ந்ததே! லால்குடியின் காம்போதியைக் கேட்கும்போது, பிரிவுத் துயரில் வெந்து கருகும் சச்சிதானந்தனுக்கு ஓர் இன்ப வேதனை! அவர் ஓர் அற்புதக் கனவில் மூழ்கி விடுகிறார்! அப்போது, கூனி நிமிர்ந்து நிற்கிறாள்; காலில்லாதவள் நடனம் ஆடுகிறாள்; ஊமை பாடுகிறாள்; கறுத்த பெருவிரல் பூக்கிறது! காம்போதியை வாசித்து முடித்து விடுகிறார், லால்குடி. அப்போது தோன்றுகிறது, சச்சிதானந்தனுக்கு; மனம் புழுங்குகிறார், இந்திய வெயிலின் (வேனிலின்) கொடுமையை நன்கு அனுபவித்த, லால்குடி ரசிகர் சச்சிதானந்தன்: "எந்த வேனிலும் கொடுமையானதல்ல, லால்குடியை விட!" நந்திக் கலம்பகப்பாடல்களை ரசித்தவர்களால், சச்சிதானந்தனையும் ரசிக்க முடியும்!

நெல்லை, இ.க. சிவசங்கரன்

### தவறு நடைபெறவில்லை!

✉ சென்னை மாநகராட்சி தொடர்பாக "வெட்டுங்கள் திறக்கப்படும்" என்ற தலைப்பின் கீழ் வெளிவந்த செய்திக்கு விளக்கம்:

1996-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் புதிதாக 69 கடைகள் கட்டப்பட்டன. கடைகள் கட்டப்பட்ட பகுதியில் ஏற்கெனவே கடை நடத்தி வந்த 116 நபர்களின் பட்டியல் உரிம ஆய்வாளர் மூலம் தயார் செய்யப்பட்டது. மாநகராட்சி தயார் செய்த பட்டியலில் முறையாகக் கட்டணம் செலுத்திய 28 நபர்களுக்கும் மற்றும் எஞ்சியுள்ள 88 நபர்களில், சீட்டுக் குலுக்கல் மூலம் 41 நபர்களுக்கும் கடைகள் ஒதுக்கப்படலாம் என வார்டுக் குழு முடிவு செய்துள்ளது. மாமன்ற ஒப்புதல் பெற்று இந்த ஒதுக்கீட்டின் படிக் கடைகள் வழங்கப்பட உள்ளன.

கடைகள் கட்டப்பட்டு, அவற்றை யாருக்கு ஒதுக்குவது, எந்த அடிப்படையில் முறையாக ஒதுக்குவது என்பதைப் பல நிலைகளில் முடிவு செய்வதில் சற்றுக் கால தாமதம் ஏற்பட்டுள்ளதே தவிர, எந்த மட்டத்திலும் கடைகள் ஒதுக்குவதில் தவறுகளோ, பாரபட்சமோ காட்டப்படவில்லை. தங்கள் இதழில் குறிப்பிட்டுள்ளது போன்று சாலைகள் அமைப்பதிலிருந்து மற்றும் எந்தத் துறைகளிலும் ஊழல்களோ, முறைகேடுகளோ நடைபெறவில்லையென்றும், சட்டப்படி ஒப்பந்தங்கள் அளித்து, முறையாகப் பணிகள் நடைபெற்று வருகின்றன என்பதையும் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

சென்னை - 3, பெ.கோலப்பன், ஆணையர், சென்னை மாநகராட்சி.

✉ தாலாட்டுக் கச்சேரிகள் படித்தேன்! குழந்தையும் தாயுமே ஓர் இனிய கச்சேரி தானே! சூப்பர் படங்கள் ஸார்!

தூத்துக்குடி -1, எஸ். ராமசுப்பிரமணியன்.

✉ 'விஷப்பரீட்சை வேண்டாம்'- தும்புருவின் விமர்சனம் கண்டபோது, 'கப்புடு'விற்கு ஒரு வாரிசைக் கண்டது இசை உலகம் என்ற மகிழ்ச்சி.

கோயமுத்தூர்-9, பி.எஸ். ராஜேஸ்வரி.

✉ நித்யஸ்ரீ, இளந்தளிர். மென்மையாக விமர்சிக்கக் கூடாதா? ஏதோ ஆர்வம், புதிய முயற்சியாகச் செய்து பார்த்திருக்கிறார். கொஞ்சம் விட்டுப் பிடிக்கலாமே?

திருநாகேஸ்வரம், ஏ. ஜெயகிருஷ்ணா.

✉ எத்தனை சமத்துவபுரங்கள் கட்டினோம் என்பதைவிட முக்கியமானது, எவ்வளவு உறுதியான வீடுகளைக் கட்டினோம் என்ற சிந்தனை. ஒழுகும் வீடுகள் சமத்துவபுரத்தை 'சமுத்திரபுரம்' ஆக்கிவிடும் அபத்து இருக்கிறது.

தஞ்சாவூர்-7, வளர்மதி ஆசைத்தம்பி.

✉ அமரர் கல்கி அவர்களின் 'கடவுளே! எங்கள் சங்கீதம்!' என்ற தலையங்கக் கட்டுரையை கல்கி கலெக்ஷனில் மறு பிரசுரம் செய்திருப்பது, 47 ஆண்டுகளுக்கு முன்பாக என் இளமைக் காலத்தை நினைவுக்குக் கொண்டு வருவதாக அமைந்திருக்கிறது. கட்டுரையில் எனது கடிதத்தை மீண்டும் கண்டு மகிழ்ச்சி அடைந்தேன். மேலும், இளமைக் காலக் கருத்துகள் எந்த அளவுக்குத் தவறானவை என்பதையும் கட்டுரை தெளிவாக உணர்த்துவதாக இருக்கிறது. ஏனெனில், சினிமா இசை குறித்து என் எண்ணத்தில் மாற்றம் நேர்ந்து வெகு காலம் ஆகிறது!

கோவை-25, ம.ந.ராமசாமி.

# அக்னிசர்மா பக்கம்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

உங்க செல்வாக்கு ஓகோன்னு உயரப் போற வாரம் இது. செய்ய எடுத்துக்கற காரியங்களும் தடையில்லாம நடக்கும். எதிரிங்க எல்லாம் வாயில போட்ட பஞ்சு மிட்டாய் மாதிரி காணாம போயிடுவாங்க. போட்டி, பந்தயங்களில் அனுகூலமான போக்கே தெரியும். வியாபாரிகளுக்குக் கூடுதல் லாபம் கிடைக்கும். சிலருக்குப் புதுப் புது பொருள்கள் வாங்கற அதிர்ஷ்டம் இருக்கு. எதிர்பாராத அதிர்ஷ்டமும் சிலருக்கு உண்டு. வெளிநாட்டு லேர்ந்தோ வெளியூர் லேர்ந்தோ வர்ற செய்தி நல்லதாகவே இருக்கும். சங்கீதத் துறையில் உள்ளவங்க, தும்புரு பயமில்லாம உற்சாகமா இருக்கலாம்!

**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

வெங்காய விலை மாதிரியே உங்களோட கிரக சஞ்சாரம் சரியா இல்லாததால எதற்கும் ஒரு தடை, ஒரு முட்டுக்கட்டை வந்துக்கிட்டேதான் இருக்கும். பிள்ளைகளால் கூட சில பிரச்னைங்க வரலாம். இயந்திரப் பணி சம்பந்தமானவங்க ரொம்பவே உஷாரா இருக்கணும். வியாபாரிங்க புது முதலீட்டைத் தவிர்க்கறதுதான் நல்லது. உத்தியோகஸ்தர்கள் ஜாக்கிரதையா இல்லேன்னா, அதிகாரிங்ககிட்ட இங்கிலீஷ்லோ, தமிழிலோ அர்ச்சனை கிடைக்கறது உறுதியாயிடும். வீண் செலவு வேண்டவே வேண்டாம்.

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

புது நண்பர்களோட உதவி உங்களுக்குக் கிடைக்கறதால உங்களோட திட்டங்கள் சுலபமா நிறைவேறுவதற்கான சான்ஸ் நிறையவே இருக்கு. அரசுப் பணியாளர்களுக்குப் புரமோஷன் உறுதி. கோரிக்கை மனு ஏதாவது கொடுத்திட்டுக் காத்திருக்கறவங்களுக்கு அது நிறைவேறும். சிலருக்குப் பயணத்தால நன்மைகள் கிடைக்கும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல், வாங்கல் சமாசாரங்கள் உங்களுக்குச் சாதகமாவே இருக்கும். வெளிநாட்டுலேர்ந்து நல்ல சேதி வரலாம்.

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

சில கிரகங்கள் அனுகூலமாவும் சிலது எதிராவும் இருக்கறதால எல்லாமே கலந்துகட்டியாத்தான் இருக்கும். எதிலும் அளவோடுதான் நன்மைகளை எதிர்பார்க்க முடியும். சட்டம், காவல், மிலிடரிகாரங்களுக்குப் பாராட்டுக் கிடைக்கற சான்ஸ் இருக்கு. எச்சரிக்கையா இருந்தாத்தான் பிசினஸில் லாபம் கிடைக்கும். தகவல் - தொடர்புத் துறையில் இருக்கறவங்களுக்கு நல்ல சூழ்நிலை உருவாகும். பணப் புழக்கம் சீராவே இருக்கும்.

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

தன்னம்பிக்கையும் தெளிவும் கிடைக்கிற வாரம் இது. பெரியவங்க ஆதரவு மட்டுமில்லை; பிள்ளைகளும் உங்களுக்குப் பெருமை கிடைக்கற மாதிரிதான் நடந்துக் குவாங்க. செலவு வரும்னாலும் அது, சுபகாரியங்களுக்கானதாத்தான் இருக்கும். கவலைப்படாதீங்க. அரசியல்வாதிகளுக்கு ஒரு திடீர் திருப்பம் ஏற்பட்டு புகழும் செல்வாக்கும் கிடைக்கற வாய்ப்பு இருக்கு. சிலர் புதிய பொருள்கள் வாங்கலாம்; சிலர் ஃப்ளாட் வாங்கத் திட்டம் போடலாம்; இன்னும் சிலர் வீட்டுல கல்யாணப் பேச்சு ஆரம்பமாகலாம்; சிலருக்கு மனைவி வழியில் ஆதாயம் கிடைக்கலாம்.

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

நல்ல பலன்களுக்கான வாய்ப்புகளே அதிகம் இருக்குன்னாலும் அதுக்கு நீங்க கடுமையா உழைக்க வேண்டியிருக்கும். அரசு சம்பந்தமான விஷயங்கள் சுலபமாவே பழமாயிடும்.



**தனுசு ராசிக்காரரான சாவி உடல் நலத்துல அக்கறை காட்டணும். அலைச்சலைக் குறைக்க வேண்டியதும் ரொம்ப முக்கியம்!**

# நடக்குமென்பார், நடக்கும்!

சினிமா, சங்கீதம் போன்ற கலைத் துறைவாசி கள் இந்த வாரம் சந்தோஷவாசிகள்தான். சிலருக்குப் பொருள் சேர்க்கை இருக்கும். சிலர் வீட்டுல விசேஷ காரியங்கள் நடப்பதற் கான ஆரம்பகட்ட வேலைகள் தொடங்கும்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

ஆரோக்கியம், அந்தஸ்து எல் லாமே திருப்தியாக இருக்கற வாரம் உங்களுக்கு. வாழ்க்கை வசதிகளும் கூடும். வெளிநாட்டுத் தொடர்பால ஆதாயம் கிடைக்கும். மத்தவங்க உங்களுக்கு உதவக் காத்துக்கிட்டிருப்பாங்க. வருமானம் பெருகும். சிலருக்கு வெளிநாட்டுப் பயணத்துக்கான சான்ஸூம் இருக்கு. வியாபாரி கள், கமிஷன் ஏஜெண்டுகள், சேல்ஸ் ரெப்ஸ் போன்றோருக்கு ஆதாயம் அதிகமாவே இருக் கும். ஆனாலும் கணவன் - மனைவி உறவுல கொஞ்சம் சலசலப்பு இருக்கத்தான் செய்யும். வீண் வாக்குவாதங்களைத் தவிர்த்தா அந்தச் சலசலப்பையும் கலகலப்பாக்கிக்கலாம். வீட்டுக் குள்ள மட்டுமில்லே, வெளியிலயும் வாயைக் குடுக்காம இருக்கறதுதான் புத்திசாலித்தனம்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

இந்த வாரம் உங்களை ஹீரோ மாதிரி பனிச்சிடச் செய்யற அளவுக்குக் கிரகங் களோட சஞ்சாரம் இருக்கு. ஸ்பெகுலேஷன், கொடுக்கல் வாங்கல், வீடு, நிலம்னு எதுவானா லும் உங்களுக்கு லாபம்தான். கடல் தாண்டி வர்ற சேதியால உங்களுக்கு உற்சாகம் கொப் பளிக்கப் போவுது. கணவனால் மனைவிக்கும் மனைவியால் கணவனுக்கும் பரஸ்பரம் நன்மை ஏற்படும் வாரம் இது. சில பெண் களுக்கு இந்த வாரம் வேலை கிடைக்கறதுக் கான சான்ஸ் ஏராளமா இருக்கு.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்தி ராடம் முதல் பாதம் வரை)*

இந்த வாரத்தைப் பொறுத்த வரைக்கும் எதிலுமே நிறைவான பலனை எதிர்பார்க்க முடியாது. வரவுக்கு மேல செலவு வந்து திணறடிச்சுடும். சிக்கனம் ரொம்ப ரொம்ப அவசியம். உத்தியோகஸ்தர் களுக்கு வளர்ச்சி இருக்காது. வெளியூர்லே யிருந்து வர்ற சேதிகளும் சந்தோஷப்படுத்தற மாதிரி இருக்காது. பிசினஸ்ல இருக்கறவங்க புதுசா எதையும் ஆரம்பிக்காம இருக்கறதுதான் நல்லது.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்கள் திட்டங்கள் நீங்கள் போட்டபடியே நடக்கும். கவர்ன் மெண்ட் சர்வீஸில் உள்ளவங்களும் எக்ஸிக்யூடிவ்களும் நல்ல வளர்ச்சி யைக் காண்கிற வாரம். அரசியல் வாதிகளுக்குச் செழிப்பான பாதை புலப்படும். பிசினஸ்காரங்களுக்கு லாபம் உறுதி. கலைத்துறையினருக் குப் புகழும் பாராட்டும் கிடைக் கும். சிலருக்கு எக்ஸ்ட்ரா வருமான மும் உண்டு! தொழிலதிபர்களுக்கு தொழில் அபிவிருத்தி இருக்கும். குடும்பத்தில் உல்லாசம், கேளிக் கைக்குப் பஞ்சமிருக்காது. ஆனா லும் பயணத்தின்போதும் புது ஆளுங்ககிட்ட பழகற போதும் எச்சரிக்கையா இருங்க.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட் டாதி 3-ம் பாதம் வரை)*

பொதுவாகப் பார்த்தால் இந்த வாரம் சிறப்பான வாரம்தான். குறிப்பா எண்ணெய் வகை, தோல் மற்றும் ரசாயன வகை தொடர் பானவற்றில் நல்ல லாபத்தை எதிர்பார்க்கலாம். செய்யும் தொழில் எதுவானாலும் அதில் சீரான வளர்ச்சி இருக்கும். பெண் களுக்கு புடைவை மாதிரியான பொருள்கள் வாங்கற சான்ஸ் இருக்கு. ஆனாலும் எல்லோருக் குமே சிறு சிறு பிரச்னைகளும் அலைச்சலும் இருப்பதைத் தவிர்க்க முடியாது.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

இந்த வாரமும் உங்களுக்கு முக்கியமான கிரகங்களோட அருட் பார்வை இல்லீங்க. அத னால, தடையும் தாமதமும் சங்க டங்களும் இருக்கவே இருக்கும். ஹெல்த் விஷயத்துல ரொம்பவே அக்கறை காட்டணும். செலவு களும் அதிகரிக்கும். சில திடீர்த் திருப்பங்கள் ஏற்பட்டு அவை உங்களைச் சவாலுக்கு இழுக்கற நிலைமையும் வரலாம். கொடுக்கல் வாங்கல், ஸ்பெகுலேஷனெல் லாம் இந்த வாரம் வேண்டாம். ●

**நா**ன்காவது முறையாக பரத்வாஜ மஹரிஷி தபஸ் பண்ணிவிடப் போகிறாரே என்று ஓடி வந்து தடுத்தானே இந்திரன், அவனிடம் பரத்வாஜர் சொன்னார் :

''நான்காவது ஆயுளென்று ஒன்று கிடைத்தால் என்ன செய்வேன் என்றா கேட்கிறாய்... ஹே இந்திரா! இது என்ன புதிதாகக் கேள்வி கேட்கிறாய்! எனக்கு வேறு காரியமில்லை. பிரும்மசர்யம்தான் பண்ணுவேன்...'' பிரும்மசர்யம் என்கிற பதத்துக்கு என்ன அர்த்தம் என்று கேட்டால் கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் இருத்தல் என்று மட்டும் அர்த்தம் இல்லை.... பிரும்மம் என்றால் வேதம். வேதத்தை அத்யயனம் செய்வதற்குத்தான் பிரும்மசர்யம் என்று பெயர். ஆகையினால் "அந்த பிரும்மசர்யத்தைத் தவிர வேறு காரியார்த்தம் எனக்கு இல்லை...'' என்றார் பரத்வாஜர்.

இந்திரன் பார்த்தான். இவருக்கு வேதம் என்றால் என்னவென்பது தெரியவில்லை. இவருக்கு வேதத்தைக் காட்டி விட வேண்டும் என்று முடிவு செய்தான்.

பூ : புவ : ஸுவ : என்கிற ஆகிருதி மந்திரங்களைக் கொண்டு மூன்று பர்வதங்களை - மலைகளை உருவாக்கினான். "இவைதான் வேதங்கள்!" என்றான்.

பரத்வாஜ மஹரிஷிக்கு ரொம்ப சந்தோஷம். ஏனென்றால் இவர் கடந்து வந்தவை மூன்று ஆயுட்காலங்கள்; இந்திரனால் காட்டப்பட்டவை மூன்று பர்வதங்கள். தமது முந்நூறு வயதிலே இந்த மூன்று மலைகளையும் கரைத்துக் குடித்து விட்டதாக நினைத்துக் கொண்டு, "இந்திரா! இது மொத்தமும் எனக்கு வந்து விட்டதா?" என்று கேட்டார்.

"இது வேதத்தினுடைய நிலை; இதைப் புரிந்து கொள்ளும். உமக்கு வந்துள்ளதைக் காட்டட்டுமா...?" என்று கேட்டான் இந்திரன்.

"உம், காட்டு..."

ஒவ்வொரு மலையிலிருந்தும் ஒரு பிடி மண்ணை எடுத்து அவர் முன்னே போட்டு விட்டுச் சொன்னான் இந்திரன் :

"நீர் முந்நூறு வருஷங்களில் அத்யயனம் பண்ணிய வேத பாகம் இவ்வளவு" என்று பிடி மண்ணைக் காட்டினான்... "இன்னும் பண்ண வேண்டிய பாகம் அவ்வளவு..." என்று மலைகளைக் காட்டினான்!

"இன்னும் எத்தனை ஆயுள் எடுத்தால் எத்தனை நூறு வயது எடுத்தால் இந்த மலைகளையெல்லாம் உம்மாலே கரைக்க முடியும்?..." என்று கேட்டான்!

கற்றது கை மண் அளவு; கல்லாதது உலகளவு என்று ஒரு பழமொழி வந்திருக்கிறதே... அது எங்கேயிருந்து வந்தது என்று நினைக்கிறீர்கள்? வேதத்திலேயிருந்துதான்!

'இப்படி மூடிய முஷ்டியினாலே ஒரு பிடி எடுத்துப் போடுகிறானே!' என்று அசந்து போனார் பரத்வாஜர். அந்த வேதத்தை யாராலாவது பூரணமாக அத்யயனம் பண்ண முடியுமா...?

"வேதங்கள் அனந்தங்கள் என்று சொல்லப்படுகிற காரணத்தால், ஹே பரத்வாஜ மஹரிஷே! இனிமேல் வேத அத்யயனம் பண்ணுவதை நிறுத்திவிட்டு தபஸ் பண்ணி அந்த பரமாத்மாவைக் கண்டு மோக்ஷத்தை அடையும்" என்றான் இந்திரன்.

அதற்கப்புறம் பரத்வாஜர் ரொம்ப நாள் தபஸ் பண்ணினார். மட்டப்பள்ளி க்ஷேத்திரத்துக்கு வந்தார். அங்கு வந்து உட்கார்ந்து கொண்டு, அந்த கிருஷ்ணா நதி தீரத்திலே தபஸ் பண்ணினார். தபஸ் பண்ணி அந்த எம்பெருமானை சாக்ஷாத்கரித்து விட்டார். நேரே லக்ஷ்மி நரசிம்மனை சேவித்து விட்டார் அவர்!

அந்த பரத்வாஜ மஹரிஷி வேதத்தை நிறுத்திவிட்டு வேதாந்தத்திலே புகுந்து, அந்த க்ஷேத்திரத்திலே புகுந்து, அந்த க்ஷேத்திரத்தில் கிருஷ்ணா நதியில் நீராடி தியானம் பண்ணியதால் நேரே தோன்றினான் நரசிம்ஹன். இரண்டு தளங்களையுடைய

ஆதேபத்ரம் என்கிற இலைகளால் அவனை அர்ச்சித்தார்.

ஆகையினாலேதான் அந்த எம்பெருமான் நரசிம்ஹன் பரத்வாஜ மஹரிஷிப்ரியன்.

வேதத்தின் நான்காவது குணமான அனந்தத்தை பரத்வாஜருக்கு உணர்த்தியவன்.

இந்த நரசிம்ஹனை 'நம்முடைய நம்பெருமாள்' என்றே அழைக்கிறார் திருமங்கையாழ்வார்.

பெரிய தெய்வத்திலும் பெரிய பெரிய தெய்வம் அவன். பெரிய பெருமாள் என்று ரங்கநாதருக்குப் பெயர். நரசிம்ஹனுக்குப் பெரிய பெரிய பெருமாள் என்றே பெயர்!

ராமனால் வணங்கப் பட்டதால் அந்த அரங்கன் பெரிய பெருமாள் ஆனான். ஏன்...?

'கூட்டு ஒருவனையும் வேண்டா கொற்றவன்' என்று வாலி ராமனை வர்ணிக்கிறான். அப்படிப் பட்ட தனி வீரன் - உயர்ந்த ஜீவ களையுடைய பரமாத்மாவான ராமன்; ஏக வீரன், அசகாய சூரன், அனபாய சாஹஸன்... அவனே தொழுத பெருமாள் பெரிய பெருமாள்.



# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

லக்ஷ்மி நரசிம்ஹன் இருக்கிறானே.. டோலையிலே (ஊஞ்சல்) அழகிய சிங்கர் ஆராதிக்கிறாரே... அந்த நரசிம்ஹன். அவன் எப்படி பெரிய பெரிய பெருமாள் ஆனான்...?

இந்த யுக தெய்வமாகிய திருவேங்கட நாயகனால் ஆராதிக்கப்பட்டான் அவன்.

அந்தத் திருவேங்கட நாயகனுக்குத் திருக் கல்யாணம் நடக்கிறது. அக்னி பகவானே வந்து தளிகை பண்ணியிருக்கிறான். ஏகமாக பிரஸாதங்கள்! அக்னியே பண்ணியிருக்கிறான் என்றால் அது எவ்வளவு சுவையாக இருக்கும்!

மாப்பிள்ளை ஸ்ரீநிவாஸன். மணவறையிலே பத்மாவதி கரம் பிடித்து உட்கார்ந்திருக்கிறான்.

சாப்பிடுவதற்கு சுகபிரும்மாதி மஹரிஷிகளெல்லாம் காத்திருக்கிறார்கள்...

இப்போது கூட அந்த ஸ்ரீநிவாஸ கல்யாணம் நடக்கிற திருமண்டபத்திலே பார்த்தோமானால் இந்தக் காட்சி சித்திரங்களாக வரையப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். அதிலே பிரும்மா, ஸ்ரீநிவாஸருடைய திருச்செவியிலே போய்க் கேட்கிற மாதிரி ஒரு சித்திரம் இருக்கிறது - எல்லோரும் பார்க்கலாம் - திருமலை யாத்திரை போகிறவர்களெல்லாம்....



## அருள்வாக்கு

தாவரங்களுக்கு உயிர் இருக்கிறது, உணர்ச்சிகள் இருக்கின்றன என்று ஜகதீஷ் சந்திரபோஸ்தான் கண்டுபிடித்தார் என்றில்லை. வனஸ்பதி, அச்வத்தம் என்கிற மாதிரியாக அதுகளையும் உயிரும் உணர்ச்சியும் கொண்டதாகப் பார்த்து மந்திரபூர்வமாக அவற்றுக்கும் நம் ப்ரத்யுபகாரமாக பூஜைகளைப் பண்ண சாஸ்திரம் இருக்கிறது. "தூர்வா ஸூக்தம்" "ம்ருத்திகா ஸூக்தம்" என்றெல்லாம் அருகம்புல், மண் முதலானவற்றிலிருக்கிற தெய்வசக்தியைக் கூட ஆராதிக்க வேத மந்திரங்கள் இருக்கின்றன. தினமும் செய்கிற "ப்ரஹ்ம யக்ஞ"த்தில் சேதன-அசேதனங்கள் அத்தனையிலும் இருக்கிற சைதன்ய சக்திக்கு நம் நன்றியறிதலாகத் தர்ப்பணம் சொல்லியிருக்கிறது.

ஒரு காக்கை இருக்கிறது. எங்கேயோ ஒரு பழத்தைச் சாப்பிட்டு விட்டு நம் தோட்டத்திலே வந்து எச்சமிடுகிறது. அந்தப் பழத்தின் கொட்டை இங்கே நம் வீட்டுத் தோட்டத்தில் விழுந்து மரமாகிறது. அந்தக் காக்கை நமக்கு ஓர் உபகாரம் பண்ணி விட்டது. நாய் காவல் காக்கிறது. குதிரையை வண்டியில் கட்டி ஸவாரி பண்ணுகிறோம். கோமாதா நமக்கு பௌதிகமாகவும், ஆத்மார்த்தமாகவும் பண்ணுகிற உபகாரம் கொஞ்சநஞ்சமில்லை. இப்படி எல்லாரிடமும் உபகாரம் பெற்று விட்டு, மநுஷ்ய ஜன்மா எடுத்துள்ள நாம் பிரதி உபகாரம் பண்ணாமல் இருந்தால் பாபம் அல்லவா? "நன்றி மறப்பது நன்றன்று", "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் - உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு" என்றெல்லாம் மஹா பெரியவர் வள்ளுவர், இன்னும் மநு, வியாஸர் எல்லாரும் சொல்கிறார்களே!

மந்த்ரவத்தாகவும், கிராம ஜனங்களின் வழக்கத்தில் வந்துள்ளதுமான அநேக சடங்குகளைப் பண்ணினாலே, அசேதனம் (inanimate) என்று நாம் நினைக்கிறவற்றின் அதிதேவதைகள் திருப்தி அடைந்துவிடுகிறார்கள். இது தவிர தாவரங்களுக்கு ஜலம்கொட்ட வேண்டும். மிருகங்களிடம் அன்பு பாராட்ட வேண்டும். அவற்றுக்குக் கொடுமை செய்யவே கூடாது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

திருவேங்கடமுடையான் திருச்செவியிலே போய் பிரும்மா என்ன கேட்கிறார்...?

"நீயோ எழுந்து வர முடியாது. ஏகப்பட்டது செய்து வைத்துக் காத்திருக்கிறது. மகான்களெல்லாம் சாப்பிடக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைக் காக்க வைத்தால் பாகவத அபசாரம் ஏற்படுமே! இதையெல்லாம் யாருக்குப் போய் நிவேதனம் பண்ணுவது...?" என்று பிரும்மா கேட்கிறார்.

அப்போது, மணவறையிலே மாப்பிள்ளையாக உட்கார்ந்திருக்கும் ஸ்ரீநிவாஸன் சொல்கிறான் :

"அஹோபிலத்திலே எழுந்தருளியிருக்கிறானே, அந்த லக்ஷ்மிநரசிம்ஹனுக்கு இது மொத்தம் நிவேதனம் பண்ணி, எல்லோருக்கும் விநியோகிக்கப்படட்டும்..."

நரசிம்ஹன் நிறைய சாப்பிடக் கூடியவன். அந்தத் திருமலையிலிருந்தபடியே அஹோபிலத்துக்கு அத்தனை உணவையும் நைவேத்யம் காட்டுகிறார் பிரும்மா.

அஹோபிலத்திலிருந்தே அந்த எம்பெருமான் கரங்களால் அத்தனையையும் எடுத்துச் சாப்பிடுகிறான். அந்தக் காட்சியை-அந்த அழகை-பிரும்மா சேவித்தான்.

அஹோபிலத்திலிருந்து அந்த எம்பெருமான் கரங்களை நீட்டினால் திருமலை எட்டுகிறது.

ஸ்ரீசைலம் ஆதிசேஷனுடைய வால்; அஹோபிலம் உதர பந்தம்; சேஷாசலம் அவனுடைய ஆயிரம் தலைகள். மேலே பாரத தேசத்தில், ஆந்திராவிலிருந்து ஆரம்பித்து தென்கோடிக்கு வந்தோமானால், அதிலே பார்த்தோமானால், ஒரு சர்ப்பம் வளைந்து படமெடுத்துக் காட்சியளித்தால் எப்படியிருக்குமோ அப்படித் தென்படுகிறது. ஆதி

சேஷன் படமெடுத்துப் படுத்திருப்பது போன்ற அழகான காட்சி!

அப்படி, அஹோபிலமானது ஆதிசேஷனுக்கு உதர பந்தமாயிருக்கிறது. திருமலை-திருமுடி; ஸ்ரீசைலம்-நுனி.

எனவே, ஸ்ரீநிவாஸனால் ஆராதிக்கப்பட்டவன் எம்பெருமான் நரசிம்ஹன்.

சக்ரவர்த்தித் திருமகனும் அந்த அஹோபிலத்துக்குச் சென்று மாலோலனை சேவித்து, சீதையை மீட்கவும் ராவணனை ஜெயிக்கவும் உண்டான பலத்தை நரசிம்ஹனிடமிருந்து பெற்றான்.

ஹரிவம்சம் என்கிற உயர்ந்த கிரந்தம் இதை நமக்குத் தெரிவிக்கிறது.

இரண்டு பெருமாள்களாலும் - ஸ்ரீநிவாஸனாலும் சக்ரவர்த்தித் திருமகனாலும் வணங்கப்பட்டதால் பெரிய பெரிய பெருமாள் என்று பெயர் நரசிம்ஹனுக்கு.

அதனால்தான் இப்போதும் அஹோபிலத்துக்கு நாம் போனோமானால் அங்கே ஒரு ஸ்தம்பத்திலே ஸ்ரீநிவாஸன் மாப்பிள்ளைக் கோலத்திலே கைகூப்பி சேவிக்கிற அழகை நாம் பார்க்கலாம்.

திருமலைக்கு வேத வெற்பு என்று பெயர். வேத ஸ்வரூபமாய், வேதமாய், விளங்குகிறான் திருவேங்கடமுடையான். வேதமே பகவானின் மூச்சுக்காற்று.

நரசிம்ஹனோ சர்வதோமுகன். எங்கும் பிரவேசித்திருப்பவன்.

எல்லாவற்றிலேயும் அவன் இருப்பதனாலே அவனில்லாமல் நமது ஆத்மா தனித்து நிற்க முடியாது. நம்மையெல்லாம் ஹ்ருதயத்திலேயே தாங்கிக் கொண்டிருப்பவன் அவன். அந்த கௌஸ்துப மணி எங்கே இருக்கிறதோ அங்கே இந்த ஆத்மாவையும் வைத்துக் கொண்டிருக்கிறான் பரமாத்மா.

ஆகையினாலே, விஷ்ணு: என்று சொன்னோமானால், சர்வதோமுக யக்ஞம் பண்ணுவதால் பத்து திக்கிலேயும் கிடைக்கக் கூடிய செல்வாக்கு நமக்குக் கிடைக்கும்.

அதனால்தான் சஹஸ்ரநாமத்தின் முதல் ஸ்லோகத்திலும் இருபத்தெட்டாவது சுலோகத்திலும் எழுபதாவது சுலோகத்திலும் விஷ்ணு என்கிற திருநாமம் வருகிறது.

(தொடரும்)

**ப**ல நூறு தலைகள் கண்ட பண்டைய மின்விசிறி சுழன்று கொண்டிருந்தது. வாயால் ஊதினால் கூட அதிகமாய்க் காற்று வரலாம். மற்றபடி காற்று வேறெப் படியும் உள்ளே நுழைந்து விடாதவண்ணம், அவ்வறை கவனமாகக் கட்டப்பட்டிருந்தது. சௌந்தருக்கு டையைத் தளர்த்தினால்' ஆயுளில் ஒருநாள் கூடுமோ என்று கூட சம்சயமிருந்தது. பக்கத்தில் விரைப்போடு விற்பனை மேலாளர் வாசுதேவ்.

இது அநீதி. நேரடியாகக் கேட்டு விட வேண்டும். எப்படி இப்படி நிகழலாம்? அதைவிட இவர்களுக்குக் கருணையோடு புத்தி புகட்ட வேண்டும், அவுன்ஸ் அவுன்ஸாய். சௌந்தர் சின்னப் பையன். தானே பேச வேண்டும். தன் மோகனப் புன்னகை, வசீகரப் பேச்சில் விழாதவர் உண்டோ? வாசுதேவ் நேரம் பார்த்தார். பதினொன்று. இங்கே அரைமணி. அப்புறம் ஆபீஸ். பதினொன்றே முக்காலுக்கு மற்றொரு அப்பாயின்மென்ட்.

எடிட்டர் அறையிலிருந்து தணிகாசலம் வெளியே வந்தார்.

"அஞ்சு நிமிஷம் வெய்ட் பண்ணுங்க சார். கூப்புடுவாரு."

சௌந்தர் புன்னகைத்தான். வாசுதேவ் இன்னும் கனிவாய். பிரச்னையே தணிகாசலத்தால்தான்.

சௌந்தர் புத்தகத்தோடு வந்தபோது, தணிகாசலம் புத்தகத்தை மேலும் கீழுமாய், உள்ளும் புறமுமாய், கிழிக்காத குறையாய்ப் பார்த்துவிட்டு, முதலில் 'ரொம்ப நல்லாயிருக்கு' என்று விட்டு, அப்புறம் சட்டம் பேசினார்.

''ரெண்டு காப்பி வேணும் சார், ரெவ்யூவுக்கு.''

"நார்மலா ஒரு புக்தான் தரது. ஹிந்துவுக்கெல்லாமே அப்படித்தான்'' என்றான் சௌந்தர்.

"ஹிந்து அப்படி இருக்கலாம் சார். நம்ம பத்திரிகையில ரெண்டுதான். ஒண்ணு ரெவியூவருக்கு. ஒண்ணு ஆபீஸ் காப்பி.''

இதை ஒரு பெரிய செய்தியாய் எடுத்துக் கொள்ள வேண்டாம் என்று 'அப்போதைக்கு, "இத இப்ப வெச்சுக்கங்க சார். இதுலயே இன்னொரு காப்பி கொண்டு வரேன்'' என்றான்.

முதலில் நப்பாசை முகத்தில் சுடர்விட, சட்டென கட்டுப்படுத்திக் கொண்டவராய், "ரெண்டாவே கொண்டு வந்துடுங்க சார். அப்புறம் இத எங்கானா மறதியா மிஸ் பண்ணிடப் போறோம்'' என்றார்.

அலுவலகம் வந்தவன், சத்தம் போடாமல் இன்னொரு பிரதியை எடுத்துக் கொண்டு போய்க் கொடுத்திருக்கலாம். ஆனால் ஜாதகத்தில் பலம் கொண்ட ராசி நாயகர்கள் சும்மா இருப்பார்களா? சௌந்தரைச் சுற்றி அடிக்க வேண்டாமா?

விற்பனை மேலாளரிடம் விஷயம் சொன்னான்.

"வொய் டு காப்பீஸ் யார்?''

மேலாண்மைத் துறை படிப்பு. புத்துணர்வு. எதிலும் சிறுமை கண்டு சீறுதல். முடிந்தால் இரண்டு மூன்று வருடங்களில் அமெரிக்காவில் சேவை செய்து சிங்கியடிக்கும் பிரயத்தனம். அது வரை இதுபோன்ற அழுக்குப் புத்தக நிறுவனங்களில் 'கிறுகல்' விட்டுப் பார்ப்பது.

''எல்லாம் அப்படித்தான் சார் கேக்கறாங்க.''

சட்டென முகத்தில் ஒரு சோர்வு மேலெழும்ப, "என்ன பைத்தியக்காரத்தனம்




ஆர். வெங்கடேஷ்

யார்! எதுக்கு ரெண்டு காப்பி? ரெவியூ வர்க்கு கொடுக்க ஒரு காப்பி போதாதா?"

'நான் என்ன சார் பண்றது? ரெண்டு காப்பி கேக்கறாங்களே. தமிழ்நாட்டுல அதுதான் பழக்கம்."

"அதுதான் பழக்கம்னு எப்படி நீங்க சொல்லலாம்? அப்ப நீங்க அதை அக்செப்ட் பண்ணிக்கிறீங்கன்னுதானே அர்த்தம்?"

"இங்க இருக்கற நெலைமையை நான் சொன்னேன் சார். அவ்வளவுதான்."

"நோ. நோ. நெலைமைன்னு சொல்லாதீங்க. யூ ஷ்"ட் டிரை டு சேஞ்ச். யூ ஷ்"ட் எஜு"கேட் தெம்."

"இதுல எஜு"கேட் பண்றதுக்கு என்ன சார் இருக்கு? அதான் பழக்கம்ங்கறாங்க."

"என்ன பழக்கம்? நாம ஒரு காப்பிதான் தருவோம். இன்பாக்ட் உலகம் புல்லா அதுதான் பழக்கம்? அதை நீங்க ஏத்துக்கணும். அதை ஏத்துக்காம, அவங்க சொல்றாங்கன்னு சொல்லக் கூடாது."

"சாரி சார். நான் இப்ப என்ன பண்ணணும்?"

"அவங்களை ஒரு காப்பி எடுத்துக்க வெக்கணும்."

"முடியுமான்னு தெரியலை சார்."

வாசுதேவ் சட்டென மௌனம் பயின்றார். சின்னப் பயல். கத்துக்குட்டி. பேசத் தெரியவில்லை.

"நாளைக்கு நான் இதை எப்படி ஹேண்டில் பணறேன்னு பார்."

மணி அடித்தபோது சௌந்தர் சுறுசுறுப்புற்றான். வாசுதேவ் டையை சரியான கோணத்திற்குக் கொண்டு வந்தார். கைக்குட்டையால் நெற்றி மேட்டையும் மூக்கு நுனி எண்ணெயையும் அழுந்தத் துடைத்துக் கொண்டார். விசிட்டிங் கார்டை உள்ளங் கையில் வைத்துக் கொண்டு எழுந்தார்.

உள்ளே நுழைய, விபூதி, சந்தன



வாசனையோடு ரூம் ஃப்ரெஷ்னரும். சின்ன மேஜை. இரண்டு போன். பாதி மூடிய பேனாக்கள். ஒன்றுக்கு நான்காய் வெட்டப் பட்ட நியூஸ் பிரிண்ட் காகிதங்கள்.

"வாங்க. என்ன விஷயம் சொல்லுங்க... நீங்க வாசுதேவா... நீங்க சௌந்தரா?"

பார்வை முகமன் சொல்ல, சௌந்தர் நெளிந்தான். வாசுதேவ் நிறுவனப் புகழ் பரப்ப,

"தெரியும். பழைய கம்பெனியாச்சே. அந்தக் காலத்துலேயே, உங்க கம்பெனி புக்கெல்லாம் நான் நெறைய படிச்சிருக் கேன். சரி, என்ன விஷயம்?"

"ரெவ்யூவுக்கு புக்கு கொடுக்கலாம்னு வந்தோம்" என்றார் வாசுதேவ்.

"குடுங்களேன். போட்ருவோம். என்னா புக்கு வெச்சிருக்கீங்க?"

"வங்காளப் பஞ்சம் பத்தி ஒரு புது தீசிஸ்...."

"ஹிஸ்டிரியா?"

"அதப் பத்தி ஒரு ஆய்வு."

"சரி குடுங்க. பார்ப்போம். நம்ம பத்திரி கையில இதெல்லாம் போடறதில்ல. எதுக் கும் ரெண்டு காப்பி குடுத்துட்டு போங்க..."

"ரெண்டு காப்பியா?"

"ஆமா, ரெண்டுதான். எல்லாரும் அப்படித்தானே வாங்கறாங்க..."

"எப்பவும் ஒரு காப்பிதான் கொடுக்கறது. டைம்ஸ்லயே ஒரு காப்பிதான்."

"அப்ப டைம்ஸ்லேயே ரெவ்யூ போட் டுக்கிட வேண்டியதுதானே?"

"இல்ல. அதுக்கு சொல்லலை. எதுக்கு ரெண்டு காப்பி..."

"ஒண்ணு ரெவ்யூவருக்கு. இன்னொண்ணு நம்ம ஆபீசுக்கு. புக்கு தொலைஞ்சு போச் சுன்னு வெச்சுக்குங்க. என்னா செய்ய முடி யும்? நம்ம லைப்ரரிலயும் இருந்தா மாதிரி ஆச்சு."

"நீங்க லைப்ரரிக்கு வேணும்னா, பணம் கொடுத்து வாங்கிக்கலாமே? எதுக்கு ஓசி காப்பியில லைப்ரரி டெவலப் பண்ண ணும்!"

சௌந்தருக்குத் திக்கென்றது. எடிட்டர் முகம் மாறுவது துல்லியமாய்த் தெரிந்தது. கன்னங்கள் கெட்டித்தன. நெற்றி மத்தியில் சுருக்கங்கள்.

"சரி... புஸ்தகத்த குடுத்துட்டுப் போங்க, பார்ப்போம்."

பேசப் பிடிக்காதவராய், எடிட்டர் சட் டெனப் பின்னால் சாய்ந்து கொண்டு, பக் கத்து அலமாரியில் என்னவோ தேடினார். சௌந்தர் அவசரமாய் புத்தகத்தை எடுத்து வைக்க, வாசுதேவ் கொடுத்தார்.

"நார்மலா ரெவ்யூ வர எத்தனை வார மாகும் சார்?"

"சொல்ல முடியாதுங்க. மொதல்ல புத்த கம் நல்லா இருக்கணும். நல்லா இருந் தாத்தான் எழுதுவாங்க. அப்புறம் எழுதி, வாங்கி, போட்டு... ஆவும், ஒரு ரெண்டு மூணு மாசம்..."

வெளியே வந்து, வண்டி எடுத்த போது, "ஸீ, ஹவ் ஐ கன்வின்ஸ்ட் ஹிம். யூ ஷுட் லர்ன்..." என்றார் வாசு தேவ். பெருமிதமாய் சிகரெட் புகையை விண்ணில் ஏவிக் கொண்டிருந்தார்.



"விமர்சனம் வருமா சார்?" என்றான் சௌந்தர்.

"கண்டிப்பா. ஹீ இஸ் பேசிக்கலி எ நைஸ் பர்சன். சொன்ன வுடனே புரிஞ்சுக்கிட் டாரு. இந்த மாதிரி ஆளுங்கிட்டேயெல் லாம் கொஞ்சம் டைம் ஸ்பெண்ட் பண்ணி புரிய வெக்கணும். அவ்வளவுதான்."

அவ்வளவுதான். வாரா வாரம் இதழ் வெளியாகிக் கொண்டே இருந்ததே தவிர, விமர்சனம் வந்தபாடில்லை. சௌந்தர் மறக்காமல் இதழ்களை வாங்கிக் கொண்டு வந்தான். சாஸ்திரத்துக்கு இரண்டு வரியா வது வரும் என்று எதிர்பார்த்தான். என்ன தான் வாசுதேவ் முறைத்துக் கொண்டாலும், இவ்வளவு சிறப்பாகப் புறக்கணிப்பார்கள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

அதற்குப் பின் வந்த இரண்டு புத்தகங் களையும் கூட தணிகாசலத்திடம் ஒரு பிரதி கொடுத்து விட்டு வந்தான். போனபோ தெல்லாம் ஒன்று தணிகாசலம் இருக்கையில் இருக்க மாட்டார். இருந்தாலும், பத்திரிகை யாளர்களுக்கே உரித்தான 'பார்ப்போம்', 'செஞ்சுடுவோம்', 'அதுக்கென்ன போட்டாப் போச்சு'. 'அடுத்த இஷ்யூல சேர்த்துடறேன்' போன்ற வெண்ணெய் வார்த்தைகளையே எதிர்கொண்டான். இதெல்லாம் 'போட மாட்டோம்' என்பதன் இடக்கரடக்கல் என்பது புரிய ரொம்ப நேரம் பிடிக்க

வில்லை.

இது முடிந்து நான்கு மாதங்கழித்து, நிறுவனத்தின் டைரக்டர் ஒருவர் சென்னை விஜயம் மேற்கொண்டார். வாசுதேவ் ஆங்கிலத்தாலும், கனிவாலும் கொட்டிக் கொட்டி பணிவிடை செய்ய, மனுஷன் மசிந்தாற்போல் தெரியவில்லை. ஒவ் வொன்றிலும் ஒரு துளி குறைகண்டார். சிரிப்பதில்லை என்ற பிரதிக்ஞை வேறு. வாசுதேவ் திண்டாடிப் போனார்.

இரண்டாம் நாள் இன்னொரு திட்டாட் டமும் கூடிக் குலவிக் கொண்டது.

டைரக்டரின் நண்பரென்று ஒரு லோக் கல் பேராசிரியர் அலுவலகம் வர, டைரக்ட ருக்கு நண்பரைக் கண்ட குதூகலம் உச்சிக் கேறியது. உடனே, தம் நிறுவனப் புகழை அவரிடம் விளம்ப, பேராசிரியர் மையமாய் ஒரு புன்னகையோடு வளைய வந்தார்.

ஷோருமைப் பார்க்கும் போதுதான், 'வங் காளப் பஞ்சம்' கண்ணில் பட்டது.

"நம்ம பந்தோபாத்யாயா எழுதினது தானே இது" பேராசிரியர் துள்ள,

"ஆமா. ஆமா... சூப்பர்ப் புக்."

"நான் இத மேனுஸ்கிரிப்ட்லேயே படிச்சேனே?"

"ஓ..."

> ● ஒரு மாத காலப் படப்பிடிப்பை முடித் துக்கொண்டு திரும்பியிருக்கிறார் ரஜினி. 'படையப்பா'வில் ஏராள நட்சத்திரக் கூட்டம். அவ்வப்போது ஒப்பனாகவே ரஜினியை விமர்சிக்கும் மன்சூர் அலிகானும் படத்தில் உண்டு! ரஜினியை ஒரு தலையாகக் காதலிக் கும் கதாபாத்திரத்தில் ரம்யாகிருஷ்ணன். ரஜினியைக் கைப்பிடித்தே தீருவது என்று வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்து, பதி னெட்டு நாள் விரதமிருக்கிற மாதிரியான காட்சிகளில் நடிக்கும்போது ரம்யா கிருஷ் ணன் நிஜமாகவே விரதமிருந்தாராம்!

"எக்சலண்ட் புக். ரொம்பப் புதுசான பார்வை. ஆமா, இது எப்ப வந்துது? நான் பாக்கவேயில்லையே."

"வந்து, ஆறு மாசத்துக்கு மேல இருக் குமே. என்ன வாசுதேவ், இத ரெவ்யூவுக் கெல்லாம் குடுக்கல?"

புதுத் தெம்புடன் டைரக்டர் திரும்ப, வாசுதேவ் அபார அபிநயங்களுடன்,

"ஓ எஸ். எல்லா பத்திரிகையிலேயும் கொடுத்திருக்கோம். இத்தனை நேரம் விமர் சனங்கள் வந்திருக்கும். சௌந்தர் எங்க?"

நிமிடங்களில் சௌந்தர் பிரசன்னமாக,

"தமிழ்ப் பத்திரிகைக்கெல்லாம் கூடக் கொடுத்தோமே. ரெவ்யூ வந்துடிச்சி?" என் றார் வாசுதேவ்.

"ஹிண்டுல வந்துடுச்சி."

"தமிழ்ல எதுல குடுத்தீங்க?" என்றார் பேராசிரியர்.

பெயர் சொன்னான் சௌந்தர்.

"அதுல வந்திருக்கா?" என்றார் பேராசிரி யர்.

மௌனம். சௌந்தருக்கு வார்த்தை களில்லை. வாசுதேவ் முறைப்பது சுட்டது.

"என்ன சௌந்தர்? அதுல வரலை? நாம கூடப் போய் பார்த்தோமே?"

"பாத்தோம் சார். அவங்க ரெண்டு காப்பி வேணும்னு கேட்டாங்க..."

"அததான் நாம தீர்த்துட்டோமே..."

"என்ன ரெண்டு காப்பி?" என்றார் டைரக்டர்.

"சார், இங்க எல்லாம் ரெவியூ பண்ண ரெண்டு காப்பி குடுக்கணும்னு கேக்கறாங்க" என்றார் வாசுதேவ்.

"குடுக்க வேண்டியதுதானே? நமக்கு ரெவியூதான் முக்கியம். பணம் குடுக்காத பப்ளிசிட்டியாச்சே அது. அத எப்படி மிஸ் பண்ணலாம்?"

"யெஸ் சார். ஐ அண்டர்ஸ்டான்ட். சௌந்தர், நீங்க ரெண்டு காப்பி குடுக்கல? நான் குடுக்கச் சொன்னேனே."

வாசுதேவ் சட்டென சௌந்தரை அதி காரமாய்ப் பார்க்க, சௌந்தர் அதிர்ந்தான்.

"சார், நீங்க..."

"இல்ல சௌந்தர். இதெல்லாம் நீங்க என்கிட்ட பர்மிஷன் வாங்க வேண்டிய தில்ல. ரெவியூ வரவழைக்க வேண்டியது உங்க டியூட்டி. யூ ஷுட் ஹாவ் டேக்கன் த டெசிஷன்."

இப்போது சௌந்தர் பத்திரிகை அலுவலகம் பக்கம் போவதில்லை. விமர் சனங்களை லாகவமாய், சாமர்த்தியமாய் வரவழைக்கத் தெரியவில்லை என்று காரணம் காட்டி, அவனை குடோனில் புத்தகம் அடுக்க அனுப்பி விட்டார்கள். எம்.பி.ஏ. படித்த புது பப்ளிசிட்டி தேன் மொழியாள் பொறுப்பேற்க, பழக்கங்களை மாற்றக் கூடாது என்று இருவரும் இப்போது இரண்டு பிரதிகளை, ரெவ்யூவுக்குத் தருகிறார்கள். ●

• புறாக்கள் மயம்தான்...

# சுண்டி இழுக்கும் கிரிஸ்டல் மாளிகைகள்!

வெனிஸிலிருந்து ரோமுக்கு எல்லைக் கோட்டை ஒட்டிய பயணம். பயணித்துக் கொண்டிருக்கையில் மறுபடியும் வெனிஸின் அழகுகள் மனத்தில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டேயிருந்தன.

ஸ்விட்ஜர்லாந்தில் நிமிர்ந்து பார்க்க வைத்த அழகுகள் என்றால், வெனிஸில், குனிந்து ரசிக்க வைக்கும் குளிர்ச்சிகள்! ஆல்ப்ஸின் வெள்ளி உருகி வழிந்து, நீலமாய் ஒளிவிடும் அதிசயம்! பண்டைக் காலத்தில் (இன்றும்தான்) வாணிபம் தழைத்த வளப்பமான இடம்; இந்திய வணிகர்கள் முத்தையும் பவழத்தையும் ஏலக்காயையும் மிளகையும் ஏராளமாகக் கொட்டிக் குவித்து, செழித்த நிலம்!

வட இத்தாலிப் பகுதியில்தான் வெனிஸ் இருக்கிறது. 'மெயின்லாண்ட் ஸிடி', 'ஐலண்ட்ஸிடி' எனப் பாகுபடுத்தப்பட்டிருக்கிறது. கிட்டத்தட்ட நூறு சின்னத் தீவுகளை, கால்வாய்களும் விசித்திரமான பாலங்களும் இணைக்கின்றன. மொத்தம் 3.6 லட்ச ஜனத்தொகையில், 75,000 மக்கள் நீர்சூழ்ந்த தீவுத் திடலில்தான் வசிக்கிறார்கள்.

நுழையும் போதே, 1,350 அடி ஆழமான ஏரி எதிர்ப்பட்டு, வர இருக்கும் நீர் நிலைகளுக்கு ட்ரெயிலர் காட்டுகிறது. அழகை காலார நடந்தும், நீர் வழிகளில் பயணித்தும்

• வெனிஸ் காட்சி: இந்த நீரின் நிறத்தை அனுபவித்துத்தான் உணர வேண்டும்



உணரலாம்.

வெனிஸுக்கு நேரில் சென்றாலொழிய, வானத்தின் வண்ணமும், நீரின் நிறமும் இப்படிப் பச்சை கலந்த அடர் நீலத்தில் மின்னும் என்பதை நம்பவே முடியாது!

மறுமலர்ச்சிக் காலத்து சர்ச்சுகளிலிருந்து, அந்தக்கால அரண்மனைகள் வரை, கம்பீர அழகுகளின் சுற்றுச் சூழலில், படகுப் பயணம், ஒரு ''dream vacation''க்குத் தேவையான எல்லா 'செட்டிங்'குகளையும் அள்ளித் தெளித்திருந்தது!

கரையைத் தொட்டதும், இத்தாலியின் இதமான வெது வெதுப்பும் மக்களின் Sun-tanned முகங்களும், இந்தியாவிலேயே மறந்து விட்டு வந்த சூரியனை, இங்கே கொஞ்சம் நினைவுபடுத்திக் கொள்ளலாம் என்று கதகதக்க வைத்தது.

''ஜாக்கிரதை! இங்கே 'ஜிப்ஸிகள்' அதிகம்; கலர் கலரான உடைகளில், அழகிய மணி மாலைகளுடன் நடமாடுவார்கள்; தப்பித் தவறிக் கூட பர்ஸை அவர்கள் முன் திறந்து விடாதீர்கள்... கபளீகரித்து விடுவார்கள்'' என மரியா எச்சரித்தார்.

('ஐயையோ... கலர் கலரான ட்ரெஸ்; கழுத்துல மணி மாலைகள்... உன்னைப் பார்த்தாலே யாராவது ஜிப்ஸின்னு, சந்தேகப்படும்படியாயிருக்கே...!'

''நல்லதாப் போச்சு... நம்மகிட்ட எந்த 'ஜிப்ஸி'யும் அண்டமாட்டாள்!'')

''வெனிஸ் ஒரு மாய உலகம்; இங்கே புறாக்கள் நடக்கும்; சிங்கம் பறக்கும்!'' என்ற பீடிகையுடன் துவங்கினார் மரியா. 'பெல் டவரை' நோக்கி நடக்கையில் தரையே தெரியாமல் ஒரேயடியாகப் புறாக்களின் ஆக்ரமிப்பு! 'அட நம்ம மும்பையின் கபூதர் கானா' என நாங்கள் அலறினோம். ஆனால் இங்கே புறாக்களின் எண்ணிக்கை அதிகம்; அவற்றுக்கு தைரியமும் அதிகம் (வெளிநாட்டுப் புறாவாயிற்றே!).

கறுகறுப்பாகப் பொறிகடலை விற்றுக் கொண்டிருப்பவர்களிடம் ஒரு பாக்கெட் வாங்கி, அதைப் பிரிப்பதற்குள் (புறாக்களுக்காகத்தான்) அவை அப்படியே 'அபேஸ்' பண்ணிவிடுகின்றன. நம் தோளில், கையில், தலையில், கோட்பாக்கெட்டில் என்று அனாயாசமாக அமர்ந்து, இந்தப் புறாக்கள் 'காக்காய்' பிடிக்கும் அழகு இருக்கிறதே...

சுற்றிலுமிருந்த கட்டடங்கள் சிலவற்றில் சிங்கத்துக்கு இறக்கை முளைத்திருப்பது போல் செதுக்கியிருந்தது. அட! ஆமாம், சிங்கம் பறக்கிறதே என்று அதிசயிக்கையில், ''தப்பித்தவறிக் கூட வாயைத் திறக்காதீர்கள். அந்தச் சமயம் பார்த்து புறா எச்சமிட்டு விடும்! ஆனால் இவ்வகையில் புறாவின் 'ஆசி'யைப் பெற்றவர்கள் அதிர்ஷ்டசாலிகள்!'' என மரியா மறுபடியும் வார்னிங் கொடுத்துவிட்டு, ''உங்களுக்கு ஒரு மணி நேரம் ஷாப்பிங் ப்ரேக். மறுபடி இங்கே சந்திப்போம்!'' என விடை பெற்றார். 'வாயையும் திறக்கக் கூடாது, பர்ஸையும் திறக்கக் கூடாது என்கிறார்! எப்படிப் பேரம் பண்ணுவதாம்?' என்று யோசித்தவாறே, கடைகளை ஒரு ரவுண்டடித்தோம்.

நிறைய நீக்ரோக்கள் (லெதர்) 'ஹாண்ட் பாக்'குகள் விற்றார்கள். மத்தளம் போன்றிருந்த ஒன்று ரொம்பவும் கவர்ந்தது. விலை 50,000 லீராக்கள். அதாவது ஆயிரம் ரூபாய்! இந்த ஊர் நாணயம் நம் ரூபாயைவிடக் குறைந்த மதிப்பு! அவர்கள் ஆயிரக்கணக்கில் விலை சொல்லும்போது நாம் நூற்றுக் கணக்கில் மாற்றி சந்தோஷிக்கலாம். நாங்கள் பேசாமல் நடையைக் கட்ட, அவன் விடாமல் பின் தொடர்ந்தான்.



• வீதிகளில் காலாற நடந்து....

''எனக்கு இந்தியர்களை ரொம்பப் பிடிக்கும்; உங்களுக்கு டிஸ்கவுண்ட் தருகிறேன்'' என்று கால்குலேட்டரில் எதை எதையோ தட்டி, 40,000 லீராக்கள்'' என்றான்.

இங்கே யாரைப் பார்த்தாலும் கையிலே ஒரு கால்குலேட்டர்! நாங்கள் மேலே நடக்க, பின்னாலேயே வந்து, 'ஆவாரா ஹூம்' பாடி

## எத்தனை மெடல் கிடைக்கும்?

**பா**ங்காக்கில் கோலாகலமாக நடக்கிற ஆசிய விளையாட்டுகளில் நம் நாட்டு விளையாட்டு அணியினர் எவ்வளவு பதக்கம் வாங்கி வருவார்கள்? விளையாட்டு நிபுணர்கள், பத்திரிகையாளர்கள் கணிப்பு இது:

**பாட்மின்டன் :** மலேசியா, இந்தோனேஷியா, தென் கொரியா, சீனா அணிகள் ஸ்டிராங். இந்தியாவுக்கு வெற்றி வாய்ப்பு இல்லை.

**பில்லியர்ட்ஸ் :** தாய்லாந்து அணி பலமானதுதான். ஆனாலும் சேத் சேத்தி உபயத்தில் இரண்டு தங்கம் நிச்சயம்.

**ஸ்னூக்கர் :** தங்கத்துக்கு வாய்ப்பு இல்லை. வெள்ளி + வெண்கலம் கிடைக்கும்.

**கால்ஃப் :** ஆண்/பெண் இரு அணிகளிலுமே வெள்ளியோ வெண்கலமோ சாத்தியம்.

**ஹாக்கி :** உலகக் கோப்பையில் அடிவாங்கின பின்னர் தங்கம் கனவுதான். வெண்கலம் கிடைக்கலாம். அதிர்ஷ்டமிருந்தால் பெண்கள் அணியும் வெண்கலம் பெறும் சான்ஸ் உண்டு.

**ஜுடோ :** வெண்கலம் நிச்சயம்.

**கபடி :** தங்கக் கம்பிதான் நம் அணி.

**துப்பாக்கிச் சுடுதல் :** ஜஸ்பால் ராணா இருக்கிறார். தங்கமகன் அவர்தான்.

**டேபிள் டென்னிஸ் :** தங்கம் தப்பினால் வெள்ளி.

**டென்னிஸ் :** லியாண்டர் பயசுக்கு அடிபட்டு, போட்டியில் கலந்து கொள்ள முடியாத சூழ்நிலை. மகேஷ் பூபதிக்குச் சுமை அதிகம். ஆனாலும் தங்கம் எதிர்பார்க்கலாம். பெண்கள் டென்னிஸ்: ஸாரி.

**பளு தூக்குதல் :** பாண்டியன், மெடலைத் தூக்கிக் கொண்டு நாடு திரும்பக் கூடும். பெண்களில் குஞ்சராணி, மல்லேஸ்வரி டீம் வெள்ளி அல்லது வெண்கலம் கொண்டு வருவார்கள்.

— **கௌதம்**



னான். இன்னும் ராஜ்கபூர் காலத்திலேயே இருக்கிறானே என்ற எரிச்சலில் அவனைக் கைவிட்டோம்.

படகோட்டிகள் படம் போட்ட டீ ஷர்ட்டுகள், கண்ணாடி பொம்மைகள், மர ஓவியங்கள் கடைகளில் குவிந்திருந்தன. லேசான டீ ஷர்ட், ஷார்ட்ஸ்களில் உலவிய மக்கள்; 'ஸோலோ'வாக வயலினிசைத்துக் கொண்டிருக்கும் தாடிக்கார இளைஞன்; அவனைச் சுற்றி நாற்காலிகளைப் போட்டுக் கொண்டு 'பிஸா'வைச் சுவைத்துக் கொண்டிருந்த கூட்டத்தைக் கண்டதும் பசி நேரம் என்பது நினைவு வர, மரியா 'டாணென்று' ஆஜராகி விட்டார்.

கணக்கெடுக்கையில் ஒரு தலை குறைந்தது. 'கிம்' (ஜப்பானியக் கிழவி) முடையதுதான்; பாஷை தெரியாதவராயிற்றே என்று ஆளுக்கொரு திசையில் தேடிக் கவலைப்பட்டோம். கடைசியில் மரியா தமக்குத் தெரிந்தவர்களிடமெல்லாம் – புறாக்களைத் தவிர – சொல்லி வைத்து விட்டு, எங்களுடன் ஒரு உணவு விடுதிக்குள் நுழைந்தார்.

**'அ**ல்பார்க்கோ' எனப்படும் சின்னச் சின்ன ஓட்டல்கள். நடத்துபவர்கள் தனி ரகம்! அந்தக் காலத்து ராஜ பரம்பரையைச் சேர்ந்த பெண்மணிகளிலிருந்து இந்தக் காலத்து பேட்டை ரவுடிகள் வரை! முதல் வகையில், ஃபர்னிச்சர், உடை, உணவு எல்லாம் இன்னும் ராஜா காலத்திலேயே இருக்க, இரண்டாவது வகை, மூச்சுவிடக் காற்றுக்குக் கூடக் காசு கேட்கும் சுரண்டல் ரகம்! நாங்கள் இரண்டிற்கும் இடைப்பட்ட ஒரு ரகத்தில் அமர்ந்திருந்தோம். இத்தாலிய மார்பிளில் இழைத்திருந்தார்கள்; ஒரே கூட்டம்!

'மெனு'வில் இருந்த நான்கு வகை காம்பினேஷன்களில் மூன்றாவது 'வெஜ்' போல் தோன்றியதால் தேர்ந்தெடுத்தோம். ஸ்பெகடியும் லஸான்யாவும் வந்தன. 'ஸீப்' என்ற பெயரிலிருந்த ஒரு திரவம் தவிர மற்றவை தொண்டைக்குள் இறங்க மறுத்தன!

பக்கத்தில், வேறொரு காஸ்மாஸ் டூரில் வந்திருந்த நான்கு பாட்டிகள் (WWF ரகம்) ராட்சத சிரிப்புடன் 'இதைக் கொண்டுவா அதைக் கொண்டுவா' என்று அடித்த லூட்டி இருக்கிறதே...

இந்த வயதில் வாழ்க்கையை இப்படி அனுபவிக்கக் கொடுத்துத் தான் வைத்திருக்க வேண்டும்! 'ஏன் எதுவுமே சாப்பிடவில்லை' என்று எனக்காகவும் தோழி லலிதாவுக்காகவும் ஏகமாகக் கரிசனப்பட்டு, 'ஐஸ்க்ரீமாவது சாப்பிடுங்கள்' என்று உபசரித்தனர்.

நாங்களும் நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டு காத்திருந்தால்... அடக் கஷ்டமே, லெமன் ஐஸ்க்ரீமாம்! புளித்து வழிந்தது. இதைவிட 'விம்கா'வை ஐஸ் கட்டிகளாக்கிக் கொடுத்திருக்கலாம்.



● முதலில் ஹீரோயின் பிரச்னை. பிறகு படைப்பாளி – தொழிலாளி பிரச்னை. எல்லாம் முடிந்து ஷூட்டிங் தொடங்கியபோது மலையாக வந்த நெஞ்சுவலி. அமெரிக்காவிற்கு ட்ரீட்மென்டிற்குப் போய் விட்டுத் திரும்பி வந்த கையோடு அவுட்டோர் கிளம்பிப் போயிருக்கிறார் பாரதிராஜா. சொந்த ஊரான தேனியில் 'தாஜ்மஹால்' படப்பிடிப்பை நடத்திக் கொண்டிருக்கிறார். அங்கே மகனுக்கு ஒரு சிறு விபத்து; தனக்கொரு கார் விபத்து. படம் ஆரம்பித்த வேளை பற்றி ஆளாளுக்கு அபிப்பிராயம் சொல்லிக் கொண்டிருக்கிறார்களாம் இப்போது! என்ன ஆனாலும் படத்தைக் கைவிடுவதில்லை என்று பா.ராஜா. உறுதியுடன் இருப்பதாகத் தெரிகிறது. தொகுப்பு : மஹேந்த்

**உ**ணவுக்குப்பின், சந்து பொந்துகளில் நுழைந்து, வெனிஸின் பிரபலமான ''glass blowing factry'' ஐ அடைந்தோம். வெனிஸ் என்பதும் நினைவுக்கு வருவது 'முரானோ க்ளாஸ்வேர்'தானே? "சாதாரணக் கண்ணாடியை சூடாக்கி, எப்படி இஷ்டப்படி வடிவமைக்கிறார்கள் என்பதை அங்கே பார்த்து அதிசயிக்கலாம்!" என்றவாறே மரியா எங்களை உள்ளே அழைத்துச் சென்றார்.

அங்கே ஜப்பானிய மூதாட்டி 'கிம்'மைக் கண்டு அதிசயித்தே விட்டோம்! சாப்பாடு வேண்டாமென்பதால் நேரே இங்கேயே வந்து விட்டாராம்!

கண்ணாடிப் பூச்சாடிகள் செய்வது எப்படி என்பதை பத்தே நிமிடத்தில் செய்து காட்டி அசத்தினார்கள். உள்ளே அழைத்துச் சென்று, விற்பனைக்குரிய பொருள்கள் சிலவற்றை 'ஸ்பெஷல் டிஸ்கவுண்ட்' அளித்து, ஆசை காட்டினார்கள்.

க்ரிஸ்டல் மணி மாலைகள் – பிங்க், ப்ரவுன், வெள்ளையில் – பளபளத்து 'வாங்கிக் கொள்ளுங்களேன்' என கெஞ்சின. "இவை ஒரிஜினல்; இந்தத் தள்ளுபடி விலையில் (ரூ. 1500) எங்குமே கிடைக்காது" என கடைக்காரர் சத்தியம் செய்து, எங்களை எல்லாம் கிரிஸ்டல் மாலைகளைப் போட்டு அழகு பார்க்கத் தூண்டினார்.

சிவப்பு, நீலம், பச்சை, மஞ்சள், வயலெட் வண்ணங்களில் விதவிதமான கண்ணாடிக் குவளைகள் – ஒயின் க்ளாஸிலிருந்து வாட்டர் க்ளாஸ் வரை, அழகிய வேலைப்பாடுகளுடன் 'சிக்'கென்றிருந்தன. பூச்சாடிகள் நளினமாய்ச் சிரித்தன. விலங்கினங்களில் மினியேச்சர் மான், ஒட்டக, சிங்கக் குடும்பங்களிலிருந்து, பூதாகார முயல், பூனை, குதிரை ரகங்கள் வரை, கானகமே இருந்தது. குறைந்த பட்ச விலையே 500 ரூபாய். நடைபாதைக் கடைகளைக் காட்டிலும் இங்கிருந்தவை எடை குறைவாக மென்மையும் கலை நயமுடையவையாயுமிருந்தன.

''கண்ணாடி எல்லாம் உடைந்து தொலைக்கும்" என இவர் தமிழில் தடுத்ததை கடைக்காரன் எப்படித்தான் புரிந்து கொண்டானோ? (உலகத்துக் கணவன்மார்கள் எல்லோருமே ஒரே மாதிரியான ஷாப்பிங் எதிரிகளோ?) "நீங்கள் இங்கேயிருந்து தூக்கிப் போட்டுப் பிடித்து விளையாடிக் கொண்டே இந்தியா சென்றாலும், உடையாதபடி 'பாக்' செய்கிறேன்" என்று சாமர்த்தியமாகப் பேசி இளம் பச்சையில் வெள்ளை மலர்கள் வரைந்து, பொன்னிற விளிம்புகளுடனிருந்த, அழகிய பூக்குவளையை வாங்க வைத்து விட்டார். (வெனிஸ் போய்விட்டு வெறுங்கையாகத் திரும்புவார்களோ?)

வழி நெடுகிலும் பவளம், மரகதம், முத்து, நீலம் போன்றவற்றில் செட்டு செட்டாய் நகைகள். இங்கே பவழத்தின் செம்மை வித்தியாசமாகவும், மரகதம் இதமான பச்சையாகவும், நீலம் ஆழமான இங்க் ப்ளூவாகவும் இருந்தது. நீலக் கண்களுடன் வியாபாரம் செய்யும் அழகே அலாதி! வாட்சுகளில் கூட முரானோ ரகங்களுக்குக் கொம்பு முளைத்திருந்தது. கழுத்தணிகள் அதிரடிக் கவர்ச்சியுடனிருந்தன; விலை எல்லாம் லட்சக்கணக்கான வீராக்கள்!

"**இ**துதான் துறைமுகத் தொழில் நகரான ரொவீனா!" என்று ஆரம்பித்த மரியா அங்குள்ள நினைவுச் சின்னம் ஒன்றைப் பற்றி விளக்க ஆரம்பித்தார். அப்போதுதான் வெனிஸின் நினைவுகளை உதறிவிட்டு ரோம் பயணத்தில் எதிர்ப்பட்ட முதல் நகரான ரொவீனாவைப் பார்க்க ஆரம்பித்தோம்!

(தொடரும்)

# பூவேலி



கதாநாயகனுக்கு ஒரு காதலி; கதாநாயகிக்கு வேறொரு காதலன். அழகான முடிச்சுடன் கவிதை போல ஆரம்பிக்கிறது படம். இந்தக் காதலனையும் அந்தக் காதலியையும் இணைக்க வேண்டிய கதைக்கு உதவியாக ஒரு விபத்து, ஒரு புறக்கணிப்பு, ஒரு சின்ன டிராமா.

காதல் படமல்ல; காதலைப் பற்றிய படங்களின் மிகச் சின்ன வரிசையில் முக்கியமான இடம் இந்தப் படத்துக்கு வந்திருக்க வேண்டும். திருமணத்துக்குப் பின்பு (மனைவி மேல்) வருகிற காதல்தான் நிஜமானது என்கிற ஒரு வரி விஷயம் தான். ஆனால், தமது வழக்கமான மசாலாக் கலவையிலிருந்து முற்றிலும் வெளியேற இயக்குநர் செல்வா சற்றே தயங்கியிருப்பதன் காரணமாக, கதையின் கவித்துவம் ஆங்காங்கே களவாடப்பட்டிருக்கிறது.

தேவையற்ற இரு டப்பாங்குத்துகள், அநாவசியமாக ஒரு ஆனந்த்ராஜ் வில்லத்தனம், சம்பந்தமில்லாத சண்டைக் காட்சிகள்.

இவற்றை ஒதுக்கி விட்டால், படத்தில் ரசனைக்குகந்த பல விஷயங்கள் அகப்படுகின்றன. காட்சிகளைக் கழுத்தைப் பிடித்துத் திரையில் நுழைக்காமல் வெகு இயல்பாக அமைத்திருக்கிற விதம், பரம சுகம்.

கௌசல்யாவின் கால் கொலுசு ஒன்று சாலையில் விழுந்து விடுகிறது. அவருக்கே தெரியாத அவ்விஷயத்தை, 'நடக்கும்போது ஓசை குறைகிறது' என்று அப்பாஸ் கண்டு பிடித்து, சாலையில் அதைக் கண்டெடுத்தவனைத் தேடி ஓடுவதும் விபத்தாவதுமாக, 'கனம்' சேர்க்கும் தொடக்கம்.

ஆழமான காதல்; சோகமான பின்னணி என்பதை நிறுவ இந்த ஒரு காட்சியே இயக்குநருக்குப் போதுமானதாக இருக்கிறது.

இதைத் தூக்கிச் சாப்பிட்டாலொழிய கௌசல்யா, கார்த்திக்கை மணக்க வலுவானதொரு காரணம் இல்லை. படத்தின் பின்பகுதியில் வரும் சொத்துப் பிரிப்பு - பத்திரப் பதிவுக் காட்சி அதற்கு உதவுகிறது.

சின்னச் சின்ன சிறுகதைகளாக ஒவ்வொரு காட்சியையும் ஒரு டெய்லரின் லாகவத்துடன் அளந்து தைத்திருக்கிற இயக்குநர், கிளைமாக்ஸை அத்தனை நாடகத்தனமாக வளர்த்திருப்பதைத் தவிர்த்திருக்கலாம்.

அப்புறம் கார்த்திக். மிகையில்லாமல் நடிக்கத் தெரிந்தவருக்கு மொழியைக் கையாள அவசியம் பயிற்சி தேவை. மொழிக் கொலையில் தொலைக் காட்சி அறிவிப்பாளர்களுக்கு எள்ளளவும் சளைத் தவரில்லை என்பதை மீண்டும் மீண்டும் நிரூபிக்கிறார்.

கௌசல்யாவுக்கு அதிகம் வசனமே இல்லை. அழகாகச் சிரிக்கிறார். அழும்போதும் சிரிக்கிறார்.

காதல் தியாகம் செய்கிற வேடங்களில் ஒரு டாக்டரேட் அளவுக்குத் தேறிவிட்ட ஹீராவுக்கு இதிலும் அதே வேடம். தனியாகச் சொல்ல என்ன உள்ளது? தியாகிக்கு ஒரு விருதென்றால் தயங்காமல் அது ஹீராவுக்கே.

இனிமைக்கு இரண்டு பாடல்கள். 'ஒரு பூ எழுதும் கவிதை' ரீங்கரிக்கும் ரகம்.

ஆனால், அலங்காரச் சொற்களின் ஆதிக்கத்திலிருந்து வைரமுத்து எப்போது விடுபடப் போகிறார் என்று தெரியவில்லை. வார்த்தைகளின் ஆடம்பர அணிவகுப்புக்குப் பின்னால் அர்த்தம் தேடித் தனியே ஒரு நடைபயணம் போக வேண்டியிருக்கிறது.

மிகச் சிறந்த படம் என்கிற அந்தஸ்தைப் பெற்றிருக்க வேண்டியது. மசாலாக் கலப்பினால், நல்ல படம் என்று மட்டுமே சொல்ல வேண்டியிருக்கிறது. ●

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

